அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ ஶ்ரீ: ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஶ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ उपदेशसाहस्री ॥

## (गद्यप्रबन्धः)

# உபதே³ஶ ஸாஹஸ்ரீ

(க³த்³ய ப்ரப³ந்த⁴:)

ஶ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஶ்ரீரங்கம்.
1965



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத்தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளிய கிரந்தங்களில் **உபதே³ஶ ஸாஹஸ்ரீ**, என்ற பிரகரணத்துக்கு வழக்கம் போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளிய வேதாந்த ப்ரகரணங்களில் **உபதே³ஶ ஸாஹஸ்ரீ** ஒன்று. இது கத்ய ப்ரபந்தம், பத்யப்ரபந்தம் என்று இரண்டாக பிரிக்கப் பட்டு உள்ளது. கத்யப்ரபந்தத்தில் 116 வாக்யங்களும் பத்ய ப்ரபந்தத்தில் 671 சுலோகங்களும் உள்ளன. இரண்டிலும் சேர்ந்து 787 உபதேசங்கள் உள்ள போதிலும் அநேகம் என்ற அர்த்தத்தில் **'உபதே³ஶ ஸாஹஸ்ரீ'** என்றே பெயர் வழக்கில் ஏற்பட்டுள்ளது. இதில் கத்யபாகம் மட்டும் வழக்கம் போல் பதவுரை கருத்துரைகளுடன் இதில் பிரசுரிக்கப்பட்டு உள்ளது. இதே ரீதியில் பத்யபாகமும் பின்னல் வெளி வரும் இந்நூலில் காணும் விஷயங்களின் ஸாரம் முதலில் காட்டப்பட்டுள்ளது. விஷய அட்டவணையும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது ஸ்ரீ சங்கர கிருபா பத்திரிகையில் தொடர்ச்சியாக வந்து இப்பொழுது தனிப் புஸ்தகமாக வெளிவந்துள்ளது.

இந்நூலுக்குப் பதவுரையும் விரிவான கருத்துரையும் எழுதித்தந்துதவிய நம் சங்கர கிருபா உதவி ஆசிரியர் வியாகரணசிரோமணி, வேதாந்த வித்வான் ப்ரஹ்ம ஸ்ரீ **K.S. வெங்கடராம சாஸ்திரிகள்** அவர்களுக்கு நம் கிருதஜ்ருதையைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாள் அவதரித்த புண்ய ஸ்தலமான காலடி க்ஷேத்திரத்தில் விச்வாவஸு வருஷம் சித்திரை மாதம் நடைபெற்ற ஸ்ரீ சங்கரஜயந்தீ மஹோத்ஸ்வத்தில் ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீஜகத்குரு அவர்களும் ஸ்ரீ துவாரகா ஜகத்குரு அவர்களும் ஸ்ரீபுரி ஜகத்குரு அவர்களும் விஜயம் செய்துள்ள சமயம் சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ மஹா ஸந்நிதானம் அவர்களின் திவ்ய சரணாரவிந்தங்களில் இம் மலர் ஸமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக் கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

# விஷயானுக்ரமணிகை

# உபதே³ஶ ஸாஹஸ்ரீ ஸாரம்.

(வசனப் பகுதி)

வேதாந்தம் என்று கூறப்படும் உபநிஷத்துக்களுக்கும், அவைகளின் தாத்பர்யத்தைத் தீர்மானிக்க வியாஸரால் அருளப்பட்ட ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கும், பாஷ்யமியற்றியும் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாளுக்கு மனதில் ஸமாதானம் ஏற்படவில்லை. ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்துகொள்ளாததால் ஸம்ஸாரஸாகரத்தில் தத்தளிக்கும் மாந்தர்களை எப்படியாவது கரைசேர்த்துப் பேரானந்த நிலையில் வைப்பதற்காக ஆசார்ய ரூபமாக அவுதரித்த கருணாமூர்த்தி யல்லவா பகவத்பாதர்! அவர் இயற்றிய பாஷ்யத்தின் உதவியைக்கொண்டு ஒருவாறு உபநிஷத்தின் பொருளைத் தெரிந்து கொண்டபோதிலும் அவைகளால் மட்டும் ஸாமான்ய அதிகாரிகளுக்கு ஆத்மானுபவம் ஏற்படுவதில்லை. உபநிஷத்துக்கள் மிகவும் விரிவாக இருப்பதாலும் பற்பல விஷயங்களைப்பற்றிப் பேசுவதாலும் அவைகளின் கருத்தைக் கண்டுபிடிப்பது யாவருக்கும் ஸுலபமன்று. மிக்க சிரமப்பட்டு உபநிஷத்துக்களின் கருத்தைத் தெரிந்து கொண்டாலும் கூட இவ்விஷயத்தில் பற்பல ஸந்தேஹங்கள் எழக்கூடுமாதலால், அனுபவத்தில் காணும் பலவித யுக்திகளைக் கொண்டு அவைகளைப் போக்கிக் கொண்டால்தான் நமக்கு நிர்ணயம் ஏற்பட்டு ஆத்மானுபவம் ஏற்படும். இதையே தான்

**श्रोतव्यः श्रुतिवाक्येभ्यः मन्तव्यश्चोपपत्तिभिः**

**ஶ்ரோதவ்ய: ஶ்ருதிவாக்யேப்⁴ய: மந்தவ்யஶ்சோபபத்திபி⁴:**

“உபநிஷத் வாக்யங்களைக்கொண்டு ஆத்ம தத்வத்தை விசாரித்துப் பிறகு யுக்திகளைக் கொண்டு மனனம் செய்யவேண்டும்" என்று பெரியோர்கள் சொல்வார்கள். இதற்காகத்தான் பரம கிருபாநிதியான ஆசார்யாள் அநேகம் பிரகரண நூல்களை இயற்றியுள்ளார்கள். இவைகளெல்லாம் நம் மனதில் எழும் ஸந்தேஹங்களைப் போக்கி உபநிஷதர்த்தத்தை நிர்ணயித்து ஆத்மானுபவமேற்பட உதவியாக உள்ளவை. இவைகளில் **உபதே³ஶ ஸாஹஸ்ரீ** என்னும் பிரகரணத்தைப்பற்றிச் சிறிது ஆராய்வோம்.

இது இரண்டு பாகமாக அமைந்துள்ளது. முன் பாகம் வசன நடையிலும் பின் பாகம் சுலோக ரூபமாகவும் உள்ளது. உண்மையில் இரண்டும் வெவ்வேறான தனித் தனி நூல்களாகத்தான் காணப்படுகின்றன. ஒன்றின் தொடர்ச்சி மற்றொன்றில் காணப்படவில்லை. ஒரே ஆத்ம தத்வத்தை வெவ்வேறு விதமாக விரிவாகவும் சுருக்கியும் கூறும் பல உபநிஷத்துக்களும் தனித்தனி நூலாக இருப்பது போல் இவையும் தனித்தனி நூல்களே.

கத்யப் பிரபந்தத்தில் கடைசி பதத்தை இருதடவை சொல்லி நூலை உபஸம்ஹாரம் செய்து பிறகு தனியாக மங்களாசரணத்துடன் பத்ய ப்ரபந்தத்தை ஆரம்பிக்கிறார். பத்ய ப்ரபந்தத்தின் ஆரம்பத்தில் உபோத்காத பிரகரணம் காணப்படுகிறது.

பிரஹ்மதத்வமானது மிகவும் ஸூக்ஷ்மமாகவும் புத்திக்கு எட்டாததாகவுமிருப்பதால் நன்கு புரிவதற்காக கதைகள் மூலமும், கேள்வி பதில் ஸம்வாத ரூபமாகவும் உபநிஷத்துக்கள் பல இடங்களில் உபதேசிக்கின்றன.

**शिष्याचार्यप्रश्न-**
**प्रतिवचनरूपेण कथनं तु सूक्ष्मवस्तुविषयत्वात् सुखप्रतिपत्तिकारणं भवति । ...**
**कश्चित् गुरुं ब्रह्मनिष्ठं विधिवदुपेत्य प्रत्यगात्मविषयादन्यत्र शरणमपश्यन् अभयं नित्यं शिवमचलमिच्छन् पप्रच्छेति कल्प्यते**

**ஶிஷ்யாசார்யப்ரஶ்ன-**
**ப்ரதிவசனரூபேண கத²னம் து ஸூக்ஷ்மவஸ்துவிஷயத்வாத் ஸுக²ப்ரதிபத்தி காரணம் ப⁴வதி । ...**
**கஶ்சித் கு³ரும் ப்³ரஹ்மநிஷ்ட²ம் விதி⁴வது³பேத்ய ப்ரத்யகா³த்மவிஷயாத³ன்யத்ர ஶரணமபஶ்யன் அப⁴யம் நித்யம் ஶிவமசலமிச்ச²ன் பப்ரச்சே²தி கல்ப்யதே**

என்று கேனோபநிஷத் பாஷ்யத்தின் ஆரம்பத்தில் காணப்படுகிறது. அதிலும் ஒரு சிஷ்யன் ஆசார்யனிடம் சென்று எவ்வாறு தன் ஸந்தேஹங்களைக் கேட்க வேண்டும் என்பதையும், அவன் ஸந்தேஹங்களைப் போக்கி ஆசார்யர் உபதேசிக்க வேண்டிய முறைகளையும் இந்த கத்ய பிரபந்தத்தில் விளக்குகிறார்.

**अथ मोक्षसाधनोपदेशविधि व्याख्यास्यामः**

**அத²  மோக்ஷஸாத⁴னோபதே³ஶவிதி⁴ வ்யாக்²யாஸ்யாம:**

(மிகவும் விரிவான பல நூல்களை இயற்றிய பிறகு, முக்திக்கு ஸாதனமான ஆத்ம தத்வஞானத்தை சிஷ்யனுக்கு உபதேசிக்க வேண்டிய முறையைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் கூறுகிறோம்) என்று இந்நூலை ஸ்ரீபகவத்பாதர் ஆரம்பிக்கிறார். பிறகு சிஷ்யனுடைய லக்ஷணங்களையும் ஆசார்யனின் லக்ஷணங்களையும் விரிவாகக் கூறி சிஷ்யனை நன்கு பரீக்ஷித்து தன் உபதேசம் சிஷ்யனின் மனதில் நிலைத்து நிற்கும் வரை திருப்பித்திருப்பி உபதேசிக்கவேண்டுமென்கிறார்.

**"ब्रूयात् पुनः पुनः यावद्ग्रहणं दृढीभवति ।"**

**“ப்³ரூயாத் புன: புன: யாவத்³க்³ரஹணம் த்³ருடீ⁴ப⁴வதி ।"**

ஞானம் நிலைப்பதற்கு இடையூறுகளைப்போக்கி ஞான ஸாதனங்களை அனுஷ்டிக்க செய்து எவ்விதத்திலும் சிஷ்யனுக்கு அனுபவம் ஏற்படும்படி செய்வது ஆசார்யரின் கடமையாகும்.

**शिष्यस्य ज्ञानाग्रहणं च लिङ्गबुध्वा अग्रहणे हेतून्... तत्प्रतिपक्षः अपनयेत् ।**
**... ज्ञानोपाय सम्यग्ग्राह्येत् ।**

**ஶிஷ்யஸ்ய ஜ்ஞாநாக்³ரஹணம் ச லிங்க³பு³த்⁴வா அக்³ரஹணே ஹேதூன் ... தத்ப்ரதிபக்ஷ: அபனயேத் । ... ஜ்ஞானோபாய ஸம்யக்³க்³ராஹ்யேத் ।**

தான் உபதேசித்த விஷயத்தை சிஷ்யன் எவ்வாறு தெரிந்துகொண்டிருக்கிறுன் என்பதை அவன் வார்த்தையைக்கொண்டே பரீக்ஷித்து அதற்குத்தக்கபடி போதிக்க வேண்டும். அதாவது: -

உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளபடி ஆத்மாவின் லக்ஷணங்களை முதலில் விரிவாக உபதேசிக்கிறுர். அதன் பிறகு 'நீ யார்' என்று சிஷ்யனைக்கேட்கிறுர். சிறிது விவேகமுள்ள சிஷ்யன் சரீரத்தைக் காட்டிலும் வேறுகத் தன்னைக்கூறியபோதிலும் சரீரதர்மங்களையெல்லாம் தன்னிடமிருப்பதாகக் கூறுகிறுன். மேலும் பல கேள்விகளைக் கேட்டு அவன் கூறும் பதிலைக்கொண்டே அவன் நினைப்பது தவறு என்பதை அவனே உணரும்படி செய்கிறுர். உலக சிருஷ்டியைக்கூறி சரீரம் ஏற்படும் விதத்தையும் சரீராதிகளின் தன்மையையும் ஆத்மாவின் தன்மையையும் விவரித்து "நீ சரீராதிகளல்ல” என்பதை விளக்கிக் காட்டுகிறுர். பரமாத்மாவே உலகை சிருஷ்டித்து சரீரத்தையும் உண்டுபண்ணி அதில் தானே நுழைந்திருப்பதால் 'நீதான் அந்த பரமாத்மா' என்று உபதேசித்து, சிஷ்யன் கூறும் பலவித ஆக்ஷேபங்களுக்கும் அநேக சுருதி வாக்யங்களைக்கொண்டும் தகுந்த பல யுக்திகளைக் கொண்டும் ஸமாதானம் கூறுகிறுர். இவ்விஷயத்தில் பிரத்யக்ஷம், லோக வியவஹாரம், சாஸ்திர வியவஹாரம் இவைகளின் விரோதத்தை அவித்யையைக்கொண்டு பரிஹாரம் செய்கிறுர்.

இவ்விதமாக 'சிஷ்யாநுசாஸனம்' என்னும் முதல் பிரகரணத்தில் சரீராதிகளைக் காட்டிலும் வேறுன ஆத்மா ப்ரஹ்மமே என்று உபதேசித்துவிட்டு 'கூடஸ்தாத்வயாத்மபோதம்' என்ற இரண்டாவது பிரகரணத்தில் ஆத்மா கூடஸ்தனுகவும் அத்யனுகவும் இருப்பதால் ப்ரஹ்ம ஸ்வரூபனுக இருப்பதுதான் ஸ்வாபாவிகமென்றும் சரீராதி ஸம்பந்தமெல்லாம் அவித்யையால் நடுவில் தோன்றி மறைந்து விடுவதால் ஆத்மஸ்வரூபத்தில் சேர்ந்ததல்லவென்றும் கூறி அத்யாஸத்தையும் விவரித்து சிஷ்யனுடைய ப்ரமத்தைப் போக்கி நித்யோபலப்தி (அழிவற்ற ஞான) ரூபியும் அவஸ்தாத்ரய ஸாக்ஷியாகவுமிருக்கின்ற ஆத்மா கூடஸ்தன் ஒருவித தர்மமும் விகாரமும் அற்றவன் என்பதைக் காட்டி ஜீவ ப்ரஹ்மா பேதத்தை ஸ்தாபிக்கிறுர்.

இவ்வாறு ஸ்ரீஸத்குருவின் உபதேசத்தால் ஞானம் ஏற்பட்டும், அனுதிகாலமாக உள்ள பேத வாஸனையினுல் சப்தம் முதலான விஷயங்களை அனுபவிக்கும்பொழுது மனதிற்கு சலனம் ஏற்படுமானுல் அது நீங்கி ஆத்மதத்வ ஞானத்தில் மனம் ஒருமைப்படுவதற்காக 'பரிஸங்க்யானம்' என்ற மூன்றுவது பிரகரணத்தில் அபூர்வமான சில உபதேசங்கள் செய்கிறுர். சப்தம் முதலான விஷயங்களுக்கும் தமக்கும் ஒருவித ஸம்பந்தமுமில்லை யென்பதை பல யுக்திகளால் காட்டி இதை எப்பொழுதும் அநுஸந்தானம் செய்துவர வேண்டுமென்று உபதேசிக்கிறுர். உலக வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள யாவருமே மனதிற்கு அதிகத் துன்பமேற்படாமலிருக்க இதை அநுஸந்தானம் செய்யலாம்.

இவ்வாறு சிஷ்யன் கேட்கும் கேள்விகளுக்கு ஸமாதானமாக குருவின் பல உபதேசங்கள் அடங்கியிருப்பதால் **உபதே³ஶ ஸாஹஸ்ரீ** என்ற பெயர் ஏற்பட்டிருப்ப தாகத் தெரிகிறது. இதில் மூன்று பிரகரணங்கள் அடங்கிய கத்யப் பகுதியின் கருத்தை ஒருவாறு தெரிந்து கொண்டோம். ஆனாலும் பகவத்பாதாளுடைய ஸூக்தியின் ரஸத்தையும் மேலேகண்ட கருத்துக்களையும் இதன் தமிழ் விரிவுரை யில் நன்கு காணலாம்.

**K.S. வெங்கடராம சாஸ்திரி**

॥ श्रीः ॥

॥ ஸ்ரீ: ॥

# ॥ उपदेशसाहस्री ॥

# உபதே³ஶ ஸாஹஸ்ரீ

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

**अथ मोक्षसाधनोपदेशविधिं व्याख्यास्यामः ।**
**मुमुक्षूणां श्रद्दधानानां अर्थिनां अर्थाय ॥ १॥**

**அத² மோக்ஷஸாத⁴னோபதே³ஶவிதி⁴ம் வ்யாக்²யாஸ்யாம:**
**முமுக்ஷூணாம் ஶ்ரத்³த³தா⁴னானாம் அர்தி²னாம் அர்தா²ய ॥ 1॥**

| | | |
|---|---|---|
| **अथ** அத² | = | பிறகு, |
| **मुमुक्षूणां** முமுக்ஷூணாம் | = | மோக்ஷமடைய ஆவல்கொண்டவர்களும், |
| **श्रद्दधानानां** ஶ்ரத்³த³தா⁴னானாம் | = | (சாஸ்திரம் கூறும் விஷயத்தில்) நம்பிக்கை உள்ளவர்களும், |
| **अर्थिनां** அர்தி²னாம் | = | (இதை அறிய விருப்பமுள்ளவர்களுமான மனுஷ்யர்களின், |
| **अर्थाय** அர்தா²ய | = | உபகாரத்திற்காக, |
| **मोक्षसाधनोपदेशविधिं** மோக்ஷஸாத⁴னோபதே³ஶவிதி⁴ம் | = | முக்திக்கு உபாயமான ஞானத்தை உபதேசிக்கும் முறையை, |
| **व्याख्यास्यामः** வ்யாக்²யாஸ்யாம: | = | தெளிவாகக் கூறுகிறோம். |

ஸ்ரீ சங்கரபகவத்பாதர் உபநிஷத்துக்களுக்கும் ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கும் பாஷ்யங்களையும், மற்றும் பல விரிவான வேதாந்த நூல்களையும் இயற்றிய பிறகு, எல்லா உபநிஷத்துக்களின் ஸாரத்தையும் சுருக்கமாகவும் மிகத்தெளிவாகவும் காட்டி சிஷ்யனுக்கு சிரமமன்னியில் ஆத்மானுபவம் ஏற்படுவதற்காக இந்தச் சிறிய நூலை இயற்றுகிறார். ஆரம்பித்த நூல் இடையூறன்னியில் முடிவடைவதற்காக ஆரம்பத்தில் மங்களம் செய்வது என்ற பெரியோர்களின் ஸம்பிரதாயத்தை அனுஸரித்து ஸர்வ மங்களங்களையும் கொடுக்கும் **'अथ'** **'அத²'** என்ற பதத்துடன் நூலைத் துவக்குகிறார்.

**ओंकारश्चाथशब्दश्च द्वावेतौ ब्रह्मणः पुरा ।**
**कण्ठं भित्त्वा विनिर्यातौ तस्मान्माङ्गलिकावुभौ ॥**

**ஓங்காரஶ்சாத²ஶப்³த³ஶ்ச த்³வாவேதௌ ப்³ரஹ்மண꞉ புரா ।**
**கண்ட²ம் பி⁴த்த்வா விநிர்யாதௌ தஸ்மான்மாங்க³ளிகாவுபௌ⁴ ॥**

(ஓம்காரமும், 'அத' என்ற சப்தமும் முன்னால் ப்ரஹ்மத்தின் கழுத்திலிருந்து வெளிவந்தவை. ஆகையால் இவ்விரண்டும் மங்களத்தைக் கொடுப்பவை) என்பது ஸ்மிருதி வசனம். இந்நூலை வாசிப்பதில் ஊக்கமேற்படுவதற்காக முதல் வாக்யத்திலேயே விஷயம், பிரயோஜனம், ஸம்பந்தம், அதிகாரி (அநுபந்த சதுஷ்டயம்) என்ற நான்கையும் காட்டுகிறார். பந்தம் நீங்கி சுத்த ப்ரஹ்மமாக இருக்கும் நிலைதான் மோக்ஷமெனப்படும். ஆகவே ப்ரஹ்மம்தான் இந்நூலுக்கு விஷயம், ஞானத்தால் அக்ஞானமும் பந்தமும் நீங்கி ப்ரஹ்மத்தையடைவது பிரயோஜனம். நூல் அறிவிக்கிறது, விஷயம் அறியப்படுகிறது என்பது ஸம்பந்தம். கடைசியாக உள்ள அதிகாரியை (இந்நூலை அறிந்துகொள்ளத் தகுதியுள்ளவனை)

**मुमुक्षूणां श्रद्दधानानां अर्थिनां**

**முமுக்ஷூணாம் ஶ்ரத்³த³தா⁴னானாம் அர்தி²னாம்**

என்ற மூன்று பதங்களால் குறிப்பிடுகிறார். வேறு ஒன்றிலும் ஆசையில்லாமல் மோக்ஷத்தில் மட்டுமே விருப்பமுள்ள முமுக்ஷுக்கள் தான் இதில் தகுதி பெற்றவர்கள். வேறு பொருளில் கொஞ்சமாவது ஆசையிருந்தாலும் அவர்கள் அதிகாரிகளாக மாட்டார்கள். மேலும் இதில் கூறப்படும் விஷயத்தில் மாறாத விச்வாஸம் இருக்க வேண்டும். இதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற தீவ்ரமான ஆவல் இருக்க வேண்டும். ஆக முமுக்ஷை (வேறொன்றிலும் பற்றற்று மோக்ஷமடைவதில் மட்டும் அபிலாஷை), சிரத்தை, இதை அறிவதில் தீவ்ரமான இச்சை இவைகளுடன் கூடியவர்கள்தான் அதிகாரிகள். இதற்கு மாறாக விஷய ஆசையுள்ளவர்கள், சிரத்தையில்லாதவர்கள், அறிந்துகொள்ள வேணுமென்ற எண்ணமில்லாமல் தங்கள் பாண்டித்யத்தையே வெளிப்படுத்த விரும்புகிறவர்கள் இவர்கள் தகுதியற்றவர்கள். இவர்களுக்கு இந்நூலால் ஒருவித பிரயோஜனமும் ஏற்படாது. (1)

(அவதாரிகை) முதலில் சுருக்கமாகக் கூறியதையே அடுத்த வாக்யத்தால் விரிவாகக் கூறுகிறார்: -

**तदिदं मोक्षसाधनं ज्ञानं साधनसाध्यात् अनित्यात् सर्वस्मात् द्विरक्ताय त्यक्तपुत्रवित्तलोकैषणाय प्रतिपन्नपरमहंसपारिव्राज्याय शमदमदयादियुक्ताय शास्त्रप्रसिद्धशिष्यगुणसम्पन्नाय शुचये ब्राह्मणाय विधिवत् उपसन्नाय शिष्याय जातिकर्मवृत्तविद्याभिजनैः परीक्षिताय ब्रूयात् पुनःपुनः यावद्ग्रहणं दृढीभवति ॥ २॥**

**ததி³த³ம் மோக்ஷஸாத⁴னம் ஜ்ஞானம் ஸாத⁴னஸாத்⁴யாத் அநித்யாத் ஸர்வஸ்மாத் த்³விரக்தாய த்யக்தபுத்ரவித்தலோகைஷணாய ப்ரதிபன்னபரம**

**ஹம்ஸபாரிவ்ராஜ்யாய ஶமத³மத³யாதி³யுக்தாய ஶாஸ்த்ரப்ரஸித்³த⁴ஶிஷ் யகு³ணஸம்ம்பன்னய ஶுசயே ப்³ராஹ்மணாய விதி⁴வத் உபஸன்னய ஶிஷ்யாய ஜாதிகர்மவ்ருத்தவித்³யாபி⁴ஜனை: பரீக்ஷிதாய ப்³ரூயாத் புன:புன: யாவத்³க்³ ரஹணம் த்³ருடீ⁴ப⁴வதி ॥ 2॥**

| | | |
|---|---|---|
| **तत्** **தத்** | = | அந்த (வேறு கிரந்தங்களில் விரிவாகக் கூறப்பட்டதும்), |
| **इदं** **இத³ம்** | = | இந்த (இந்த நூலில் சுருக்கமாக கூறப்படப் போவதும்), |
| **मोक्षसाधनं** **மோக்ஷஸாத⁴னம்** | = | முக்திக்கு ஸாதனமுமான, |
| **ज्ञानं** **ஜ்ஞானம்** | = | தத்வ ஞானத்தை, |
| **साधनसाध्यात्** **ஸாத⁴னஸாத்⁴யாத்** | = | (கிருஷி, யாகம் முதலான) ஸாதனங்களால் ஸம்பாதிக்கப்படுவதும் (அதனாலேயே), |
| **अनित्यात्** **அநித்யாத்** | = | அழிந்துபோகக் கூடியதுமான, |
| **सर्वस्मात्** **ஸர்வஸ்மாத்** | = | (இவ்வுலகிலும் மேலுலகிலுமுள்ள) எல்லாவற்றிலிருந்தும், |
| **विरक्ताय** **விரக்தாய** | = | ஆசை நீங்கியவனும், |
| **त्यक्तपुत्रवित्तलोकैषणाय** **த்யக்தபுத்ரவித்தலோகைஷணாய** | = | மக்கள், பொருள், உலகம் இவைகளில் ஆசையை விட்டவனும், |
| **प्रतिपन्नपरमहंसपारिव्राज्याय** **ப்ரதிபன்னபரம ஹம்ஸபாரிவ்ராஜ்யாய** | = | 'பரமஹம்ஸ பாரிவ்ராஜ்ய' மென்னும் உயர்ந்த ஸந்யாஸாச்ரமத்தை ஸ்வீகரித்துக் கொண்டவனும், |
| **शमदमदयादियुक्ताय** **ஶமத³மத³யாதி³யுக்தாய** | = | சமம் (உட்புலனை அடக்குதல்) தமம் (வெளிப் புலன்களை அடக்குதல்) தயை முதலான வைகளுடன் கூடியவனும், |
| **शास्त्रप्रसिद्धशिष्यगुणसंम्पन्नाय** **ஶாஸ்த்ரப்ரஸித்³த⁴ஶிஷ் யகு³ணஸம்ம்பன்னய** | = | சிஷ்யனிடம் இருக்க வேண்டிய, சாஸ்திரங்களில் பிரஸித்தமான குணங்கள் நிறைந்தவனும், |
| **शुचये** **ஶுசயே** | = | உள்ளும் வெளியும் தூய்மைகொண்டவனும், |
| **ब्राह्मणाय** **ப்³ராஹ்மணய** | = | பிராஹ்மணனும், |
| **विधिवत्** **விதி⁴வத்** | = | சாஸ்திர முறைப்படி, |

**उपसन्नाय** = தன்னை அண்டியவனும்,

**உபஸன்னாய**

**जातिकर्मवृत्तविद्याभिजनैः** = ஜாதி - செய்கை - நடத்தை - கல்வி - குலம்

**ஜாதிகர்மவ்ருத்தவித்³யாபி⁴ஜனை:** இவைகளில் பரீக்ஷிக்கப்பட்டவனுமான,

**शिष्याय** = சிஷ்யனுக்கு,

**ஶிஷ்யாய**

**यावत् ग्रहणं दृढीभवति** = ஞானம் உறுதியாக நிலைபெறும்வரை,

**யாவத் க்³ரஹணம் த்³ருடீ⁴ப⁴வதி**

**पुनःपुनः** = திருப்பித்திருப்பி (ஆசார்யன்),

**புன:புன:**

**ब्रूयात्** = உபதேசிக்க வேண்டும்.

**ப்³ரூயாத்**

இங்கு ஆசார்யனுடைய கடமையைக் கூறி சிஷ்யனின் லக்ஷணங்களை விரிவாகக் கூறுகிறார். ஆசார்யன் தன்னை வந்தடைந்த சிஷ்யனுக்கு முக்திக்கு ஸாதனமான ஞானத்தை உபதேசிக்க வேண்டும். ஒருதடவை உபதேசித்தால் போதாது. சிஷ்யனின் மனதில் ஞானம் நிலைபெற்று ஆத்மானுபவம் ஏற்படும்வரை திருப்பித்திருப்பி பலவிதமாகவும் உபதேசம் செய்யவேண்டும். சிஷ்யன் ப்ரஹ்ம லோகம் வரையிலுள்ள போகங்களில் ஒன்றிலும் சிறிதும் பற்றில்லாதவனாகவும், புலனடக்கம், பொறுமை, சிரத்தை, ஒரே இடத்தில் மனதை நிலைநிறுத்துவது, பிராணிகளிடம் தயை, அன்பு, அநஸூயை, ஞானத்தில் ஆவல் முதலிய பல நற்குணங்கள் நிறைந்தவனாகவும் இருக்க வேண்டும். ஞானத்தையடைவதற்காக சிஷ்யன் குருவைத் தேடியடைந்து அவர் பாதங்களில் விழுந்து பிடித்துக் கொண்டு வணங்கி **अधीहि भगवः அதீ⁴ஹி ப⁴க³வ:** (உபதேசித்தருள வேண்டும்) என்ற மந்திரத்தைச் சொல்லி பிரார்த்திக்க வேண்டும். இதற்குத்தான் 'உபஸத்தி' அல்லது 'உபஸதநம்' என்று பெயர்.

**'तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम्'**

**'தத்³விஜ்ஞானார்த²ம் ஸ கு³ருமேவாபி⁴க³ச்சே²த் ஸமித்பாணி: ஶ்ரோத்ரியம் ப்³ரஹ்மநிஷ்ட²ம்'**

என்று முண்டக உபநிஷத்து உபதேசிக்கிறது. இப்பேற்பட்ட சிஷ்யனுடைய வைராக்யத்தையும், ஜாதி, கர்மா, ஆசாரம், கல்வி, குலம் முதலானவைகளையும் நன்கு பரீக்ஷித்து உத்தமாதிகாரி என்று தீர்மானமாகத் தெரிந்த பிறகுதான் உபதேசிக்க வேண்டும். உபதேசிக்க ஆரம்பித்து விட்டால் பிறகு சிஷ்யன் மனதில் ஞானம் நிலைத்து ஆத்ம அனுபவம் ஏற்படும்வரை பலவித வழிகளாலும் திருப்பித் திருப்பிப் பலதடவை உபதேசித்து அவனையும் தன்னைப் போல் ஞானியாக ஆக்கிவிடுவது ஆசார்யனுடைய முக்யமான கடமையாகும். **(2)**

## श्रुतिश्च--- 'परीक्ष्य लोकान् ...तत्त्वतो ब्रह्मविद्याम्' इति ।

**ஶ்ருதிஶ்ச--- 'பரீக்ஷ்ய லோகான் ... தத்த்வதோ ப்³ரஹ்மவித்³யாம்' இதி ।**

'பரீக்ஷய' என்று ஆரம்பித்து 'தத்வதோ ப்ரஹ்ம வித்யாம்' என்பது வரையிலுள்ள சுருதியும் (இதையே கூறுகிறது).

முண்டக உபநிஷத்தில் "பிராஹ்மணன் கர்மாவினுல் ஸம்பாதிக்கப்பெறும் உலக விஷய போகங்களை பரீக்ஷித்து (உண்மையையறிந்து) 'உலகில் நித்யமானது ஒன்றும் இல்லை. நித்யமான ப்ரஹ்மத்தையடைய விரும்பும் எனக்கு கர்மாவினுல் யாது பயன்? என்று பூர்ணமான வைராக்யத்தை அடையவேண்டும். அந்த பிரஹ்மத்தை அறிவதற்காக அவன் கையில் ஸமித்துக்களை எடுத்துக் கொண்டு சுரோத்ரியனும் ப்ரஹ்மநிஷ்டனுயுமுள்ள குருவையே அடையவேண்டும். புலன்களையும் மனதையும் நன்கு அடக்கி தன்னை உபஸத்தி பண்ணின, அந்த சிஷ்யனுக்கு அக்ஷர புருஷனை அறிவிக்கும் ப்ரஹ்ம வித்யையை குரு உபதேசிக்கவேண்டும்" என்ற வாக்யம் இதே அபிப்பிராயத்தைக் காட்டுகிறது. இந்த இடத்தில் முடிவில் பாஷ்யகாரர் கூறுகிறுர்: - 'முறைப்படி தன்னிடம் வந்து வேண்டும் சிஷ்யனை அவித்யை என்னும் பெரும் கடலிலிருந்து கரையேற்றுவது ஆசார்யனுக்கு ஓர் முக்கியமான கடமையாகும்.

## दृढगृहीता हि विद्या आत्मनः श्रेयसे सन्तत्यै च भवति । विद्यासन्ततिश्च प्राण्यनुग्रहाय भवति नौरिव नदीं तितीर्षोः ।

**த்³ருட⁴க்³ருஹீதா ஹி வித்³யா ஆத்மனः ஶ்ரேயஸே ஸந்தத்யை ச ப⁴வதி ।**
**வித்³யாஸந்ததிஶ்ச ப்ராண்யனுக்³ரஹாய ப⁴வதி நௌரிவ நதீ³ம் திதீர்ஷோः ।**

| | | |
|---|---|---|
| **दृढगृहीता** **த்³ருட⁴க்³ருஹீதா** | = | உறுதியாக அறிந்துகொள்ளப்பட்ட, |
| **विद्या हि** **வித்³யா ஹி** | = | ஞானமல்லவா, |
| **आत्मनः** **ஆத்மனः** | = | தன்னுடைய, |
| **श्रेयसे** **ஶ்ரேயஸே** | = | (முக்திஎன்னும்) சிரேயஸ்ஸுக்கும், |
| **सन्तत्यै** **ஸந்தத்யை** | = | சிஷ்யப்ரசிஷ்ய பரம்பரைக்கும் (உபகாரமாக), |
| **भवति** **ப⁴வதி** | = | ஆகிறது, |
| **नदीं** **நதீ³ம்** | = | நதியை, |

| | | |
|---|---|---|
| **तितीर्षोः** <br> **திதீர்ஷோ:** | = | கடந்து அக்கரை செல்லவிரும்புபவனுக்கு, |
| **नौरिव** <br> **நௌரிவ** | = | ஓடம் போல, |
| **विद्यासन्ततिश्च** <br> **வித்³யாஸந்ததிஶ்ச** | = | ஞானிகளின் பரம்பரையானது, |
| **प्राण्यनुग्रहाय** <br> **ப்ராண்யனுக்³ரஹாய** | = | பிராணிகளின் அநுக்ரஹத்தின் பொருட்டு, |
| **भवति** <br> **ப⁴வதி** | = | ஆகிறது. |

ஆசார்யன் சிஷ்யனுக்கு உபதேசம் செய்து தன்னைப் போல அவனையும் ஞானியாகச் செய்வதன் மூலம் அவனுக்கு மட்டுமல்ல, உலகிற்கே பேருதவி செய்தவனாக ஆகிறான். அந்த சிஷ்யனும் ஆசார்யனாக இருந்து மற்றொருவனுக்கு உபதேசம் செய்கிறான். இவ்வாறு குருபரம்பரையானது தாங்கள் கரையேறுவதுடன் மற்றவர்களையும் கரையேற்றுவிக்கிறது. ஒவ்வொரு ஆசார்யரும் தன் சிஷ்யனை ஆசார்யனாகச் செய்வதன்மூலம் இவ்வுலகில் ஞானி பரம்பரை மறைந்துபோகாமல் காப்பாற்றி வரவேண்டும்.

**शास्त्रं च – 'यद्यप्यस्मा इमामद्भिः परिगृहीतां धनस्य पूर्णां दद्यादेतदेव ततो भूयः' इति ।**

**ஶாஸ்த்ரம் ச - 'யத்³யப்யஸ்மா இமாமத்³பி⁴: பரிக்³ருஹீதாம் த⁴னஸ்ய பூர்ணாம் த³த்³யாதே³ததே³வ ததோ பூ⁴ய:'இதி ।**

| | | |
|---|---|---|
| **अस्मै** <br> **அஸ்மை** | = | இவருக்கு (ஆசார்யருக்கு,) |
| **अद्भिः** <br> **அத்³பி⁴:** | = | ஸமுத்திரங்களால், |
| **परिगृहीतां** <br> **பரிக்³ருஹீதாம்** | = | சூழப்பட்டதும், |
| **धनस्य पूर्णां** <br> **த⁴னஸ்ய பூர்ணாம்** | = | பணத்தால் நிரம்பியதுமான, |
| **इमां** <br> **இமாம்** | = | இந்த பூமியை, |
| **यद्यपि दद्यात्** <br> **யத்³யபி த³த்³யாத்** | = | (ஒருவன்) கொடுத்தாலும்கூட, |
| **एतदेव** <br> **ஏததே³வ** | = | இந்த ஞான தானம் தான், |

**ततः** = அதைவிட,

**தத:**

**भूयः** = மேலானது,

**பூ⁴ய:**

**इति शास्त्रं** = என்பது சாஸ்திரம்.

**இதி ஶாஸ்த்ரம்**

எல்லாவித ஐசுவர்யங்களுடன்கூட பூமண்டலம் முழுவதையும் கொடுத்தாலும்கூட முன் குறிப்பிட்ட சிஷ்ய குணங்களில்லாத அதிகாரிக்கு ஆத்ம வித்யையை உபதேசிக்கக் கூடாது. அந்த பூதானத்தைக் காட்டிலும் ஞானதானம் எவ்வளவோ மடங்கு மேலானது.

**अन्यथा च ज्ञानप्राप्त्यभावात् - 'आचार्यवान् पुरुषो वेद', 'आचार्याद्धैव विद्या विदिता', 'आचार्यः प्लावयिता', 'सम्यग्ज्ञानं प्लव इहोच्यते इत्यादिश्रुतिभ्यः, 'उपदेक्ष्यन्ति ते ज्ञानं,' इत्यादिस्मृतेश्च ॥ ३॥**

**அன்யதா² ச ஜ்ஞானப்ராப்த்யபா⁴வாத் - 'ஆசார்யவான் புருஷோ வேத³', 'ஆசார்யாத்³தை⁴வ வித்³யா விதி³தா', 'ஆசார்ய: ப்லாவயிதா', 'ஸம்யக்³ஜ்ஞானம் ப்லவ இஹோச்யதே இத்யாதி³ஶ்ருதிப்⁴ய:, 'உபதே³க்ஷ்யந்தி தே ஜ்ஞானம்,' இத்யாதி³ஸ்ம்ருதேஶ்ச ॥ 3॥**

**आचार्यवान्** = ஆசார்யனோடுகூடிய,

**ஆசார்யவான்**

**पुरुषः** = மனிதன்,

**புருஷ:**

**वेद** = அறிவான்,

**வேத³**

**आचार्यात्** = ஆசார்யரிடமிருந்து,

**ஆசார்யாத்**

**विदिता** = அறிந்து கொள்ளப்பட்ட,

**விதி³தா**

**विद्या एव** = ஞானம் தான்,

**வித்³யா ஏவ**

**साधिष्ठं प्रापत्** = நன்மையைக் கொடுக்கும்,

**ஸாதி⁴ஷ்ட²ம் ப்ராபத்**

**आचार्याः** = ஆசார்யன்,

**ஆசார்யா:**

| | | |
|---|---|---|
| **प्लावयिता** <br> **ப்லாவயிதா** | = | தாண்டிவைப்பான், |
| **सम्यग्ज्ञानं** <br> **'ஸம்யக்³ஜ்ஞானம்** | = | தத்துவஞானமானது, |
| **प्लवः** <br> **ப்லவ:** | = | ஓடம் (என்று), |
| **इहः** <br> **இஹ:** | = | இங்கு, |
| **उच्यते** <br> **உச்யதே** | = | சொல்லப்படுகிறது, |
| **इत्यादिश्रुतिभ्यः** <br> **இத்யாதி³ஶ்ருதிப்⁴ய:** | = | இதுமுதலான சுருதிகளாலும், |
| **ते** <br> **தே** | = | உனக்கு, |
| **ज्ञानं** <br> **ஞானம்** | = | ஞானத்தை, |
| **उपदेक्ष्यन्ति** <br> **உபதே³க்ஷ்யந்தி** | = | உபதேசிப்பார்கள், |
| **इत्यादिस्मृतेश्च** <br> **இத்யாதி³ஸ்ம்ருதேஶ்ச** | = | இதுமுதலான ஸ்மிருதியினுலும், |
| **अन्यथा** <br> **அன்யதா²** | = | வேறு விதமாக, |
| **ज्ञानप्राप्त्यभावात्** <br> **ஞானப்ராப்த்யபா⁴வாத்** | = | ஞானத்தை அடைய முடியாததால். |

சுருதிகளும் ஸ்மிருதிகளும் ஆசார்யனிடமிருந்தே ஞானத்தைப் பெறவேண்டுமென்று வற்புறுத்திக் கூறுகின்றன. எவ்வளவு புத்திமானுயிருந்தாலும் ஆசார்ய உபதேசமில்லாமல் தன் புத்தி பலத்தாலோ, தானுக கிரந்தங்களைப் பார்ப்பதாலோ வேறு எந்த வழியிலும் தத்வஞானம் அடைய முடியாது. ஆத்மானுபவமும் ஏற்படாது. ஆகையால் சிஷ்யகுணங்கள் யாவற்றையும் கைக்கொண்டு குருவைத் தேடியடைந்து முறைப்படி ஸேவித்து கிருபையால் அவர் உபதேசத்தால் தான் ஞானமடைந்து முக்தியடைய முடியும்.

**(அவதாரிகை)** பல தடவை உபதேசிப்பதுடன் சிஷ்யன் மனதில் உபதேசம் நிலைப்பதற்குச் செய்யவேண்டிய உபாயங்களைக் கூறுகிறுர்: -

**शिष्यस्य ज्ञानाग्रहणं च लिङ्गैः बुध्वा अग्रहणे हेतून् अधर्म-**
**लौकिकप्रमादनित्यानित्य विवेक विषयासंजातदृढपूर्व श्रतत्वलोक चिन्तावेक्षण-**

## जात्याद्यभिमानादीन् तत्प्रतिपक्षैः श्रुतिस्मृतिविहितैः अपनयेत् अक्रोधादिभिः अहिंसादिभिश्च यमैः ज्ञानाविरुद्धैश्च नियमैः ॥ ४ ॥

**ஶிஷ்யஸ்ய ஜ்ஞாநாக்³ரஹணம் ச லிங்கை³:**
**பு³த்⁴வா அக்³ரஹணே ஹேதூன் அதர்ம-**
**லௌகிகப்ரமாத³நித்யாநித்ய விவேக விஷயாஸஞ்ஜாதத்³ருட⁴பூர்வ**
**ஶ்ரதத்வலோக சிந்தாவேக்ஷண-**
**ஜாத்யாத்³யபி⁴மாநாதீ³ன் தத்ப்ரதிபக்ஷை: ஶ்ருதிஸ்ம்ருதிவிஹிதை:**
**அபனயேத் அக்ரோதா⁴தி³பி⁴:**
**அஹிம்ஸாதி³பி⁴ஶ்ச யமை: ஜ்ஞானாவிருத்³வைஶ்ச நியமை: ॥ 4 ॥**

**शिष्यस्य** = சிஷ்யனுக்கு,
**ஶிஷ்யஸ்ய**

**ज्ञानाग्रहणं च** = ஞானம் ஏற்படாததையும் (விபரீதமாகத் தெரிந்துகொண்டிருப்பதையும்),
**ஞாநாக்³ரஹணம் ச**

**लिङ्गैः** = (முகத்தின் அடையாளம், பேச்சு முதலிய) அடையாளங்களால்,
**லிங்கை³:**

**बुध्वा** = அறிந்துகொண்டு,
**பு³த்⁴வா**

**अग्रहणे** = ஞானம் ஏற்படாததற்கு,
**அக்³ரஹணே**

**हेतून्** = காரணமான,
**ஹேதூன்**

**अधर्म** = (முன்னால் செய்த) பாபம்,
**அதர்ம**

**लौकिक** = லௌகிக கார்யங்கள்,
**லௌகிக**

**प्रमाद** = கவனக் குறைவு,
**ப்ரமாத³**

**नित्यानित्य विवेक विषयासंजातदृढपूर्व श्रतत्व** = முன்னால் நன்கு கேட்டிருந்தும் இது நித்யம், இது அநித்யம் (இது சேதனம், இது அசேதனம், இது உண்மை, இது பொய்) என்று பிரித்துத் தெரிந்துகொள்ளும் விஷயத்தில் உறுதியான ஞானம் ஏற்படாமை,
**நித்யாநித்ய விவேக விஷயாஸஞ்ஜாதத்³ருட⁴பூர்வ ஶ்ரதத்வ**

**लोक चिन्तावेक्षण** = (தனக்கு உலகில் மதிப்பு ஏற்படுவதற்காக) உலக வியவஹாரங்களில் அதிகமாக ஈடுபடுவது,
**லோக சிந்தாவேக்ஷண**

**जात्याद्यभिमानादीन्** = ஜாதி, குலம், கல்வி முதலியனவற்றால் கர்வம் (இதனால் பிறரை அவமதித்தல்)
**ஜாத்யாத்³யபி⁴மாநாதீ³ன்**

முதலியவைகளை,

**तत्प्रतिपक्षैः** = அவைகளுக்கு எதிரிடையானதும்,

**தத்ப்ரதிபக்ஷை:**

**श्रुतिस्मृतिविहितैः** = ச்ருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் உபதேசிக்கப்

**ஶ்ருதிஸ்ம்ருதிவிஹிதை:** பட்டதுமான,

**अक्रोधादिभिः** = கோபங்கொள்ளாமை முதலியவைகளாலும்,

**அக்ரோதா⁴தி³பி⁴:**

**अहिंसादिभिः** = அஹிம்ஸை முதலிய,

**அஹிம்ஸாதி³பி⁴:**

**यमैश्च** = யமங்களாலும்,

**யமைஶ்ச**

**ज्ञानाविरुद्धैः** = ஞானத்திற்கு விரோதமில்லாத,

**ஞாநாவிருத்³தை:**

**नियमैश्च** = நியமங்களாலும்,

**நியமைஶ்ச**

**अपनयेत्** = போக்கடிக்க வேண்டும்.

**அபனயேத்**

## अमानित्वादिगुणं च ज्ञानोपायं सम्यग्ग्राहयेत् ॥ ५ ॥

**அமானித்வாதி³கு³ணம் ச ஜ்ஞானோபாயம் ஸம்யக்³க்³ராஹயேத் ॥ 5 ॥**

**ज्ञानोपायं** = ஞானத்திற்கு உபாயமான,

**ஞானோபாயம்**

**अमानित्वादिगुणं च** = அமானித்வம் முதலான குணங்களை,

**அமானித்வாதி³கு³ணம் ச**

**सम्यक्** = நன்கு,

**ஸம்யக்**

**ग्राहयेत्** = கைக்கொள்ளும்படி செய்யவேண்டும்.

**க்³ராஹயேத்**

ஆசார்யன் சிஷ்யனுக்கு ஆத்மதத்வ ஸம்பந்தமான விஷயங்களை உபதேசிப்ப தோடு நிற்காமல் தான் செய்யும் உபதேசம் சிஷ்யன் மனதில் நிலைபெறுகிறதா, சரியாகப் புரிந்துகொள்கிறனா என்பதை அவன் முக அடையாளத்திலிருந்தும் அவன் கூறும் பதிலிலிருந்தும் தெரிந்துகொள்ள வேண்டும். சிஷ்யன் மனதில் உபதேசம் நிலைபெறுமலோ, விபரீதமாகத் தெரிந்துகொண்டோ இருந்தால் அதன் இடையூறு களைக் கண்டுபிடித்து அவைகளைப் போக்கி ஞானம் ஏற்படுவதற்குவேண்டிய உபாய ங்களையும் அனுஷ்டிக்கும்படி செய்யவேண்டும். அவ்விடையூறுகளில் பாபத்தை ஈசுவர உபாஸனை செய்து போக்கும்படி செய்ய வேண்டும். யதிகளின் தர்மங்களை

உபதேசித்துக் கடைப் பிடிக்கச்செய்து கவனக்குறைவைப் போக்கவேண்டும். பலவித யுக்திகளைக் காட்டி நித்யாநித்ய விவேகம் நிலை பெறும்படி செய்யவேண்டும். தோஷங்களைக் காட்டி லோக வியவஹாரங்களில் ஈடுபடுவதை நிறுத்தவேண்டும். த்வம்பதார்த்தமான ஜீவஸ்வரூபத்தைக் காட்டி ஜாதி, குலம், வித்யை முதலியவைகளால் சரீரத்தை ஓட்டி ஏற்படும் அஹங்காரத்தைப் போக்கவேண்டும். பொதுவாக எல்லா தோஷங்களும் விலக அக்ரோதம் (கோபமில்லாமை) அகாமம் (ஒன்றிலும் ஆசையில்லாமை) முதலியவைகளையும் யமங்களையும், ஞானத்திற்கு இடைஞ்சலில்லாத நியமங்களையும் கைக்கொள்ளும்படி செய்யவேண்டும். அஹிம்ஸை, ஸத்யம், பிறர் பொருளைத்திருடாமலிருப்பது, ப்ரஹ்மசர்யம் வஸ்துக்களைச் சேர்க்காமலிருப்பது இவ்வைந்தும் யமங்கள் எனப்படும். உள்ளும் புறமும் தூய்மை, திருப்தி, தவம், மந்திரஜபம், ஈசுவர உபாஸனம் இவ்வைந்தும் நியமங்கள் எனப்படும். ஆனால் குரு சுச்ரூஷை, வேதாந்த விசாரம், உபதேசம் பெறுதல், ஞானம் இவைகளுக்கு இடைஞ்சலாய் உள்ள தீர்த்த யாத்திரை, சாந்த்ராயண உபவாஸம் முதலான நியமங்களை கைக்கொள்ளக்கூடாது.

இவ்வாறு ஞானத்தின் இடையூறுகளை அதற்கு எதிரிடையான குணங்களால் போக்கி ஞானத்திற்கு உபாயமாக கீதையில் கூறப்பட்ட அமானித்வம் முதலான குணங்களைக் கைக்கொள்ளும்படி செய்யவேண்டும். அவைகளாவன: - தற்புகழ்ச்சி, டம்பம், ஹிம்ஸை இவைகள் இல்லாமை, பொறுமை, நேர்மை, ஸத்குருஸேவை, உள்ளும் புறமும் தூய்மை, உறுதி, ஆத்மாவை (சரீரத்தை) அடக்குதல் (எங்கும் தன் இச்சைப்படி செல்வதைத் தடுத்து நல்வழியிலேயே நிலைநிறுத்தல்) விஷயங்களில் வைராக்யம், கர்வமின்மை, பிறப்பு இறப்பு, மூப்பு, வியாதி இவைகளில் துன்பம் என்னும் தோஷத்தை சிந்தித்தல், விஷயங்களில் ப்ரீதியின்மை, தனயன், மனைவி, வீடு முதலியவைகளில் ஈடுபடாதிருத்தல், இஷ்டமோ, அநிஷ்டமோ எது கிடைத்தாலும் எப்பொழுதும் மனதை ஒரே நிலையில் நிறுத்தி வைத்தல், ஈசுவரனிடம் மாறுபாட்டையாத அநந்யபக்தி, தனிமையான இடத்தில் இருத்தல், பாமர ஜனக்கூட்டத்தில் சேர ஆசையின்மை, ஆத்மாவைப்பற்றி அறிந்து கொள்வதில் ஈடுபடுதல், தத்வ ஞானத்தின் பயனான மோக்ஷத்தைப்பற்றி சிந்தித்தல் இவைகள் எல்லாம் ஞானத்திற்கு உபாயங்கள். இவற்றிற்கு எதிரிடையானவைகள் அஞானத்தை வளர்க்கும். கீதையில் 12 வது அத்யாயத்தில்

**'अद्वेष्टा सर्वभूतानां'**

**'அத்³வேஷ்டா ஸர்வபூ⁴தானாம்'**

என்று ஆரம்பித்து கூறப்பட்ட குணங்களையும் ஞானோபாயமாக சேர்த்துக்கொள்ள வேண்டும். இவைகளையெல்லாம் சிஷ்யனிடம் ஏற்படும்படி செய்து ஆசார்யர் உபதேசம் செய்தால் ஞானானுபவம் ஏற்படும். **(4-5)**

**(அவதாரிகை)** இவ்வாறு ஆசார்யருடைய கடமைகளைக்கூறிவிட்டு அவருடைய லக்ஷணத்தையும் உபதேசிக்கும் முறையையும் கூறுகிறார்: -

**आचार्यस्तु ऊहापोहग्रहणधारणशमदमदयानुग्रहादिसंपन्नः लब्धागमः दृष्टादृष्टभोगेषु अनासक्तः त्यक्तसर्वकर्मसाधनः ब्रह्मवित् ब्रह्मणि स्थितः अभिन्नवृत्तः दम्भदर्पकुहकशाठ्यमायामात्सर्यानृताहंकारममत्वादिदोषविवर्जितः केवलपरानुग्रह प्रयोजनः विद्योपयोगार्थी पूर्वमुपदिशेत् 'सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम्' 'यत्र नान्यत्पश्यति' 'आत्मैवेदं सर्वे' 'आत्मा वा इदमेक एवाग्र आसीत्' 'सर्वं खल्विदं ब्रह्म' इत्याद्याः आत्मैक्य-प्रतिपादनपराः श्रुतीः ॥ ६ ॥**

**ஆசார்யஸ்து ஊஹாபோஹக்3ரஹணதா4ரணஶமத3மத3த்3யானுக்3ரஹாதி3ஸம்பன்ன: லப்3தா4க3ம: த்3ருஷ்டாத்3ருஷ்டபோ4கே3ஷு அனாஸக்த: த்யக்தஸர்வகர்மஸாத4ன: ப்3ரஹ்மவித் ப்3ரஹ்மணி ஸ்தி2த: அபி4ன்னவ்ருத்த: த3ம்ப4 த3ர்பகுஹகஶாட்2யமாயாமாத்ஸர்யாந்ருதாஹங்காரமமத்வாதி3தோ3 ஷவிவர் ஜித: கேவலபரானுக்3ரஹ ப்ரயோஜன: வித்3யோபயோகா3ர்தீ2 பூர்வமுபதி3ஶேத் 'ஸதே3வ ஸோம்யேத3மக்3ர ஆஸீத் ஏகமேவாத்3விதீயம்' 'யத்ர நான்யத்பஶ்யதி' 'ஆத்மைவேத3ம் ஸர்வே' 'ஆத்மா வா இத3மேக ஏவாக்4ர ஆஸீத்' 'ஸர்வ க2ல்வித3ம் ப்3ரஹ்ம' இத்யாத்3யா: ஆத்மைக்ய-ப்ரதிபாத3னபரா: ஶ்ருதீ: ॥ 6 ॥**

| | | |
|---|---|---|
| **आचार्यस्तु** | = | ஆசார்யனோவெனில், |
| **ஆசார்யஸ்து** | | |
| **ऊह** | = | (சிஷ்யன் நேரிடையாகக் கேட்காததையும், |
| **ஊஹ்** | | அவன் புரியும்படியான யுக்திகளையும்) ஊஹிக்கும் திறமை, |
| **अपोह** | = | அவனுடைய விபரீத ஞானத்தைப்போக்கும் |
| **அபோஹ்** | | திறமை, |
| **ग्रहण** | = | சிஷ்யனுடைய கேள்விகளையும் ஆக்ஷேபங்களை |
| **க்3ரஹண** | | யும் உடனேயே புரிந்துகொள்ளும் ஸாமர்த்யம், |
| **धारण** | = | புரிந்துகொண்டதை பின்னால் பதில் சொல்லும் |
| **தா4ரண** | | பொழுது ஞாபகப்படுத்திக் கொள்வது, |
| **शम** | = | மனதை அடக்குதல், |
| **ஶம** | | |
| **दम** | = | வெளிப்புலன்களை அடக்குதல், |
| **த3ம** | | |
| **दया** | = | இரக்கம், |
| **த3யா** | | |
| **अनुग्रहादिसंपन्नः** | = | அனுக்ரஹம் முதலியவைகளுள்ளவராகவும், |
| **அனுக்3ரஹாதி3ஸம்பன்ன:** | | |
| **लब्धागमः** | = | (தன் குருவினிடமிருந்து) ஞானோபதேசம் |
| **லப்3தா4க3ம:** | | பெற்றவராகவும், |

**दृष्टादृष्टभोगेषु** = இவ்வுலகிலும் மேலுலகிலும் உள்ள

**த்3ருஷ்டாத்3ருஷ்டபோ4கே3ஷு** போகங்களில் ஆசையற்றவராகவும்,

**त्यक्तसर्वकर्मसाधनः** = எல்லா கர்மாக்களுக்கும் ஸாதனமான பணம்,

**த்யக்தஸர்வகர்மஸாத4ன:** மனைவி, சிகை, யஜ்ஞோபவீதம் முதலியவைகளை தியாகம்செய்தவனும்,

**ब्रह्मवित्** = ப்ரஹ்மத்தை அறிந்தவனும்,

**ப்3ரஹ்மவித்**

**ब्रह्मणि स्थितः** = ப்ரஹ்மத்திலேயே இருப்பவனும் (அதாவது

**ப்3ரஹ்மணி ஸ்தி2த:** நானே ப்ரஹ்மம் என்ற அபரோக்ஷானுபவத்தை யடைந்தவனும்),

**अभिन्नवृत्तः** = சிஷ்டாசாரத்தை மீறுதவனும்,

**அபி4ன்னவ்ருத்த:**

**दम्भ** = டம்பம் (வெளிவேஷம்),

**த3ம்ப4**

**दर्प** = திமிர்,

**த3ர்ப**

**कुहक** = பிறரை வஞ்சித்தல்,

**குஹக**

**शाठ्य** = ரஹஸ்யமாகத் தீங்கு செய்தல்,

**ஶாட்2ய**

**माया** = பிறரை மயங்கவைத்தல்,

**மாயா**

**मात्सर्य** = பிறரிடம் தோஷங்களை ஆரோபம் செய்தல்,

**மாத்ஸர்ய**

**अनृत** = பொய்,

**அந்ருத்**

**अहंकार** = தானென்ற கர்வம்,

**அஹங்கார்**

**ममत्वादि** = தன்னுடையது என்ற அபிமானம் இதுமுதலான,

**மமத்வாதி**

**दोषविवर्जितः** = தோஷங்களற்றவனும்,

**தோ3ஷவிவர்ஜித:**

**केवलपरानुग्रह प्रयोजनः** = பிறருக்கு அநுக்ரஹம் செய்வது (ஸம்ஸார

**கேவலபரானுக்3ரஹ் ப்ரயோஜன:** ஸாகரத்திலிருந்து கடைத்தேற்றுவது) ஒன்றையே பிரயோஜனமாகக் கொண்டவனும்,

**विद्योपयोगार्थी** = (தன்னிடமுள்ள) ஞானத்தை விநியோகம்
**வித்³யோபயோகார்²தீ²** செய்வதில் விருப்பமுள்ளவனுகவும் இருப்பான்,

இந்த ஆசார்யர்,

**[1]सदेव सोम्य इदं अग्रे आसीत् एकं एव अद्वितीयं**

**[1]ஸதே³வ ஸோம்ய இத³ம் அக்³ரே ஆஸீத் ஏகம் ஏவ அத்³விதீயம்**

- ஸிருஷ்டிக்கு முன் இந்த பிரபஞ்சமெல்லாம் இரண்டற்ற ஒரே ஸத் வஸ்துவாகவே இருந்தது.

**[2]यत्न नान्यत् पश्यति**

**[2]யத்ன நான்யத் பஶ்யதி**

- எதில் வேறு ஒன்றையும் பார்க்கவில்ஐலயோ (அது பூமா)

**[3]आत्मैव इदं सर्व**

**[3]ஆத்மைவ இத³ம் ஸர்வ**

- இது எல்லாம் ஆத்மாதான்.

**[4]आत्मा वा इदं एक एवाग्र आसीत्**
**[4]ஆத்மா வா இத³ம் ஏக ஏவாக்³ர ஆஸீத்**

ஸிருஷ்டிக்கு முன் இப்பிரபஞ்சமெல்லாம் ஒரே ஆத்மவஸ்துவாகவே இருந்தது.

**[5]सर्वं खल्विदं ब्रह्म**

**[5]ஸர்வம் க²ல்வித³ம் ப்³ரஹ்ம**

- இது எல்லாம் பிரஹ்மம்

**इत्याद्याः இத்யாத்³யா:** இது முதலான
**आत्मैक्यप्रतिपादनपराः ஆத்மைக்யப்ரதிபாத³னபரா:-** ஆத்மாவின் ஒருமையை விளக்கும்
**श्रुती ஶ்ருதீ** - சுருதிகஐள
**पूर्वं பூர்வம்** - முதலில்
**उपदिशेत् உபதி³ஶேத்** - உபதேசிக்க வேண்டும்.

[1].சாந். 6-2-1 [2]. சாந். 7-24 [3]. சாந். 7-25 [4] ஐதரேயம் 1-1 [5]. சாந். 3-14-1

சிஷ்யனுக்கு உபதேசம் செய்யும் ஆசார்யருக்கு முக்யமாக சிஷ்யன் மனத்தில் ஏற்படும் ஸந்தேஹங்களையும் அவன் கேட்கும் கேள்விகளையும் உடன் புரிந்துகொண்டு ஞாபகத்தில் வைத்துக்கொள்வதுடன் தகுந்த யுக்திகளைக் கொண்டு ஸமாதானம் சொல்லும் திறமையும் வேண்டும். பிறர் படும் துக்கத்தைக் கண்டு மனது பொறுக்காமல் தயவினால் அவனுக்கு அநுக்ரஹம் செய்யவேண்டும்.

### 'हिंलानुग्रहयोरनारम्भी' 'न व्याख्यानपरो यतिः'

### 'ஹிம்லானுக்³ரஹயோரனாரம்பீ⁴' 'ந வ்யாக்²யானபரோ யதி:'

(ஸன்யாஸி பிறருக்கு ஹிம்ஸையோ அநுக்ரஹமோ செய்யக்கூடாது பாடபிரவசன காரியத்தில் ஸந்யாஸி ஈடுபடக்கூடாது. என்ற தர்மசாஸ்திர வசனம் புகழ், லாபம், கௌரவம் இவைகளை உத்தேசித்து அவ்வாறு செய்வதைத் தடுக்கிறதே யொழிய கருணையினால் கைம்மாறு கருதாமல் சிஷ்யன் கடைத்தேறுவதற்காகச் செய்வதைத் தடுக்கவில்லை. ஆசார்யரும் குருவின் உபதேசத்தால் ஞானம் பெற்றவராக இருக்க வேண்டும். சாஸ்திர மரியாதையும் லோக மரியாதையும் மீறாமல் ஸதாசார ஸம்பன்னராக இருக்க வேண்டும். இப்படியில்லாவிட்டாலும் ஞானிக்கு ஒரு தோஷ முமில்லை. ஆனால் அந்த ஆசார்யனைப் பார்த்து அவ்விதமே சிஷ்யனும் நடந்து வீணாகக் கெட்டுப்போய் விடுவான். கீதையில் பகவான் 'நான் செய்யவேண்டியதோ அடையவேண்டியதோ ஒன்றுமில்லை. ஆனாலும் என் கடமையைச் சரிவரச் செய்து வருகிறேன். நான் செய்யா விட்டால் என்னைப்பார்த்து மற்றவரும் செய்யாமல் விட்டு விடுவார்கள். தனக்காக இல்லாவிட்டாலும் உலகத்திற்காக வாவது ஞானியும் கர்மாவைச் செய்யவேண்டும்' என்று உபதேசிக்கிறார். ஆகையால்தான்

### 'सद्विद्वान् उपसृप्यतां'

### 'ஸத்³வித்³வான் உபஸ்ருப்யதாம்'

என்று ஸ்ரீ பகவத்பாதர் உடதேசிக்கிறார். வேறு ஒன்றையும் எதிர்பாராமல் தனக்குக் கிடைத்த ஞானத்தை சரியான பாத்திரத்தில் விநியோகம் செய்யவேண்டியது ஒன்றையே கருதி உபதேசிக்கவேண்டும். ஸர்வத்தையும் த்யாகம் செய்யும்படி சாஸ்திரம் உபதேசிப்பதால் ஞானத்தையும் த்யாகம் செய்யவேண்டும். ஞானத்தின் பயனைத் தான் அடைந்துவிட்டபடியால் யோக்யனான சிஷ்யனுக்கு ஞானத்தை உபதேசிப்பதுதான் இங்கு ஞான த்யாகம் எனப்படும்.

இங்கு கூறியுள்ள ஆசார்ய லக்ஷணங்களைக்கொண்டு, இவ்வித லக்ஷண முள்ளவன்தான் ஞானி, மற்றவர் ஞானி அல்ல என்று தீர்மானிக்கக்கூடாது. ஞாநா நுபவம் ஏற்பட்ட மாத்திரத்திலேயே அவன் கிருதார்த்தனாகிவிட்டபடியால் அவனுக்கு ஒருவிதக் கட்டுப்பாடும் கிடையாது. ஆனால் சிஷ்யன், தான் கிருதார்த்தனாவதற்காக ஞானிகளுக்குள் இவ்வித லக்ஷணங்களுள்ள ஆசார்யனையே தேடியடையவேண்டும். ஆசார்யன், முதலில் எல்லாம் பிரஹ்ம ஸ்வரூபம் அது ஒன்றுதான் என்ற பொருளு ள்ள உபநிஷத் வாக்யங்களை உபதேசித்து அதன் தாத்பர்யத்தை விளக்கவேண்டும்.

கீழே காட்டிய சுருதிகளில் 'ஸத், பூமா, ஆத்மா, ப்ரஹ்ம' என்ற பதங்களெல்லாம் ஒரே ப்ரஹ்மவஸ்துவைக் குறிக்கின்றன. அந்த ப்ரஹ்மம் ஒன்றே உண்மையான பொருள். நாம் காணும் பிரபஞ்சமெல்லாம் அதைக் காட்டிலும் வேறு அல்ல, வாஸ்தவமல்ல என்ற கருத்தைத் தெரிவிக்கின்றன. **(6)**

**उपदिश्य च ग्राहयेद्ब्रह्मणो लक्षणम्, '[1]य आत्माऽपहतपाप्मा', [2]'यत्साक्षादपरोक्षाद्ब्रह्म', '[3]योऽशनायापिपासे', '[4]नेति नेति', '[5]अस्थूलमनणु', '[6]स एष नेति ', '[7]अदृष्टं द्रष्टृ', '[8]विज्ञानमानन्दम्', '[9]सत्यं ज्ञानमनन्तम्', '[10]अदृश्येऽनात्म्ये', '[11]स वा एष महानज आत्मा', '[12]अप्राणो ह्यमनाः', 'सबाह्याभ्यन्तरो ह्यजः', '[13]विज्ञानघन एव', '[14]अनन्तरमबाह्यम् ', '[15]अन्यदेव तद्विदितादथो अविदितात् ', '[16]आकाशो वै नाम' इत्यादिश्रुतिभिः ॥ ७॥**

**உபதி³ஶ்ய ச க்³ராஹயேத்³ப்³ரஹ்மணோ லக்ஷணம், '[1]ய ஆத்மா(அ)பஹதபாப்மா', '[2]யத்ஸாக்ஷாத³பரோக்ஷாத்³ப்³ரஹ்ம', '[3]யோ(அ)ஶனாயாபிபாஸே', '[4]நேதி நேதி', '[5]அஸ்தூ²லமனணு', '[6]ஸ ஏஷ நேதி', '[7]அத்³ருஷ்டம் த்³ரஷ்ட்ரு', '[8]விஜ்ஞானமானந்த³ம்', '[9]ஸத்யம் ஜ்ஞானமனந்தம்', '[10]அத்³ருஶ்யே(அ)னாத்ம்யே', '[11]ஸ வா ஏஷ மஹானஜ ஆத்மா', '[12]அப்ராணோ ஹ்யமன:', ஸ பா³ஹ்யாப்⁴யந்தரோ ஹ்யஜ:', '[13]விஜ்ஞானக⁴ன ஏவ', '[14]அனந்தரமபா³ஹ்யம்', '[15]அன்யதே³வ தத்³விதி³தாத³தோ² அவிதி³தாத்', 'ஆகாஶோ வை நாம' இத்யாதி³ஶ்ருதிபி⁴: ॥ 7॥**

---

([1]) சாந். 8-7-1. ([2]) பிருஹ. 3-4-1. ([3]) பிருஹ. 3.5.1. ([4]) பிருஹ 2-3-6 ([5]) பிருஹ 3-8-8 ([6]) பிருஹ.3-9-26. ([7]) பிருஹ 3-8-11. ([8]) பிருஹ.3-9-28 ([9]) ஆனந்தவல்லி. ([10]) ஆனந்த. 7. ([11]) பிருஹ. 4-4-22. ([12]) முண். 2-1-2 ([13]) பிருஹ - 2-4-12. ([14]) பிருஹ. 2-5-19 ([15]) கேந.1-3. ([16]) சாந். 8-14-1.

---

**उपदिश्य च** = (சுருதிகளைக்கொண்டு ஆத்மைக்யத்தை
**உபதி³ஶ்ய ச** முதலில்) உபதேசித்துவிட்டு (பிறகு),

**इत्यादिश्रुतिभिः** = (பின் காணும்) இது முதலான சுருதிகளால்,
**இத்யாதி³ஶ்ருதிபி⁴:**

**ब्रह्मणः** = பிரஹ்மத்தின்,
**ப்³ரஹ்மண:**

**लक्षणं** = லக்ஷணத்தை,
**லக்ஷணம்**

**ग्राहयेत्** = அறிவுறுத்தவேண்டும்,
**க்³ராஹயேத்**

அவையாவன: -

| | | |
|---|---|---|
| **य आत्माऽपहतपाप्मा** | = | பாபம், ஜரை, மிருத்யு, சோகம், பசி, தாகம் |
| **ய ஆத்மா(அ)பஹ தபாப்மா** | | இவைகளற்றதும் ஸத்யமான காம ஸங்கல்பங்கள் உள்ளதுமான ஆத்மாவைத் தேடி அறிந்துகொள்ள வேண்டும், |
| **यत्साक्षात् अपरोक्षात् ब्रह्म** | = | நேரிடையாக பிரத்யக்ஷமாக விளங்கும் ப்ரஹ்மம் |
| **யத்ஸாக்ஷாத் அபரோக்ஷாத் ப்³ரஹ்ம** | | எல்லாவற்றிற்கும் உள் இருக்கும் ஆத்மா. |
| **योऽशनायापिपासे** | = | அந்த ஆத்மாவுக்கு பசி, தாகம், சோகம், மோஹம், |
| **யோ(அ)ஶனாயாபிபாஸே** | | மூப்பு, மரணம் இவை கிடையாது, |
| **नेति नेति** | = | ப்ரஹ்மத்தில் ஒரு தர்மமுமில்லாததால் அதை |
| **நேதி நேதி** | | இதுவல்ல இதுவல்ல என்றுதான் உபதேசிக்க முடியும், |
| **अस्थूलं अनणु** | = | பருமனல்ல, சிறியது அல்ல, குட்டையுமல்ல, |
| **அஸ்தூ²லம் அனணு** | | நீளமுமல்ல இதுபோல் மற்ற ஒருவித தர்மமுமற்றது ப்ரஹ்மம், |
| **अदृष्टं द्रष्टृ** | = | ஒன்றுலும் பார்க்கப்படாதது, எல்லாவற்றையும் |
| **அத்³ருஷ்டம் த்³ரஷ்ட்ரு** | | பார்க்கிறது, |
| **विज्ञानं आनन्दं** | = | அறிவும் ஆனந்தமுமே வடிவாகக்கொண்டது. |
| **விஜ்ஞானம் ஆனந்த³ம்** | | |
| **सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म** | = | முக்காலமும் அழிவற்றது. சித்ரூபம், தேசம், |
| **ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் ப்³ரஹ்ம** | | காலம், வஸ்து இவைகளின் எல்லைக்கு உட்படாதது, |
| **अदृश्ये अनात्म्ये अनिरुक्ते** | = | அறியப்படாததும் சரீரமில்லாததும் சொல்ல |
| **அத்³ருஶ்யே அனாத்ம்யே அநிருக்தே** | | முடியாததும் ஆதாரமில்லாததுமான ப்ரஹ்மத்தில் நிலைநின்றவன் பயம் நீங்கப்பெற்று முக்தியடை கிறான். |
| **स वा एष महानज आत्मा** | = | இச்சரீரத்தைக்காட்டிலும் வேறான இவைகளை |
| **ஸ வா ஏஷ மஹானஜ ஆத்மா** | | பிரகாசப்படுத்துகிற ஸ்வயம் ஜ்யோதி ஸ்வரூபனான இந்த ஆத்மா மிகப்பெரியவன் பிறப்பு அற்றவன், |
| **अप्राणो हि अमनाः शुभ्रः सवाह्याभ्यन्तरः** | = | அக்ஷரமான பரமாத்மாவுக்கு பிராணனும் மனதும் கிடையாது. ஒளி வடிவமுள்ளவன். உள்ளும் |
| **அப்ராணோ ஹி அமனா: ஶுப்⁴ர: ஸவாஹ்யாப்⁴யந்தர:** | | வெளியும் எங்கும் இருப்பவன். |
| **विज्ञानघन एव** | = | ஞானமே ஸ்வரூபமாக உள்ளவன், |
| **விஜ்ஞானக⁴ன ஏவ** | | |
| **अनन्तरं अबाह्यं** | = | தன்னைக்காட்டிலும் வேறாக உள் |
| **அனந்தரம் அபா³ஹ்யம்** | | வெளியில்லாதவன், |

| | | |
|---|---|---|
| **अन्यदेव तद्विदितादथो अविदितादधि** | = | அறியப்பட்டவனுமல்ல அறியப்படாதவனுமல்ல, |
| **அன்யதே³வ் தத்³விதி³தாத்³தோ² அவிதி³தாத்³த்த³தி⁴** | | |
| **आकाशो वै नाम** | = | ஆகாசம் என்று கூறப்படும் ப்ரஹ்மம் |
| **ஆகாஶோ வை நாம** | | நாமரூபங்களைக்காட்டிலும் வேறு பட்டது. அவைகளை வெளிப்படுத்துவது. |

மேலே காட்டப்பட்ட சுருதி வாக்யங்களை அந்தந்த உபநிஷத்துக்களில் முன்னும் பின்னும் ஆராய்ந்து நன்கு பரிசீலித்தால் ப்ரஹ்மத்தின் லக்ஷணம் தெரிய வரும். ஸச்சிதானந்த ஸ்வரூபம். ஸ்வயம்பிரகாசம் வியாபகம். மாயையால் பிரபஞ் சமாகத்தோன்றுகிறது. சரீராதிகளோ, அவைகளின் தர்மங்களோ அற்றது. ஆகவே சுத்தமான ஆத்மாவே ப்ரஹ்மம். இந்த லக்ஷணங்களை உபதேசிப்பதன் மூலம் முதலில் சொன்ன ஆத்மைக்யம் நன்கு விளக்கப்படுகிறது. **(7)**

**(அவதாரிகை)** இவ்வாறு சுருதிகளைக்கொண்டு ப்ரஹ்ம லக்ஷணத்தை உபதேசித்து விட்டு ஸ்மிருதிகள் மூலமும் உபதேசிக்கவேண்டும் என்கிறர்: -

**स्मृतिभिश्च- '[1]न जायते म्रियते वा', '[2]नादत्ते कस्यचित्पापम्', '[3]यथाकाशस्थितो नित्यम्', '[4]क्षेत्रज्ञं चापि मां विद्धि', '[5]न सत्तन्नासदुच्यते', '[6]अनादित्वान्निर्गुणत्वात्', '[7]समं सर्वेषु भूतेषु', '[8]उत्तमः पुरुषस्त्वन्यः' इत्यादिभिः श्रुत्युक्तलक्षणाविरुद्धाभिः परमात्मासंसारित्वप्रतिपादनपराभिः तस्य सर्वेणानन्यत्व प्रतिपादनपराभिश्च ॥ ८॥**

**ஸ்ம்ருதிபி⁴ஶ்ச- '[1]ந ஜாயதே ம்ரியதே வா', '[2]நாத³த்தே கஸ்யசித்பாபம்', '[3]யதா²காஶஸ்தி²தோ நித்யம்', '[4]க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்³தி⁴', '[5]ந ஸத்தன் னஸது³ச்யதே', '[6]அநாதி³த்வாந்நிர்கு³ணத்வாத்', '[7]ஸமம் ஸர்வேஷு பூ⁴தேஷு', '[8]உத்தம: புருஷஸ்த்வன்ய:' இத்யாதி³பி⁴: ஶ்ருத்யுக்தலக்ஷணவிருத்³தா⁴பி⁴: பரமாத்மாஸம்ஸாரித்வப்ரதிபாத³னபராபி⁴: தஸ்ய ஸர்வேணனன்யத்வப்ரதிபாத³னபராபி⁴ஶ்ச ॥ 8॥**

([1]) **கீதை அத்**. 2-20 ([2]) 5-15, ([3]) 9-6, ([4]) 13-2, ([5]) 13-12 ([6]) 13-31, ([7]) 13-27, ([8]) 15-17

| | | |
|---|---|---|
| **न जायते म्रियते** | = | ஆத்மாவிற்குப் பிறப்பு இறப்பு முதலான |
| **ந ஜாயதே ம்ரியதே** | | விகாரம் கிடையாது; |
| **नादत्ते कस्यचित्** | = | பரமாத்மா ஒருவரின் பாபத்தையோ |
| **நாத³த்தே கஸ்யசித்** | | புண்ணியத்தையோ, ஏற்றுக்கொள்வதில்லை, |

| | | |
|---|---|---|
| **यथाकाशस्थितो नित्यं**<br>**யதா2காஶஸ்தி2தோ நித்யம்** | = | ஆகாசத்தில், எங்கும் எப்பொழுதும் ஸஞ்சரிக்கும் வாயு இருப்பதுபோல் எங்குமுள்ள என்னிடம் ஒட்டாமலேயே எல்லா பூதங்களும் இருக்கின்றன; |
| **क्षेत्रज्ञं चापि मां विद्धि**<br>**க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்3தி4** | = | எல்லா சரீரங்களிலுமிருக்கும் க்ஷேத்ரக்ஞனை ஜீவனை என் ஸ்வரூபமாக (பரமாத்ம ஸ்வரூபமாக) அறிந்து கொள்; |
| **न सत्तन्नासदुच्यते**<br>**ந ஸத்தன் னஸது3ச்யதே** | = | ப்ரஹ்மம் ஸத் என்றோ அஸத் என்றோ சொல்ல முடியாது. (இந்திரியங்களுக்கும் மனதிற்கும் எட்டாதது. அறியப்படும் வஸ்துவல்ல.); |
| **अनादित्वात् निर्गुणत्वात्**<br>**அநாதி3த்வாத் நிர்கு3ணத்வாத்** | = | பரமாத்மாவுக்குக் காரணமும் குணமுமில்லாததால் அழிவற்றது; |
| **समं सर्वेषु भूतेषु**<br>**ஸமம் ஸர்வேஷு பூ4தேஷு** | = | அழியக்கூடிய எல்லாப் பிராணிகளிடமும் ஒரே மாதிரியாக தான் அழியாமல் இருக்கும் பரமேசுவரனை அறிந்தவன்தான் உண்மையான ஞானி; |
| **उत्तमः पुरुषस्त्वन्यः**<br>**உத்தம: புருஷஸ்த்வன்ய:** | = | க்ஷரம் அக்ஷரம் இவ்விரண்டைக் காட்டிலும் வேறான பரமாத்மா உத்தம புருஷன் என்று சொல்லப்படுகிறான். |
| **इत्यादिभिः**<br>**இத்யாதி3பி4:** | = | இதுமுதலான, |
| **श्रुत्युक्तलक्षणाविरुद्धाभिः**<br>**ஶ்ருத்யுக்தலக்ஷணா விருத்3தா4பி4:** | = | உபநிஷத்தில் கூறப்பட்ட லக்ஷணத்திற்கு விரோதமில்லாததும், |
| **परमात्मासंसारित्वप्रतिपादनपराभिः**<br>**பரமாத்மாஸம்ஸாரித்வ ப்ரதிபாத3னபராபி4:** | = | தேஹாதிகளைக்காட்டிலும் மேலான ஆத்மா அஸம்ஸாரி என்பதை விளக்குகின்றதும், |
| **तस्य**<br>**தஸ்ய** | = | அந்த ஆத்மாவுக்கு, |
| **सर्वेण**<br>**ஸர்வேண்** | = | எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமான ப்ரஹ்மத்துடன், |
| **अनन्यत्वप्रतिपादनपराभि**<br>**அனன்யத்வப்ரதிபாத3னப்ராபி4** | = | வேறுபடாமல் ஒன்றுயிருக்கும் தன்மையைக் காட்டுகின்றதுமான, |
| **स्मृतिभिश्च**<br>**ஸ்ம்ருதிபி4ஶ்ச** | = | ஸ்மிருதிகளைக்கொண்டும், ப்ரஹ்மலக்ஷணத்தை சிஷ்யன் அறியும்படி செய்ய வேண்டும். |

உபநிஷத்துக்களின் மூலம் ப்ரஹ்மத்தின் லக்ஷணம் தெரிந்துகொண்டதை உறுதிப்படுத்துவதற்காக ஸ்மிருதிகளின் மூலமும் ப்ரஹ்ம லக்ஷணத்தை விளக்க வேண்டும். மேலே கீதையிலிருந்து சில வாக்யங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. இதேபோல் வேறு பல ஸ்மிருதிகளிலிருந்தும் வாக்யங்களைக்காட்டி ப்ரஹ்ம

லக்ஷணத்தை உபதேசிக்க வேண்டும். ஆனால் அந்த ஸ்மிருதிகள் உபநிஷத்திற்கு விரோதமாயிருக்கக்கூடாது. மேலும் தேஹாதி விலக்ஷணமான ஜீவனின் ஸ்வரூபத்தையும், அதுவும் ப்ரஹ்மமும் ஒன்று என்பதையும் விளக்கக்கூடியதாக இருக்க வேண்டும்.

**एवं श्रुतिस्मृतिभिः गृहीतपरमात्मलक्षणं शिष्यं संसारसागरादुत्तितीर्षुं पृच्छेत्- कस्त्वमसि सोम्येति ॥ ९ ॥**

**ஏவம் ஶ்ருதிஸ்ம்ருதிபி⁴: க்³ருஹீதபரமாத்மலக்ஷணம் ஶிஷ்யம் ஸம்ஸார ஸாக³ராது³த்திதீர்ஷும் ப்ருச்சே²த் - கஸ்த்வமஸி ஸோம்யேதி ॥ 9 ॥**

**एवं** = இவ்வாறு,
**ஏவம்**

**श्रुतिस्मृतिभिः** = ச்ருதிகளாலும் ஸ்மிருதிகளாலும்,
**ஶ்ருதிஸ்ம்ருதிபி⁴:**

**गृहीतपरमात्मलक्षणं** = ஆத்மாவின் லக்ஷணத்தை அறிந்து
**க்³ருஹீதபரமாத்மலக்ஷணம்** கொண்டவனும்,

**संसारसागरात्** = ஸம்ஸாரமென்னும் ஸமுத்திரத்திலிருந்து,
**ஸம்ஸாரஸாக³ராத்**

**उत्तितीर्षुं** = கரையேர விரும்புபவனுமான,
**உத்திதீர்ஷும்**

**शिष्यं** = சிஷ்யனை,
**ஶிஷ்யம்**

**पृच्छेत्** = கேட்கவேண்டும்,
**ப்ருச்சே²த்**

**सोम्य** = அப்பா!
**ஸோம்ய**

**त्वं** = நீ,
**த்வம்**

**कोऽसि** = யாராயிருக்கிறாய்,
**கோ(அ)ஸி**

**इति** = என்று.
**இதி**

இவ்வாறு முதலில் ஜீவப்ரஹ்மைக்யத்தைக் காட்டும் சுருதி வாக்கியங்களை உபதேசித்து இந்த வாக்கியங்களின் அர்த்தம் நன்கு விளங்குவதற்காக அநேகம் சுருதிகளாலும் ஸ்மிருதிகளாலும் சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தை சிஷ்யன் அறிந்து கொள்ளும்படி செய்யவேண்டும். இதற்குப் பிறகு தான் உபதேசித்த விஷயங்களை சிஷ்யன் ஸந்தேஹமோ, விபரீதமோ இல்லாமல் தெளிவாக நன்கு தெரிந்து

கொண்டு இருக்கிறுன் என்பதைப் பரீக்ஷிப்பதற்கும், பின்னல் மாறுமல் உறுதியான ஞானமேற்படுவதற்கும் சிஷ்யனிடம் 'நீ யார்' என்று ஆசார்யன் கேட்கவேண்டும். அவன் கூறும் பதிலிலிருந்து அவன் ஞானத்தைத் தீர்மானித்து அக்ஞானமோ, ஸந்தேஹமோ, விபரீதமோ இருந்தால் அதைப் போக்கவேண்டியது ஆசார்யனுடைய கடமை ஆகும். **(9)**

**स यदि ब्रूयात् - ब्राह्मणपुत्रः अदोन्वयः ब्रह्मचारी आसम्, गृहस्थो वा। इदानी अस्मि परमहंसपरिव्राट् संसारसागरात् जन्ममृत्युमहाग्राहात् उत्तितीर्षुः इति ॥ १० ॥**

**ஸ யதி³ ப்³ரூயாத் - ப்³ராஹ்மணபுத்ர: அதோ³ன்வய: ப்³ரஹ்மசாரீ ஆஸம், க்³ருஹஸ்தோ² வா । இதா³னீ அஸ்மி பரமஹம்ஸபரிவ்ராட் ஸம்ஸாரஸாக³ராத் ஜன்மம்ருத்யுமஹாக்³ராஹாத் உத்திதீர்ஷு: இதி ॥ 10 ॥**

**ब्राह्मणपुत्रः** = (நான்) பிராமணருடைய பிள்ளை,
**ப்³ராஹ்மணபுத்ர:**

**अदोन्वयः** = இன்ன வம்சத்தில் பிறந்தவன்,
**அதோ³ன்வய:**

**ब्रह्मचारी आसम्** = ப்ரஹ்மசாரியாக இருந்தேன்,
**ப்³ரஹ்மசாரீ ஆஸம்**

**गृहस्थो वा** = அல்லது கிருஹஸ்தனுக இருந்தேன்,
**க்³ருஹஸ்தோ² வா**

**इदानी** = இப்பொழுது,
**இதா³னீ**

**परमहंसपरिव्राट्** = பரமஹம்ஸ ஸந்யாஸியாகி,
**பரமஹம்ஸபரிவ்ராட்**

**जन्ममृत्युमहाग्राहात्** = பிறப்பு, இறப்பு என்னும் பெரிய முதலை,
**ஜன்மம்ருத்யுமஹாக்³ராஹாத்** அல்லது திமிங்கிலங்களுடன் கூடிய,

**संसारसागरात्** = ஸம்ஸாரக் கடலிலிருந்து,
**ஸம்ஸாரஸாக³ராத்**

**उत्तितीर्षुः** = கரையேர விருப்பமுள்ளவனுகவும்,
**உத்திதீர்ஷு:**

**अस्मि** = இருக்கிறேன்,
**அஸ்மி**

**इति** = என்று,
**இதி**

**सः** = அந்த சிஷ்யன்,
**ஸ:**

**यदि ब्रूयात्** = பதில் சொல்வானேயானுல்,
**யதி³ ப்³ரூயாத்**

**आचार्यो ब्रूयात् –**
**इहैव तव सोम्य मृतस्य शरीरं वयोभिरद्यते मृद्भावं वा**
**आपद्यते  तत्र कथं संसारसागरात् उद्धर्तुमिच्छसीति ।**
**नहि नद्याः अवरे कूले भस्मीभूते नद्याः पारं तरिष्यसीति ॥ ११ ॥**

**ஆசார்யோ ப்³ரூயாத் -**
**இஹைவ தவ ஸோம்ய ம்ருதஸ்ய ஶரீரம் வயோபி⁴ரத்³யதே ம்ருத்³பா⁴வம் வா**
**ஆபத்³யதே தத்ர கத²ம் ஸம்ஸாரஸாக³ராத் உது³த்³த⁴ர்துமிச்ச²ஸீதி ।**
**நஹி நத்³யா: அவரே கூலே ப⁴ஸ்மீபூ⁴தே நத்³யா: பாரம் தரிஷ்யஸீதி ॥ 11 ॥**

**सोम्य** = அப்பா!
**ஸோம்ய**
**मृतस्य** = இறந்த,
**ம்ருதஸ்ய**
**तव** = உன்னுடைய,
**தவ**
**शरीरं** = தேஹமானது,
**ஶரீரம்**
**इहैव** = இங்கேயே,
**இஹைவ**
**वयोभिः** = (கழுகு முதலிய) பக்ஷிகளால்,
**வயோபி⁴:**
**अद्यते** = தின்னப்படுகிறது,
**அத்³யதே**
**वा** = அல்லது,
**வா**
**मृद्भावं** = மண்ணின் தன்மையை,
**ம்ருத்³பா⁴வம்**
**आपद्यते** = அடைகிறது,
**ஆபத்³யதே**
**तत्र** = அதில்,
**தத்ர**
**कथं** = எவ்வாறு,
**கத²ம்**
**संसारसागरात्** = ஸம்ஸாரக்கடலிலிருந்து,
**ஸம்ஸாரஸாக³ராத்**

| | | |
|---|---|---|
| **उद्धर्तुं**<br>**உத்³த்⁴ர்தும்** | = | கடைத்தேற, |
| **इच्छसी**<br>**இச்ச²ஸீ** | = | விரும்புகிறுய், |
| **नद्या:**<br>**நத்³யா:** | = | நதியின், |
| **अवरे कूले**<br>**அவரே கூலே** | = | இக்கரை, |
| **भस्मीभूते**<br>**ப⁴ஸ்மீபூ⁴தே** | = | அக்கரையை, |
| **नद्या:**<br>**நத்³யா:** | = | கடந்துசெல்லப் போவது இல்ஜல, |
| **पारं**<br>**பாரம்** | = | என்று, |
| **न हि तरिष्यसी**<br>**ந ஹி தரிஷ்யஸீ** | = | ஆசார்யர், |
| **ब्रूयात्**<br>**ப்³ரூயாத்** | = | சொல்லவேண்டும். |

அஹம் (நான்) என்னும் பதத்திற்குப்பொருளாயுள்ளது தான் ஆத்மா. இதுவே ப்ரஹ்மம் என்பதை ஆசார்யர் பிரமாணங்கஜளக்காட்டி உபதேசித்தார். ஆஞலும் சரீராதிகளுடன் சேர்ந்தே ஆத்மா தோன்றுவதாலும் சரீராதிகஜளயே நான் என்று எண்ணிக்கொண்டிருப்பதாலும் முன்காட்டிய ஆசார்யரின் உபதேசத்தைப் புரிந்து கொள்ள முடியவில்ஜல. ஸ்தூலம், ஸூக்ஷமம், காரணம் என்ற மூன்றுவித சரீரங்க ளும் ஆத்மாவல்ல. நான் (அஹம்) என்ற பதத்திற்கு சரீர விலக்ஷணமான ஆத்மா தான் பொருள் என்று சரீராதிகஜள விலக்கி சுத்தமான ஆத்மஸ்வரூபத்தை தெரிந்து கொண்டால்தான் அதை ப்ரஹ்மஸ்வரூபமாக அறிந்துகொள்ளமுடியும். இதற்காக வேதான் ஆசார்யர் முதலில் சிஷ்யனுடைய ப்ரமத்தைப் போக்குவதற்காக, ஸ்தூல தேஹம் ஆத்மாவன்று என்பதை சிஷ்யன் தாஞகத் தெரிந்துகொள்வதற்காக, "நீ யார்" என்று கேட்டார். எல்லோரும் எண்ணிக்கொண்டிருப்பதுபோல் சிஷ்யனும் ஸ்தூல தேஹத்தையே ஆத்மாவென்று நிஜனத்து அதஜனச் சேர்ந்ததான வர்ணம், ஆச்ரமம் முதலான தர்மங்களுடன் கூடினவஞகத் தன்ஜனக் கூறுகிறுன். ஆஞலும் ஸம்ஸாரக் கடஜலக்கடந்து அக்கரை சேர்வதில் தனக்குள்ள விருப்பத்தையும் கூறுகிறுன். உடன் ஆசார்யர் ஸ்தூல தேஹம் ஆத்மாவல்ல என்பதை விளக்கிக்காட்டுகிறுர். அதாவது பிராஹ்மணன் என்றும் பிரஹ்மசாரி என்றும் கிருஹஸ்தன் என்றும், ஸன்யாஸி என்றும் கூறப்படுவது இந்த ஸ்தூல தேஹமே. ஜனங்களில்லாத நடுக்காட்டில் இறந்தால் ஸந்யாஸி தேஹம் பக்ஷிகளால் சாப்பிடப்படுகிறது. கிராமத்தில் மரணம் ஏற்பட்டால் சிஷ்யர்களால் புதைக்கப்பட்டு அந்த தேஹம் மண்ஞக ஆகிவிடுகிறது. மரணமோ தவிர்க்க முடியாதது. இரண்டு விதத்திலும் ஸ்தூல தேஹமென்ற ஆத்மா

| | | |
|---|---|---|
| ப்³ரஹ்ம தஸ்மாத்³வா | | ப்ரஹ்மஸ்வரூபமான ஆத்மாவிலிருந்து ஆகாசம் உண்டானது, |
| **तत् सृष्ट्वा तदेवानुप्राविशत्** | = | ப்ரஹ்மம் உலகை ஸிருஷ்டித்து அதற்குள் |
| **தத்ஸ்ருஷ்ட்வா ததே³வானுப்ராவிஶத்** | | நுழைந்தது, |
| **एको देवः सर्वभूतेषु गूढः** | = | எங்கும் நிறைந்த ஒரே தேவர் |
| **सर्वव्यापी** | | எல்லா பிராணிகளிடமும் |
| **ஏகோ தே³வ: ஸர்வபூ⁴தேஷு கூ³ட⁴: ஸர்வவ்யாபீ'** | | மறைந்திருக்கிறார். |
| **अशरीरं शरीरेषु** | = | சரீரங்களில் இருந்தபோதிலும் சரீரம் அற்றவர், |
| **அஶரீரம் ஶரீரேஷு** | | |
| **न जायते म्रियते** | = | ஆத்மா பிறக்கிறதும் இல்லை, இறக்கிறதும் இல்லை, |
| **ந ஜாயதே ம்ரியதே** | | |
| **स्वप्नान्तं जागरितान्तं** | = | ஸ்வப்னம், ஜாக்ரத் இரண்டையும் |
| **ஸ்வப்னாந்தம் ஜாக³ரிதாந்தம்** | | பிரகாசப்படுத்துகிறவர், |
| **स मे आत्मेति विद्यात्** | = | அவர் என் ஆத்மா என்று |
| **ஸ மே ஆத்மேதி வித்³யாத்** | | அறிந்துகொள்ளவேண்டும், |
| **यस्तु सर्वाणि भूतानि** | = | எல்லா பூதங்களையும் எவன் தன் ஸ்வரூபமாகப் |
| **யஸ்து ஸர்வாணி பூ⁴தானி** | | பார்க்கிறானோ, |
| **तदेजति तन्नैजति** | = | அந்த ஆத்ம தத்வம் உபாதிகளால் |
| **ததே³ஜதி தன்னைஜதி** | | சலிக்கிறது தானாக சலிக்கிறதில்லை, |
| **वेनस्तत्पश्यन्** | = | வேனன் எனும் கந்தர்வன் அந்த ப்ரஹ்ம |
| **வேனஸ்தத் பஶ்யன்** | | வஸ்துவே எல்லாமாக இருப்பதைப் பார்த்தான், |
| **तदेवाग्निः** | = | அக்னி, வாயு முதலான எல்லா |
| **ததே³வாக்³னி:** | | தேவதைகளும் அதுதான், |
| **अहं मनुरभवं सूर्यश्च** | = | நான் மநுவாகவும் ஸூர்யனாகவும் |
| **அஹம் மனுரப⁴வம் ஸூர்யஶ்ச** | | இருந்தேன், |
| **अन्तः प्रविष्टः शास्ता जनानाम्** | = | பிராணிகளின் உள்ளே நுழைந்து |
| **அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜனானாம்** | | அடக்கியாளுகிறது, |
| **सदेव सोम्य तत्सत्यं स** | = | இந்த பிரபஞ்சம் எல்லாம் ஸத்ஸ்வரூபமாகவே |
| **आत्मा तत्त्वमसि** | | இருந்தது. அதுவே உண்மைப் பொருள். அதுவே ஆத்மா. அதுவே நீ, |
| **इत्यादिश्रुतिभ्यः** | = | இது முதலான சுருதிகளாலும். |
| **இத்யாதி³ஶ்ருதிப்⁴ய:** | | (37) |

[1]. பிரு. 1-4-10, [2]. பிரு. 4-4-20, [3]. சா. 7-25, [4]. சா. 7-25, [5]. பிரு. 4-5-15, [6]. பிரச். 6-5, [7]. பிரி. 3-8-8, [8]. முண். 2-1-2, [9]. முண். 2-2-12, [10]. ஐத. 1-3-12, [11]. ஐத. 5-2, [12]. தைத். 2-1, [13]. தை. 2-6, [14]. சுவே. 6-11, [15]. கட. 2-22, [16]. கட. 2-18, [17]. கட. 4-4, [18]. கௌஷீ, 3-9, [19]. ஈசா. 6, **20**. ஈசா. 5, [21]. நாராயண. [22]. நாராயண. [23]. சா. 6-2, [24]. சா. 6-8.

**स्मृतिभ्यश्च - 'पूः प्राणिनः सर्वगुहाशयस्य', 'आत्मैव देवताः', 'नवद्वारे पुरे', 'समं सर्वेषु भूतेषु', 'विद्याविनयसम्पन्ने', 'अविभक्तं विभक्तेषु', 'वासुदेवः सर्वम् ' इत्यादिभ्यः एक एवात्मा परं ब्रह्म सर्वसंसारधर्मविनिर्मुक्तस्त्वमिति सिद्धम् ॥ ३८ ॥**

**ஸ்ம்ருதிப்⁴யஶ்ச - 'பூ: ப்ராணின: ஸர்வகு³ஹாஶயஸ்ய, 'ஆத்மைவ தே³வதா:', 'நவத்³வாரே புரே', 'ஸமம் ஸர்வேஷு பூ⁴தேஷு', 'வித்³யாவின யஸம் பன்னே', 'அவிப⁴க்தம் விப⁴க்தேஷு', 'வாஸுதே³வ: ஸர்வம்' இத்யாதி³ப்⁴ய: ஏக ஏவாத்மா பரம் ப்³ரஹ்ம ஸர்வஸம்ஸாரத⁴ர்மவிநிர் முக்தஸ்த்வமிதி ஸித்³த⁴ம் ॥ 38 ॥**

| | | |
|---|---|---|
| **प्राणिनः सर्वगुहाशयस्य**<br>**ப்ராணின: ஸர்வகு³ஹாஶயஸ்ய** | = | எல்லாப் பிராணிகளின் புத்தி என்னும் குஹையில் விளங்கும் ஒரே ஆத்மாவின், |
| **पूः**<br>**பூ:** | = | புரங்கள் சரீரங்கள், |
| **देवताः**<br>**தே³வதா:** | = | எல்லா தேவதைகளும், |
| **आत्मैव**<br>**ஆத்மைவ** | = | ஒரே ஆத்மாதான், |
| **नवद्वारे पुरे**<br>**நவத்³வாரே புரே** | = | ஒன்பது கோட்டை வாசல்களுடன் கூடிய நகரம்போன்றதான சரீரத்தில் ஆத்மா விளங்குகிறன், |
| **सर्वेषु भूतेषु समं**<br>**ஸர்வேஷு பூ⁴தேஷு ஸமம்** | = | பல வேற்றுமைகளுள்ள அழியும் எல்லாச் சரீரங்களிலும் விளங்கும் ஆத்மா அழியாதவர், ஒரேமாதிரி இருப்பவர், |
| **विद्याविनयसम्पन्ने**<br>**வித்³யாவின யஸம் பன்னே** | = | கல்வி, அடக்கம் இவைகளுள்ள பிராஹ்மணன் யாஊன நாய், ச்வபாகன் இவர்கள் எல்லோரிடமும் ஸமமாக விளங்கும் ஆத்மாவைக் காண்பவர்கள் பண்டிதர்கள், |
| **विभक्तेषु अविभक्तं**<br>**விப⁴க்தேஷு அவிப⁴க்தம்** | = | வெவ்வேறுகப் பிரிந்துள்ள எல்லாப் ப்ராணிகளிடமும் பிரிவு இல்லாமல் ஒன்றுக விளங்கும் ஆத்மாவைக் காணும் ஞானம் ஸாத்விகம், |
| **सर्वम् वासुदेवः**<br>**ஸர்வம் வாஸுதே³வ:** | = | எல்லாம் வாஸுதேவஸ்வரூபம், |

**इत्यादिभ्यः** = இதுமுதலான,

**இத்யாதி³ப்⁴ய:**
**स्मृतिभ्यश्च** = ஸ்மிருதிகளாலும்,

**ஸ்ம்ருதிப்⁴யஶ்ச**
**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**
**एक एव** = ஒருவனே,

**ஏக ஏவ**
**परं ब्रह्म** = பரப்ரஹ்மமம்,

**பரம் ப்³ரஹ்ம**
**सर्वसंसारधर्मविनिर्मुक्तः** = எல்லா ஸாம்ஸாரிக தர்மங்களிலிருந்தும்

**ஸர்வஸம்ஸாரத⁴ர்மவிநிர்முக்த**: விடுபட்டவன்,
**त्वं** = (அவனே) நீ,

**த்வம்**
**इति** = என்பது,

**இதி**
**सिद्धं** = தீர்மானம்.

**ஸித்³த⁴ம்**

இவ்வாறு பல சுருதிகளேயும் ஸ்மிருதிகளேயும், யுக்திகளேயும் காட்டி ஆத்மா, சரீரம் முதலியவைகளினின்றும் வேறுபட்டவன். அவனே ப்ரஹ்மமம். உலக இயல்புகள் ஒன்றும் அவனுக்குக் கிடையாது. அவனே நீ என்பதை ஆசார்யன் சிஷ்யனுக்கு உபதேசித்தார். **(38)**

---

1. *கீதை*. 5-13; 2. 13-28; 3. 5-18; 4. 18-20; 5. 7-19

---

**(அவதாரிகை)** ஜீவனும் பிரஹ்மமும் ஒன்று. இதுவே உண்மையான தத்வம் என்று இருக்குமாளுல் லெளகிக வைதிக வியவஹாரங்களின் கதி என்ன என்று சிஷ்யன் கேட்கிறுன்: -

**स यदि ब्रूयात् - यदि भगवन् 'अनन्तरः अबाह्यः' , 'सबाह्याभ्यन्तरो ह्यजः', 'कृत्स्नः', 'प्रज्ञानघन एव' सैन्धवघनवदात्मा सर्वमूर्तिभेदवर्जितः आकाशवदेकरसः, तर्हि किमिदं दृश्यते श्रूयते वा साध्यं साधनं वा साधकश्चेति श्रुतिस्मृतिलोकप्रसिद्धं वादिशतविप्रतिपत्तिविषय इति ॥ ३९ ॥**

**ஸ யதி³ ப்³ரூயாத் - யதி³ ப⁴க³வன் 'அனந்தர: அபா³ஹ்ய:', 'ஸபா³ஹ்யா ப்⁴யந்தரோ ஹ்யஜ:', 'க்ருத்ஸ்ன:', 'ப்ரஜ்ஞானக⁴ன ஏவ' ஸைந்த⁴வக⁴னவதா³த்மா ஸர்வமூர்திபே⁴த³வர்ஜித: ஆகாஶவதே³கரஸ:, தர்ஹி கிமித³ம் த்³ருஶ்யதே**

**ஶ்ரூயதே வா ஸாத்⁴யம் ஸாத⁴னம் வா ஸாத⁴கஶ்சேதி ஶ்ருதிஸ்ம்ருதிலோக ப்ரஸித்³த⁴ம் வாதி³ஶதவிப்ரதிபத்திவிஷய இதி ॥ 39 ॥**

| | | |
|---|---|---|
| **भगवन्**<br>**ப⁴க³வன்** | = | குருவே, |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மா, |
| **अनन्तरः अबाह्यः**<br>**அனந்தர: அபா³ஹ்ய:** | = | உள் வெளி இல்லாதவர், |
| **सबाह्याभ्यन्तरः**<br>**ஸபா³ஹ்யாப்⁴யந்தர:** | = | உள் வெளி எங்கும் இருப்பவர், |
| **अजः**<br>**அஜ:** | = | பிறப்பு அற்றவர், |
| **कृत्स्नः**<br>**க்ருத்ஸ்ன:** | = | எல்லாமாக இருப்பவர், |
| **सैन्धवघनवत्**<br>**ஸைந்த⁴வக⁴னவத்** | = | உப்புக்கட்டிபோல, |
| **प्रज्ञानघन एव**<br>**ப்ரஜ்ஞானக⁴ன ஏவ** | = | ஞானக்கட்டியாகவே இருப்பவர், |
| **आकाशवत्**<br>**ஆகாஶவத்** | = | ஆகாசம்போல, |
| **सर्वमूर्तिभेदवर्जितः**<br>**ஸர்வமூர்திபே⁴த³வர்ஜித:** | = | எல்லா உருவவேற்றுமைகளும் அற்றவர், |
| **एकरसः**<br>**ஏகரஸ:** | = | ஒரே ஸ்வரூபமாயிருப்பவர், |
| **यदि**<br>**யதி³** | = | என்று இருக்குமானால், |
| **श्रुतिस्मृतिलोकप्रसिद्धं**<br>**ஶ்ருதிஸ்ம்ருதிலோக ப்ரஸித்³த⁴ம்** | = | வேதம், ஸ்மிருதி, உலகம் இவைகளில் ப்ரஸித்தமாகவும், |
| **वादिशतविप्रतिपत्तिविषयः**<br>**வாதி³ஶதவிப்ரதிபத்திவிஷய:** | = | நூற்றுக்கணக்கான வாதம் செய்பவர்களின் விவாதத்திற்கு விஷயமாகவும், |
| **साध्यं**<br>**ஸாத்⁴யம்** | = | ஸாத்யம், |
| **साधनं**<br>**ஸாத⁴னம்** | = | ஸாதனம், |

| | | |
|---|---|---|
| वा<br>வா | = | அல்லது, |
| साधकश्चेति<br>ஸாத⁴கஶ்சேதி | = | சாதகம் என்பதாகவெல்லாம், |
| दृश्यते<br>த்³ருஶ்யதே | = | காணப்படுகிறதே, |
| श्रूयते वा<br>ஶ்ரூயதே வா | = | அல்லது கேட்கப்படுகிறதே, |
| इदं किं<br>இத³ம் கிம் | = | இது என்ன? |
| इति<br>இதி | = | என்று, |
| सः<br>ஸః | = | அவன், |
| यदि ब्रूयात्<br>யதி³ ப்³ரூயாத் | = | கேட்பானேயாகில். |

ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று இது ஒன்றே உண்மைப் பொருள் இது ஞான ஸ்வரூபம். இதற்கு உருவமோ, விகாரமோ ஒன்றும் கிடையாது. ஆகாசம்போல் எங்கும் நிறைந்திருப்பதாலும் எல்லாமாகவும் இருப்பதாலும் இதற்கு உள், வெளி கிடையாது என்பது வாஸ்தவமாயிருக்குமானுல் ச்ருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் காணப்படும் வியவஹாரங்கள் எப்படிப் பொருந்தும்? ஸ்வர்க்கம் என்ற பலனையடை வதற்கு யாகம் என் ஸாதனத்தை வேதம் உபதேசிக்கிறது. இங்கு ஸ்வர்க்கம் ஸாத்யம், யாகம் ஸாதனம், ஸ்வர்க்கத்தை வேண்டுபவன் ஸாதகன். இம் மாதிரி இவ்வுலகில் அரசனிடம் ஸேவை செய்து பணத்தை பெறுகிறுன். வியவசாயத்தால் தான்யம் அடைகிறுன். அந்தந்த பலன்களை விரும்புபவன் ஸாதகன். இவைகளைப் பற்றிப் படித்த மேதாவிகள் எல்லோரும் விவாதம் செய்வதால் அப்ரமாணம் என்று ஒதுக்கித் தள்ளமுடியாது. இந்த வியவஹாரங்கள் எல்லாம் வேற்றுமைகளை அடிப்ப டையாகக் கொண்டவை. வேற்றுமையே இல்லாவிட்டால் உலகிலும், வேதத்திலும் காணப்படும் ஸாத்யம், ஸாதனம் முதலான வியவஹாரங்கள் எப்படி இருக்கக் கூடும்? இது சிஷ்யனின் கேள்வி. **(39)**

**(அவதாரிகை)** ஆசார்யரின் பதில்: -

**आचार्यो ब्रूयात् - अविद्याकृतमेतद्यदिदं दृश्यते श्रूयते वा, परमार्थतस्त्वेक एक एव आत्मा अविद्यादृष्टेः अनेकवत् आभासते, तिमिरदृष्ट्या अनेकचन्द्रवत् । 'यत्र वा अन्यदिव स्यात्', 'यत्र हि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति', 'मृत्योः स मृत्युमाप्नोति', 'अथ यत्रान्यत्पश्यति अन्यच्छृणोति अन्यद्विजानाति तदल्पं, ... अथ**

**यदल्पं तन्मर्त्यमिति', 'वाचारम्भणं विकारो नामधेयं' अनृतं' 'अन्योऽसावन्योऽहम्' इति भेददर्शननिन्दोपपत्तेः अविद्याकृतं द्वैतं 'एकमेवाद्वितीयम्', 'यत्र त्वस्य', 'तत्र को मोहः कः शोकः' इत्याद्येकत्वविधिश्रुतिभ्यश्चेति ॥ ४० ॥**

**ஆசார்யோ ப்³ரூயாத் - அவித்³யாக்ருதமேதத்³யதி³த³ம் த்³ருஶ்யதே ஶ்ரூய தே வா, பரமார்த²தஸ்த்வேக ஏக ஏவ ஆத்மா அவித்³யாத்³ருஷ்டே: அனேகவத் ஆபா⁴ஸதே, திமிரத்³ருஷ்ட்யா அனேகசந்த்³ரவத் । 'யத்ர வா அன்யதி³வ ஸ்யாத்', 'யத்ர ஹி த்³வைதமிவ ப⁴வதி ததி³தர இதரம் பஶ்யதி', 'ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்னோதி', 'அத² யத்ரான்யத்பஶ்யதி அன்யச்ச்²ருணோதி அன்யத்³ விஜானாதி தத³ல்பம், … அத² யத³ல்பம் தன்மர்த்யமிதி', 'வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம் அந்ருதம்', 'அன்யோ(அ)ஸாவன்யோ (அ)ஹம் ' இதி பே⁴த³த³ர்ஶனநிந்தோ³பபத்தே அவித்³யாக்ருதம் த்³வைதம் 'ஏகமேவாத்³விதீயம்', 'யத்ர த்வஸ்ய', 'தத்ர கோ மோஹ: க: ஶோக:' இத்யாத்³யேகத்வவிதி⁴ஶ்ருதிப்⁴யஶ்சேதி ॥ 40 ॥**

| | | |
|---|---|---|
| **आचार्यः**<br>**ஆசார்ய:** | = | ஆசார்யர், |
| **ब्रूयात्**<br>**ப்³ரூயாத்** | = | சொல்வார், |
| **यदिदं**<br>**யதி³த³ம்** | = | எந்த இது, |
| **दृश्यते**<br>**த்³ருஶ்யதே** | = | காணப்படுகிறதோ, |
| **वा**<br>**வா** | = | அல்லது, |
| **श्रूयते**<br>**ஶ்ரூய தே** | = | கேட்கப்படுகிறதோ, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இது, |
| **अविद्याकृतम्**<br>**அவித்³யாக்ருதம்** | = | அக்ஞானத்தால் ஏற்பட்டது, |
| **परमार्थतस्तु**<br>**பரமார்த²தஸ்து** | = | உண்மையிலோவெனில், |
| **तिमिरदृष्ट्या**<br>**திமிரத்³ருஷ்ட்யா** | = | திமிரம் என்னும் ரோகத்துடன்கூடிய கண் பார்வையால், |
| **अनेकचन्द्रवत्**<br>**அனேகசந்த்³ரவத்** | = | பல சந்திரர்கள் போல், |

| | | |
|---|---|---|
| एक एव आत्मा<br>ஏக ஏவ ஆத்மா | = | ஒரே ஆத்மா, |
| अविद्यादृष्टेः<br>அவித்³யாத்³ருஷ்டே꞉ | = | அக்ஞானப் பார்வையால், |
| अनेकवत्<br>அனேகவத் | = | அநேகம்போல், |
| आभासते<br>ஆபா⁴ஸதே | = | தோன்றுகிறது, |
| [1]यत्र वा अन्यदिव स्यात्<br>யத்ர வா அன்யதி³வ ஸ்யாத் | = | எந்த ஜாக்ரத் - ஸ்வப்ன அவஸ்தைகளில் அக்ஞானத்தால் ஆத்மாவைக் காட்டிலும் வேறுக உள்ளது போன்ற வஸ்துக்கள் ஏற்படுகின்றனவோ, அப்பொழுதுதான் வேறுக இருந்து தன்ஊனக் காட்டிலும் வேறுன பொருஊளப் பார்க்கிறுன். [([1]) பிரு. 4-3-31] |
| [2]यत्र हि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति<br>யத்ர ஹி த்³வைதமிவ ப⁴வதி ததி³தர இதரம் பஶ்யதி | = | எந்த ஜாக்ரத் ஸ்வப்ன அவஸ்தையில் வேற்றுமை யுடன் கூடியதுபோல் தோன்றுகிறதோ, அப்பொழுது வேறுன ஆத்மா வேறுன பொருஊ வேறுன கண்ணுல் பார்க்கிறுன். [([2]) பிரு.4-5-15] |
| [3]मृत्योः स मृत्युमाप्नोति<br>ம்ருத்யோ꞉ ஸ ம்ருத்யுமாப்னேதி | = | எவன் ப்ரஹ்மத்தில் வேற்றுமை உள்ளதுபோல் காண்கிறுனே, அவன் மேலும் மேலும் மிருத்யுவை அடைகிறுன், [([3]) பிரு. 4-4-19.] |
| [4]अथ यत्रान्यत्पश्यति अन्यच्छृणोति अन्यद्विजानाति तदल्पं<br>அத² யத்ரான்யத்பஶ்யதி அன்யச்ச்²ருணோதி அன்யத்³ விஜாஞுதி தத³ல்பம், | = | எதில் வேறுன பொருஊளப் பார்க்கிறுனே, கேட்கிறுனே, அறிகிறுனே, அது சிறியது, [([4]) சா. 7-24.] |
| [5]अथ यत् अल्पं तत् मर्त्यं<br>அத² யத் அல்பம் தத் மர்த்யம் | = | எது சிறியதோ அது அழியக்கூடியது, [([5]) சா. 7-24.] |
| [6]वाचारम्भणं विकारो नामधेयं अनृतं<br>வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம் அந்ருதம் | = | கார்யப்பொருள் வாக்கையே ஆதாரமாகக் கொண்டது. வெறும் பெயர்தான், தனியாக பொருள் என்பது இல்லை, ஆகவே பொய், [([6]) சா. 6-1.] |
| [7]अन्योऽसौ अन्योऽहम्<br>அன்யோ(அ)ஸௌ அன்யோ(அ)ஹம் | = | அது வேறு நான் வேறு என்று எண்ணுபவன் உண்மை அறிவு கொண்டவன் அல்ல, [([7]) பிரு.1-4-10.] |

| | | |
|---|---|---|
| इति | = | என்று, |
| இதி | | |
| भेददर्शननिन्दोपपत्तेः | = | வேற்றுமை அறிவை நிந்தித்திருப்பது |
| பே⁴த³த³ர்ஶனனிந்தோ³பபத்தே: | | பொருத்தமாயிருப்பதாலும், |
| [8]एक मेव अद्वितीयम् | = | ஒரேவஸ்து இரண்டாவது இல்லை. |
| ஏக மேவ அத்³விதீயம் | | [([8]) சா. 6-2.] |
| [9]यत्र तु अस्य | = | எந்த நிலையில் இவனுக்கு எல்லாம் |
| யத்ர து அஸ்ய | | ஆத்மஸ்வரூபமாக ஆய்விட்டதோ, அப்பொழுது எதால் எதைப் பார்ப்பான்? [([9]) பிரு. 4-5-15.] |
| [10]को मोहः कः शोकः | = | எல்லாவற்றையும் ஒரே ஆத்ம ஸ்வரூபமாக |
| கோ மோஹ: க: ஶோக: | | அறிந்தவனுக்கு சோகம் மோஹம் ஏது? [([10]) ஈசாவாஸ்யம்.] |
| इत्याद्येकत्वविधिश्रुतिभ्यश्च | = | இது முதலான ஐக்யத்தை உபதேசிக்கும் |
| இத்யாத்³யேகத்வவிதி⁴ஶ்ருதிப்⁴யஶ்ச | | ச்ருதிகளாலும், |
| द्वैतं | = | வேற்றுமையுடன் கூடிய பிரபஞ்சம், |
| த்³வைதம் | | |
| अविद्याकृतं | = | அக்ஞானத்தால் ஏற்பட்டது என்று. |
| அவித்³யாக்ருதம் | | |

சுருதிகளில் பல இடங்களில் தத்வம் ஒன்றுதான் என்பது தெளிவாகக் கூறப் பட்டிருக்கிறது. மற்றும் பல இடங்களில் வேற்றுமைகளைப் பார்ப்பவனை நிந்தித் திருக்கிறது. 'இவ' சப்தத்தால் வேற்றுமை வெறும் தோற்றம் என்றும் உபதேசிக்கி றது. ஆகையால் உலகத்திலோ வேதத்திலோ காணப்படும் வியவஹாரங்கள் எல்லாம் அவித்யையால் ஏற்பட்டவை. வாஸ்தவத்தில் கிடையாது. உண்மையில் ஆகாசத்தில் இருப்பது ஒரே சந்திரன்தான். ஆனாலும் கண்ணில் திமிரரோகம் உள்ளவர்களுக்கு இரண்டு சந்திரன்கள் இருப்பதுபோலத் தோன்றும். இதுபோல் உண்மையில் ப்ரஹ்மாத்மதத்வம் ஒன்றாக இருந்தபோதிலும் அக்ஞானத்தால் பொய்யான பலவித பிரபஞ்சம் தோன்றுகிறது. உண்மையான அத்வைதத்திற்கும் பொய்யான த்வைதத்திற்கும் விரோதம் இல்லை. **(40)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறான்: -

**यद्येवं भगवन्, किमर्थं श्रुत्या साध्यसाधनादिभेद उच्यते उत्पत्तिः प्रलयश्चेति ॥ ४१॥**

**யத்³யேவம் ப⁴க³வன், கிமர்த²ம் ஶ்ருத்யா ஸாத்⁴யஸாத⁴நாதி³பே⁴த³ உச்யதே உத்பத்தி: ப்ரலயஶ்சேதி ॥ 41॥**

**भगवन्** = பூஜிக்கத்தகுந்தவரே,

**ப⁴க³வன்**

**यदि एवं** = இவ்வாறு இருக்குமானல்,

**யதி³ ஏவம்**

**साध्यसाधनादिभेदः** = ஸாத்யம், ஸாதனம் முதலான வேற்றுமையும்,

**ஸாத்⁴யஸாத⁴நாதி³பே⁴த³:**

**उत्पत्तिः** = ஸிருஷ்டியும்,

**உத்பத்தி:**

**प्रलयश्च** = பிரளயமும்,

**ப்ரலயஶ்ச**

**किमर्थं** = எதற்காக,

**கிமர்த²ம்**

**श्रुत्या** = வேதத்தால்,

**ஶ்ருத்யா**

**उच्यते** = சொல்லப்படுகிறது?

**உச்யதே**

வேதம் என்பது மனிதர்கள் க்ஷேமம் அடைவதற்கு வேண்டிய வழிகளைக் கூறுவதற்காக ஏற்பட்டது. உண்மையைத் தெரிந்துகொண்டால்தான் ஒருவன் க்ஷேமம் அடைய முடியுமே தவிற, பொய்யான விஷயங்களை அறிவதால் ஒருவரும் க்ஷேமம் அடையமுடியாது. ஆகையால் வேதம் உண்மையான ஆத்மதத்வம் ஒன்றைப் பற்றித்தான் கூற வேண்டும். பொய்யான பிரபஞ்சத்தைப் பற்றி வேதம் எதற்காகக் கூறுகிறது? கர்மகாண்டத்தில் ஸ்வர்கம், பசு, புத்திரன் முதலான பலன்களை அடைவதற்கு உபாயங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஞானகாண்டத்திலும் இப்பிரபஞ்சம் முதலில் ஏற்பட்ட வரலாறு, முடிவில் எல்லாம் அழிந்துபோகும் முறை, இவை கூறப்பட்டிருக்கிறது. பிரபஞ்சம் பொய்யாக ஆகுமானல், பொய்யான விஷயங்களைப் பற்றிக் கூறும் வேதம் அப்ரமாணமாகாதா? என்பது சிஷ்யனின் கேள்வி. **(41)**

**(அவதாரிகை)** ஆசார்யர் பதில் கூறுகிறர்: -

**अत्रोच्यते अविद्यावतः उपात्तशरीरादिभेदस्य इष्टानिष्टयोगिनं आत्मानं मन्यमानस्य साधनैरेव इष्टानिष्टाप्ति परिहारोपायविवेकं अजाननः इष्टप्राप्ति च अनिष्टपरिहारं च इच्छतः शनैः तद्विषयमज्ञानं निवर्तयितुं शास्त्रम्, न साध्यसाधनादिभेदं विधत्ते, अनिष्टरूपः संसारो हि स इति । तद्भेददृष्टिने अविद्यां संसारमूलं उन्मूलयति उत्पत्तिप्रलया द्येकत्वोपपत्तिप्रदर्शनेन ॥ ४२ ॥**

**அத்ரோச்யதே அவித்³யாவத: உபாத்தஶரீராதி³பே⁴த³ஸ்ய இஷ்டாநிஷ்ட யோகி³நம் ஆத்மாநம் மந்யமாநஸ்ய ஸாத⁴நைரேவ இஷ்டாநிஷ்டாப்தி**

**பரிஹாரோபாயவிவேகம் அஜானன: இஷ்டப்ராப்தி ச அநிஷ்டபரிஹாரம் ச இச்ச2த: ஶஜ்ஞ: தத்3விஷயமஜ்ஞானம் நிவர்தயிதும் ஶாஸ்த்ரம், ந ஸாத்4யஸாத4 நாதி3பே4த3ம் வித4த்தே, அநிஷ்டரூப: ஸம்ஸாரோ ஹி ஸ இதி । தத்3பே4த்3ருஷ் டினே அவித்3யாம் ஸம்ஸாரமூலம் உன்மூலயதி உத்பத்திப்ரலயா த்3யேகத்வோ பபத்திப்ரத3ர்ஶனேன ॥ 42 ॥**

**अविद्यायां उन्मूलितायां श्रुतिस्मृतिन्यायेभ्यः अनन्तरं अवाह्यं, सबाह्याभ्यन्तरो ह्यजः सैन्धवधनवत् प्रज्ञानघन एव एक आत्मा आकाशवत् परिपूर्ण इति अत्रैव एका प्रज्ञाप्रतिष्ठा परमार्थदर्शिनो भवति । न साध्यसाधनोत्पत्तिलादिभेदेन अशुद्धिगन्धोऽपि उपपद्यते ॥ ४३ ॥**

**அவித்3யாயாம் உன்மூலிதாயாம் ஶ்ருதிஸ்ம்ருதிந்யாயேப்4ய: அனந்தரம் அவாஹ்யம், ஸபா3ஹ்யாப்4யந்தரோ ஹ்யஜ: ஸைந்த4வத4னவத் ப்ரஜ் ஞானக4ன ஏவ ஏக ஆத்மா ஆகாஶவத் பரிபூர்ண இதி அத்ரைவ ஏகா ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா2 பரமார்த2த3ர்ஶினோ ப4வதி । ந ஸாத்4யஸாத4னோத்பத்திலாதி3 பே4தே3ன அஶுத்3தி4க3ந்தோ4(அ)பி உபபத்3யதே ॥ 43 ॥**

**अत्र उच्यते** = இதற்கு பதில் கூறப்படுகிறது,
**அத்ர உச்யதே**

**अविद्यावतः** = அக்ஞானத்துடன் கூடினவனும்,
**அவித்3யாவத:**

**उपात्तशरीरादिभेदस्य** = (அதனுல்) சரீரம், இந்திரியம் முதலியவைகளை அடைந்துள்ளவனும்,
**உபாத்தஶரீராதி3பே4த3ஸ்ய**

**इष्टानिष्टयोगिनं** = (அந்த சரீரத்தைச் சேர்ந்த) இஷ்டம், அனிஷ்டம் இவைகளுடன் கூடியதாக,
**இஷ்டாநிஷ்ட யோகி3னம்**

**आत्मानं** = ஆத்மாவை,
**ஆத்மானம்**

**मन्यमानस्य** = எண்ணுகிறவனும்,
**மன்யமானஸ்ய**

**साधनैरेव** = உபாயங்களைக்கொண்டே,
**ஸாத4னைரேவ**

**इष्टप्राप्तिं च** = இஷ்டங்களை அடைவதையும்,
**இஷ்டப்ராப்திம் ச**

**अनिष्टपरिहारं च** = அநிஷ்டம் நீங்குவதையும்,
**அநிஷ்டபரிஹாரம் ச**

**इच्छतः** = விரும்புகிறவனும்,
**இச்ச2த:**

| | | |
|---|---|---|
| **इष्टानिष्टाप्ति परिहारोपायविवेकं** | = | இஷ்டங்களை அடைவதற்கும், அநிஷ்டம் நீங்குவதற்கும் உண்மையான உபாயத்தைப் பிரித்துத் தெரிந்து கொள்ளாதவனுமான புருஷனுக்கு, |
| **இஷ்டாநிஷ்டாப்தி பரிஹாரோபாயவிவேகம்** | | |
| **शनैः** | = | மெதுவாக, |
| **ஶனை:** | | |
| **तद्विषयं अज्ञानं** | = | அது விஷயமான அக்ஞானத்தை, |
| **தத்³விஷயம் அஜ்ஞானம்** | | |
| **निवर्तयितुं** | = | போக்குவதற்குத்தான், |
| **நிவர்தயிதும்** | | |
| **शास्त्रं** | = | சாஸ்திரம் (ஏற்பட்டிருக்கிறது), |
| **ஶாஸ்த்ரம்** | | |
| **साध्यसाधनादिभेदं** | = | பலன், உபாயம் முதலான வேற்றுமையை, |
| **ஸாத்⁴யஸாத⁴நாதி³பே⁴த³ம்** | | |
| **न विधत्ते** | = | உபதேசிக்கிறதில்லை, |
| **ந வித⁴த்தே** | | |
| **सः** | = | அந்த, |
| **ஸ:** | | |
| **संसारः** | = | பிரபஞ்சம், |
| **ஸம்ஸார:** | | |
| **अनिष्टरूपः हि** | = | விரும்பத்தகாத விஷயம் அல்லவா! |
| **அநிஷ்டரூப: ஹி** | | |
| **इति** | = | என்ற காரணத்தால், |
| **இதி** | | |
| **उत्पत्तिप्रलया द्येकत्वोपपत्तिप्रदर्शनेन** | = | சிருஷ்டி, பிரளயம், முதலானவைகளிலிருந்து அத்வைத ஸித்தாந்தத்தின் யுக்திகளைக் காட்டுவதன் மூலம் (ஸிருஷ்டி பிரளய வாக்யம்), |
| **உத்பத்திப்ரலயா த்³யேகத்வோ பபத்திப்ரத³ர்ஶனேன** | | |
| **संसारमूलं** | = | ஸம்ஸாரத்திற்குக் காரணமான, |
| **ஸம்ஸாரமூலம்** | | |
| **तद्भेदृष्टिं** | = | அந்த ஸாத்யம் ஸாதனம் முதலான வேற்றுமை ஞானத்தை உண்டுபண்ணுகிற, |
| **தத்³பே⁴த்³ருஷ்டிம்** | | |
| **अविद्यामेव** | = | அவித்யையையே, |
| **அவித்³யாமேவ** | | |
| **उन्मूलयति** | = | வேருடன் போக்குகிறது. |
| **உன்மூலயதி** | | |

**अविद्यायां उन्मूलितायां** = அவித்யை வேருடன் நீக்கப் பட்டதும்,

**அவித்³யாயாம் உன்மூலிதாயாம்**

**श्रुतिस्मृतिन्यायेभ्य:** = உபநிஷத், ஸ்மிருதி, யுக்தி இவைகளால்,

**ஶ்ருதிஸ்ம்ருதிந்யாயேப்⁴ய:**

**अनन्तरं** = உள்வெளி இல்லாததும்,

**அனந்தரம்**

**सबाह्याभ्यन्तर:** = உள்ளிலும் வெளியிலும் இருப்பதும்,

**ஸபா³ஹ்யாப்⁴யந்தர:**

**अज:** = பிறப்பு அற்றதும்,

**அஜ:**

**सैन्धवधनवत्** = உப்புக்கட்டிபோல்,

**ஸைந்த⁴வத⁴னவத்**

**प्रज्ञानघन:** = ஞானக் கட்டியானதும்,

**ப்ரஜ்ஞானக⁴ன:**

**आकाशवत्** = ஆகாசம் போல்,

**ஆகாஶவத்**

**परिपूर्ण:** = எங்கும் நிறைந்ததுமான,

**பரிபூர்ண:**

**आत्मा** = ஆத்ம ஸ்வரூபம்,

**ஆத்மா**

**एक एव** = ஒன்றுதான்,

**ஏக ஏவ**

**इति** = என்பதால்,

**இதி**

**परमार्थदर्शिन:** = உண்மையை நேரில் கண்ட ஞானிக்கு,

**பரமார்த²த³ர்ஶின:**

**अत्रैव** = இந்த ஆத்ம வஸ்துவிலேயே,

**அத்ரைவ**

**एका प्रज्ञाप्रतिष्ठा** = ஒரே நிலையான ஞானம்,

**ஏகா ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா²**

**भवति** = ஏற்படுகிறது,

**ப⁴வதி**

**साध्यसाधनोत्पत्तिलादिभेदेन** = உபாயம், பலன், ஸிருஷ்டி, பிரளயம் முதலான

**ஸாத்⁴யஸாத⁴னோத்பத்திலாதி³பே⁴தே³ன** வேற்றுமையினால்,

**अशुद्धिगन्धोऽपि** = அசுத்தியின் வாசனை கூட,

**அஶுத்³தி⁴க³ந்தோ⁴(அ)பி**

**न उपपद्यते** = ஏற்படுவதில்லை.

**ந உபபத்³யதே**

ஆத்மா ஒன்றே மெய்ப்பொருள், மற்றவை எல்லாம் பொய் என்று இருக்கு மானல், பொய்யான பிரபஞ்சத்தில் பலவித பலன்களையும் அவைகளை அடையும் உபாயங்களையும் கூறும் கர்மகாண்டமும், உபநிஷத்தில் பொய்யான பிரபஞ்சத்தின் ஸிருஷ்டி பிரளயங்களைக் கூறும் பாகமும் அப்ரமாணம் ஆகாதா? வேதமோ சிறந்த பிரமாணம் என்பது எல்லோரும் ஒப்புக்கொண்ட விஷயம். ஆகையால் வேதத்தில் கூறப்படும் ஒவ்வொரு விஷயமும் உண்மை என்றுதான் ஒப்புக்கொள்ளவேண்டும். ஆகவே வேதத்தில் பல இடங்களில் த்வைதத்தை உபதேசித்திருக்கிறபடியால் வேதப் பிரமாணத்தைக்கொண்டு அத்வைதத்தை நிலை நாட்ட முடியாது என்பது சிஷ்யனின் கேள்வி.

இதற்குப் பதில் பின்வருமாறு: - அத்வைதாத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு எங்கும் ஒரே பிரஹ்ம வஸ்துவைப் பார்க்கும் ஞானிகளுக்கு வேதம் முதலானது எல்லாம் அப்ரமாணம்தான். அவர்களுக்கு ப்ரஹ்மம் ஒன்றிலேயே புத்தி நிலைத்திரு க்கும் இரண்டாவது வஸ்துவே தோன்றுது. அவர்களிடம் வேதம், ஸாத்யம், ஸாதனம் முதலான பேத புத்தியை உண்டு பண்ணுது. எல்லாவற்றையும் ப்ரஹ்ம மாகப் பார்க்கும் ஞானிக்கு வேதம் தனியாகத் தோன்றுததால் அது அவர்களுக்கு அப்ரமாணம்தான். ஆனாலும் அக்ஞானிகளுக்கு வேதம் பிரமாணம்தான். இவர்கள், அக்ஞானத்தால் உண்மையான ஆத்மஸ்வரூபம் மறைக்கப்பட்டு சரீரம் முதலிபவற் றையே ஆத்மா என எண்ணிக் கொண்டிருக்கின்றனர். தன்னைக்காட்டிலும் வேறான உலக விஷயங்களை அடைவதன் மூலம்தான் ஸுகம் என எண்ணி அதற்கான உபாயங்களைத் தேடிச் செல்கின்றனர். பேத வாஸனை வலுப்பட்டு காமாதி தோஷங் கள் நிறைந்து விஷயங்களைத் தேடிச் செல்பவரிடம் பரமபுருஷார்த்தமான ஆத்மதத்வத்தை உபதேசித்தால் அவர்களால் அறிந்து கொள்ள முடியாது அதற்காக வேதத்திலுள்ள கர்ம காண்டமானது அவர்களுடைய புத்தியை அனுசரித்து அவர்கள் விரும்பும் விஷய ஸுகத்திற்கு ஸாதனங்களை விரிவாகக் காட்டுகிறது. அதிலும் தங்கள் புத்தியால் அறிந்துகொள்ள முடியாத ஸாதனங்களையே சாஸ்திரம் உபதேசி க்கிறது. வேறுவிதமாக அறிந்துகொள்ள முடியாததைத் தெரிவிப்பதற்குத்தானே சாஸ்திரம் ஏற்பட்டு இருக்கிறது.

இவ்வாறு தான் விரும்பும் விஷய ஸுகத்தைப்பெற சாஸ்திர வழியில் வந்தவன் சாஸ்திரம் கூறியவற்றையே செய்வான். அதில் தடுக்கப்பட்டிருக்கும் காரியங்களைச் செய்யமாட்டான். பாபம் குறையும். புண்யம் பெருகும். இதனால் மனத்தில் பரிசுத்தி ஏற்பட ஏற்படக் கொஞ்ச காலத்தில் அழிவுள்ளதும் துக்கம் கலந்ததுமான விஷய ஸுகத்தில் வெறுப்பு ஏற்பட்டு காம்ய கர்மாவையும் நிறுத்தி அவசியமான கார்யங்களைமட்டும் பலனில் ஆசைவைக்காமல் ஈசுவர ப்ரீதிக்காகச் செய்துவருவான். இதனால் அந்தக்கரணம் மிகுந்த பரிசுத்தியை அடைந்து ஸூக்ஷ்ம மான விஷயத்தை அறிந்துகொள்ளத் தகுதி பெற்றவுடன் அப்பேற்பட்ட அதிகாரிக்கு

பரம புருஷார்த்த ஸாதனமான ஆத்ம தத்வஞானத்தைக் கொடுத்து அஞானத்தைப் போக்குகிறது சாஸ்திரம்.

ஆகவே பரம புருஷார்த்தமாயும் நிரதிசயானந்த ரூபமாயும் உள்ள மோக்ஷ ஸுகத்திற்கு ஸாதனமான ஆத்ம தத்வஞானத்தை உண்டுபண்ணி அக்ஞானத்தைப் போக்குவதில் தான் சாஸ்திரங்களுக்குத் தாத்பர்யம். கர்மகாண்டத்திலும் மற்றும் பல இடங்களிலும் பலவிதமான பயன்களையும் அவைகளின் ஸாதனங்களையும் கூறி பலவிதமான வேற்றுமை பிரபஞ்சத்தைக் காட்டியிருந்தாலும் அதில் அவைகளுக்குத் தாத்பர்யம் கிடையாது ஏனெனில் சாஸ்திரமானது வேறுவிதமாக அறியமுடியாத தத்வத்தை தான் உபதேசிக்கவேண்டும். அது நமக்கு ஹிதமாகவும் இருக்கவேண்டும் பிரபஞ்ச வாழ்க்கையில் நாம் பலவித உபாயங்களால் அடையும் பயன்கள் எல்லாம் கடைசியில் துக்கத்தில் தான் முடிவடைகின்றன. ஆகவே அது ஹிதம் அல்ல. சாஸ்திர அறிவு இல்லாதவர்களும்கூட ஏதோ தங்களுக்குத் தெரிந்த உபாயங்களைக் கைக்கொண்டு விஷய ஸுகங்களை அனுபவிக்கின்றனர். ஆகையால் அஹிதமாயும் லோகப்ரஸித்தமாயும் உள்ள ஸாத்யம், ஸாதனம் முதலான பேதப்ரபஞ்சத்தில் சாஸ்திரத்துக்குத் தாத்பர்யம் இல்லை. அக்ஞானிகளின் மனோநிலையை அனுஸரித்து லோகப்ரஸித்தமான பேதத்தை அனுவாதம் செய்து சில ஸாதனங்களையும் காட்டி க்ரமேண அவர் மனதைத் திருப்பி ஆத்மைக்யத்தை உபதேசிப்பதில்தான் எல்லா வேதங்களுக்கும் தாத்பர்யம். இந்த தத்வம் ஸத்யமானதால் வேதம் பிரமாணம் தான்.

இவ்வாறு கர்மகாண்ட வாக்யங்களின் தாத்பர்யத்தை விளக்கி அதன் ப்ராமாண்யம் நிலை நிறுத்தப்பட்டது. உபநிஷத்துக்களில் காணப்படும் ஸிருஷ்டி பிரளய வாக்யங்களுக்கும் பிரபஞ்சம் உண்டாவதையோ, அது அழிவதையோ கூறுவதில் தாத்பர்யம் இல்லை. அத்வைத ஆத்ம வஸ்துவைக் காட்டுவதில்தான் இவைகளுக்கும் தாத்பர்யம் அதாவது : ஒரே காரணப்பொருளிலிருந்து பிரபஞ்சம் முழுவதும் உண்டாகி, அதிலேயே நின்று அதிலேயே அழிந்துபோகிறது. அதுதான் ப்ரஹ்மம், அதுவே ஆத்மா என்று ஸிருஷ்டி ப்ரளயவாக்யங்கள் கூறுகின்றன. உலகில் காரணப் பொருள் தான் உண்மை என்றும் நாம ரூபாத்மகமான காரியம் என்பது வெறும் தோற்றமே என்றும் மண் - குடம் முதலியவைகளில் கண்டிருக்கிறோம். இந்த நியாயத்தைக் கொண்டு ஸர்வகாரணமான ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப்பொருள் என்ற அத்வைத ஸித்தாந்தத்திற்கு வேண்டிய யுக்திகளை ஸிருஷ்டி ப்ரளய வாக்யங்கள் காட்டுகின்றன.

அக்ஞானம் நீங்கி அத்வைத ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு அந்த ஸ்வரூபத் திலேயே நிலைத்திருக்கும் ஞானிக்கு வேறு ஒன்றும் தோன்றாததால் அவன் ரீதியில் கர்ம காண்டம் முதலியவை அப்ரமாணமானாலும் தோஷம் ஒன்றும் இல்லை. பொய்யான ஸாத்யம், ஸாதனம், ஸிருஷ்டி ப்ரளயம் முதலியவற்றால் உண்மை யான ஆத்ம ஸ்வரூபத்திற்கு ஒரு வித ஹானியும் ஏற்படாது. **(42-43)**

**(அவதாரிகை)** முமுக்ஷுவாக இருப்பவன் ஸர்வகர்மத்யாகம் செய்ய வேண்டும் என்று முன் கூறியதை மறுபடியும் சொல்லி முதல் ப்ரகரணத்தை உபஸம்ஹாரம் செய்கிறார்: -

**तच्चैतत् परमार्थदर्शनं प्रतिपत्तमिच्छता वर्णाश्रमाद्यभिमान कृतपाङ्क्ङ्क रूपपुत्रवित्तलोकैषणादिभ्यो व्युत्थानं कर्तव्यम्, सम्यक्प्रत्ययविरोधात् तदभिमानस्य । भेददर्शनप्रतिषेधार्थोपपत्तिश्चोपपद्यते । न हि एकस्मिन् आत्मनि असंसारित्वबुद्धौ शास्त्रन्यायोत्पादितायां तद्विपरीता बुद्धिर्भवति । न ह्यग्नौ शीतत्वबुद्धिः शरीरे वा अजरामरणत्वबुद्धिः । तस्मात् अविद्याकार्यत्वात् सर्वकर्मणां तत्साधनानां च यज्ञोपवीतादीनां परमार्थदर्शननिष्ठेन त्यागः कर्तव्यः ॥ ४४ ॥**

## इति शिष्यानुशासन प्रकरणम् ॥

**தச்சைதத் பரமார்த2த3ர்ஶனம் ப்ரதிபத்தமிச்ச2தா வர்ணாஶ்ரமாத்3 யபி4மான க்ருதபாங்க்ங்கரூபபுத்ரவித்தலோகைஷணாதி3ப்4யோ வ்யுத்தா2னம் கர்தவ்யம், ஸம்யக்ப்ரத்யய விரோதா4த் தத3பி4மானஸ்ய । பே4த3த3ர்ஶனப்ரதி ஷேதா4ர்தோ2பபத்திஸ்சோபபத்3யதே । ந ஹி ஏகஸ்மின் ஆத்மனி அஸம்ஸாரித் வபு3த்3தௌ4 ஶாஸ்த்ரந்யாயோத்பாதி3தாயாம் தத்3விபரீதா பு3த்3தி4ர்ப4வதி । ந ஹ்யக்3னௌ ஶீதத்வபு3த்3தி4: ஶரீரே வா அஜராமரணத்வபு3த்3தி4: । தஸ்மாத் அவித்3யாகார்யத்வாத் ஸர்வகர்மணாம் தத்ஸாத4னானாம் ச யஜ்ஞோபவீதாதீ3 னாம் பரமார்த2த3ர்ஶனநிஷ்டே2ன த்யாக3: கர்தவ்ய: ॥ 44 ॥**

**இதி ஶிஷ்யானுஶாஸன ப்ரகரணம் ॥**

**तच्च एतत्** = அந்த இந்த,
**தச்ச ஏதத்**

**परमार्थदर्शनं** = உண்மையான ஆத்ம ஞானத்தை,
**பரமார்த2த3ர்ஶனம்**

**प्रतिपत्तुं इच्छता** = அடையவிரும்புகிறவனால்,
**ப்ரதிபத்தும் இச்ச2தா**

**वर्णाश्रमाद्यभिमानकृत** = வர்ணம், ஆச்ரமம் முதலியவைகளில்
**வர்ணாஶ்ரமாத்3யபி4மானக்ருத** அபிமானத்தால் ஏற்பட்ட,

**पांक्तरूप** = பாங்க்த ரூபமான (ஐந்து விதமான),
**பாங்க்தரூப**

**पुत्रवित्तलोकैषणादिभ्यः** = புத்ரேஷணை, வித்தேஷணை லோகேஷணை
**புத்ரவித்தலோகைஷணாதி3ப்4ய:** முதலியவைகளிலிருந்து,

**व्युत्थानं** = வெளிக்கிளம்புதல், அதாவது ஸர்வகர்ம
**வ்யுத்தா2னம்** ஸந்யாஸம்,

**कर्तव्यम्** = செய்யத்தகுந்தது,
**கர்தவ்யம்**

**तदभिमानस्य** = அவைகளில் அபிமானம்,
**தத³பி⁴மானஸ்ய**

**सम्यक्प्रत्ययविरोधात्** = அபேத ஞானத்திற்கு விருத்தமாக இருப்பதால்,
**ஸம்யக்ப்ரத்யய விரோதா⁴த்**

**भेददर्शनप्रतिषेधार्थोपपत्तिश्च** = பேத ஞானத்தை நிந்தித்தல் என்னும் விஷயத்தை உபபாதனம் செய்திருப்பதும்,
**பே⁴த³த³ர்ஶனப்ரதிஷே தா⁴ர்தோ²பபத்திஶ்ச**

**उपपद्यते** = பொருந்தியதாக ஆகிறது,
**உபபத்³யதே**

**एकस्मिन् आत्मनि** = ஒரே ஆத்ம வஸ்துவில்,
**ஏகஸ்மின் ஆத்மனி**

**असंसारित्वबुद्धौ** = அஸம்ஸாரி என்ற எண்ணம்,
**அஸம்ஸாரித் வபு³த்³தௌ⁴**

**शास्त्रन्यायोत्पादितायां** = சாஸ்திரங்களாலும் யுக்திகளாலும் ஏற்பட்ட பிறகு,
**ஶாஸ்த்ரந்யாயோத்பாதி³தாயாம்**

**तद्विपरीता बुद्धिः** = அதற்கு எதிரிடியான அறிவு,
**தத்³விபரீதா பு³த்³தி⁴:**

**नहि भवति** = உண்டாகாது,
**நஹி ப⁴வதி**

**अग्नौ** = நெருப்பில்,
**அக்³னௌ**

**शीतत्वबुद्धिः** = குளிர்ந்தது என்ற ஞானமோ,
**ஶீதத்வபு³த்³தி⁴:**

**शरीरे** = தேஹத்தில்,
**ஶரீரே**

**अजरामरणत्वबुद्धिर्वा** = மூப்பு, சாவு இல்லாதது என்ற அறிவோ,
**அஜராமரணத்வபு³த்³தி⁴ர்வா**

**नहि** = உண்டாவதில்ஐலயல்லவா!
**நஹி**

**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**

**अविद्याकार्यत्वात्** = அக்ஞானத்தின் கார்யமாயிருப்பதால்,
**அவித்³யாகார்யத்வாத்**

**सर्वकर्मणां** = எல்லா கர்மாக்களுக்கும்,
**ஸர்வகர்மணாம்**

| | | |
|---|---|---|
| **तत्साधनानां** <br> **தத்ஸாத⁴னானாம்** | = | அவைகளுக்கு ஸாதனமான, |
| **यज्ञोपवीतादीनां च** <br> **யஜ்ஞோபவீதாதீ³னாம் ச** | = | யக்ஞோபவீதம் முதலியவைகளுக்கும், |
| **परमार्थदर्शननिष्ठेन** <br> **பரமார்த²த³ர்ஶனநிஷ்டே²ன** | = | உண்மையான அத்வைதாத்ம ஞானத்தில் ஈடுபட்டவனால், |
| **त्याग:** <br> **த்யாக³:** | = | த்யாகம், |
| **कर्तव्य:** <br> **கர்தவ்ய:** | = | செய்யத்தக்கது. |

ஸம்ஸாரியாக இருப்பவன் இவ்வுலகிலும் மேலுலகிலும் வாழ்க்கையில் ஸுகம் அடைவதற்காக சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள கர்மாக்களைக் கட்டாயம் செய்ய வேண்டுமே தவிர எப்படி விடமுடியும்? என்று சிஷ்யன் கேட்டான். ஆத்மா வுக்கு உண்மையில் ஸம்ஸார தர்மங்கள் ஒன்றும் கிடையாது என்பதைப் பலவிதமான யுக்திகளால் நிரூபணம் செய்துவிட்டு கடைசியில் ஞானம் அடைய விரும்புபவன் அவசியம் கர்மாக்களையும் அதன் ஸாதனங்களையும் தள்ளிவிட்டு ஸந்யாஸம் அடைய வேண்டும் என்று கூறுகிறார். சரீரத்தில், 'நான் பிராஹ்மணன்' என்றும், 'நான் கிருஹஸ்தன்' என்றும் பலவிதமான அபிமானம் உள்ளவன்தான் அந்தந்த வர்ணிகளுக்கும், ஆச்ரமிகளுக்கும் விதிக்கப்பட்டிருக்கும் கர்மாக்களை அநுஷ்டிக்கமுடியும். மோக்ஷமார்க்கத்தில் செல்பவனோ சரீராபிமானத்தையே துறக்கவேண்டும். இவ்வாறு ஒன்றுக்கொன்று விரோதம் இருப்பதால் முமுக்ஷு கர்மாக்களை அனுஷ்டிக்கமுடியாது. மேலும் இவ்வுலகிலுள்ள போகம், பித்ருலோக போகம், தேவலோகபோகம் இவைகளை அடைய ஆசை உள்ளவன்தான, அந்த போகங்களுக்கு ஸாதனமாக சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் கர்மாக்களை அநுஷ்டிக்கவேண்டும். புத்திரனால் இவ்வுலக போகத்தையும், கர்மாவால் பித்ரு லோக போகத்தையும், தைவவித்தம் என்ற உபாஸனத்தால் ப்ரஹ்மலோகாந்தமான தேவலோக போகத்தையும் அடையலாம். இவைகள் எல்லாம் யஜமானன், பத்னீ, புத்திரன், கர்மா, உபாஸனம் என்ற ஐந்து விதமான வேற்றுமைகளை அடிப்படை யாகக் கொண்டிருப்பதால் பாங்க்தம். அத்வைத ஆத்மஞானம் அடையவிரும்புபவன் வேற்றுமைகளை ஆதாரமாகக் கொண்ட கர்மாக்களை எப்படிச் செய்யமுடியும்? மேலும் எல்லா ஆசைகளையும் துறந்தவன்தான் மோக்ஷமார்க்கத்தில் செல்ல முடியும். ஆசை உள்ளவன் தான் கர்மாக்களைச் செய்வான். ஸத்வசுத்தி ஏற்படுவத ற்காகப் பலனை விரும்பாமல் ஈசுவர ப்ரீதிக்காக நித்ய நைமித்திக கர்மாக்களைச் செய்யவேண்டியதுதான். ஸத்வசுத்தி ஏற்பட்டு எல்லாப் போகங்களிலும் ஆசை நீங்கி ஸாமான்யமாக பரோக்ஷமாக ப்ரஹ்மாத்மைக்யத்தையும் அறிந்து முமுக்ஷுத்வம் என்ற முக்தி நிலையை அடைய தீவ்ர விருப்பம் ஏற்பட்ட பிறகு, கர்மாக்களைச் செய்வதற்கு நிமித்தமான சரீராபிமானமோ, பலனில் ஆசையோ அவனுக்கு இல்லாததால் அவன் கர்மாக்களையும் அதன் ஸாதனங்களையும் த்யாகம் செய்ய

வேண்டியதுதான். அதாவது ஞானப்யாஸத்திற்காக ஸந்யாஸம் அடைய வேண்டியது.

மேலும் உபநிஷத்துக்களில் பல இடங்களில் பேத தர்சனத்தை நிந்தித்து, தகுந்த காரணங்களுடன் இதை விளக்கிக்காட்டியிருக்கிறது0 .'வேற்றுமையைப் பார்ப்பவன் இவ்வுலகில் பிறப்பு இறப்புகளைத் திரும்பத்திரும்ப அடைவான்.

**(मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति)**

**(ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்னோதி ய இஹ நானேவ பஶ்யதி)**

சிறிதளவு பேதஞானம் இருந்தாலும் பயம் உண்டாகும்.

**(उद्रमन्तरं कुरुते अथ तस्य भयं भवति)**

**(உத்³ரமந்தரம் குருதே அத² தஸ்ய ப⁴யம் ப⁴வதி)**

இந்த ச்ருதி வாக்யங்களால் பேத ஞானம் ப்ரமம் என்றும் அபேதஞானம்தான் உண்மை அறிவு என்றும் அதில் தான் ச்ருதிகளுக்குத் தாத்பர்யம் என்றும் தெரிய வருகிறது. பேதஞானத்திலோ, அதை ஒட்டி ஏற்பட்ட அபிமானத்திலோ சுருதிகளு க்குத் தாத்பர்யம் இருக்குமானால் அதை நிந்தித்துப் பேசியிருக்காது. ஆகவே உண்மை அறிவுக்கு விரோதமான பேதஞானத்தால் ஏற்படும் அபிமானத்தையும் அதன் கார்யங்களையும் த்யாகம் செய்யவேண்டியதுதான்.

சிலர் கர்மா, ஞானம் இரண்டும் சேர்ந்து தான் மோக்ஷத்தைக்கொடுப்பதாகக் கூறுகின்றனர். அது சரி அல்ல. ஒன்றுக்கொன்று விரோதமான ஞானங்கள் ஒருவனி டம் ஏற்பட முடியாது. பேதஞானமும் அபிமானமும் உள்ளவன் தான் கர்மாவைச் செய்யமுடியும். ஆத்மா ஒன்று, அது அஸம்ஸாரி என்று அறிந்தவனுக்கு பேத ஞானமோ, அபிமானமோ எப்படி இருக்கமுடியும்? அக்னியை நேரில்பார்த்து அதன் உஷ்ணத்தைத் தெரிந்து கொண்டவன் அக்னி குளிர்ச்சியானதென்று எண்ணுவானா? சரீரத்தில் மூப்பு வருவதையும் அழிந்து போவதையும் கண்டவன் சரீரத்திற்கு ஜனன மரணம் கிடையாது என்று நினைப்பானா? ஆகையால் தத்வஞானத்தில் நிலை பெற்ற வன் அவித்யையின் கார்யமான கர்மாக்களையும் அதன் ஸாதனங்களையும் த்யாகம் செய்துவிடுவான். **(44)**

**சிஷ்யானுசாஸநப் பிரகரணம் முற்றிற்று**

## २. कूटस्थाद्वयात्मबोधप्रकरणम् ॥

### கூடஸ்தாத்வயாத்மபோதப்ரகரணம்

**(அவதாரிகை)** முதல்ப்ரகரணத்தில் சரீராபிமானத்தைப்போக்கி ஜீவன் ப்ரஹ்மமே என்பதையும் காட்டி கர்மாக்களையும் அதன் ஸாதனங்களையும் விட்டு ஸந்யாஸம் செய்து கொள்ள வேண்டும் என்று உபதேசித்தார். இதில் ஆத்மா கூடஸ்தமாயும் அத்விதீயமாயும் உள்ள ப்ரஹ்மமே, இது தான் ஸ்வாபாவிகம், இதைக் காட்டிலும் வேறாக சரீராதி ரூபமாகத் தோன்றுவதெல்லாம் அவித்யையால் வந்தது, ஸ்வாபாவிகம் அல்ல என்பதை உபதேசிக்கிறார். ஸந்யாஸம் பெற்று நான்குவித ஸாதனங்களுடன் கூடியவன் உடன் செய்யவேண்டிய காரியத்தை முதலில் காட்டுகிறார்: -

**सुखमासीनं ब्राह्मणं ब्रह्मनिष्ठं कश्चित् ब्रह्मचारी जन्मजरामरणलक्षणात् संसारात् निर्विण्णो मुमुक्षुः विधिवदुपसन्नः पप्रच्छ - भगवन्, कथमहं संसारान्मोक्ष्ये शरीरेन्द्रिय विषयवेदनावान् । जागरिते दुःखमनुभवामि; तथा स्वप्नेऽनुभवामि । पुनः पुनः सुषुप्तिप्रतिपत्त्या विश्रम्य विश्रम्य जाग्रत्स्वप्रयोर्दुः खमनुभवामि । किमयमेव मम स्वभावः? किं वा अन्यस्वभावस्य सतो नैमित्तिकः? इति । यदि अयमेव स्वभावः, न मे मोक्षाशा, स्वभावस्य अवर्जनीयत्वात् । अथ नैमित्तिकः, निमित्तपरिहारे स्यान्मोक्षोपपत्तिः ॥ ४५ ॥**

**ஸுக²மாஸீனம் ப்³ராஹ்மணம் ப்³ரஹ்மநிஷ்ட²ம் கஶ்சித் ப்³ரஹ்மசாரீ ஜன்மஜராமரணலக்ஷணாத் ஸம்ஸாராத் நிர்விண்ணோ முமுக்ஷு: விதி⁴வது³பஸன்ன: பப்ரச்ச² - ப⁴க³வன், கத²மஹம் ஸம்ஸாரான்மோக்ஷ்யே ஶரீரேந்த்³ரிய விஷயவேத³னாவான் । ஜாக³ரிதே து³:க²மனுப⁴வாமி; ததா² ஸ்வப்னே (அ)னுப⁴வாமி । புன: புன: ஸுஷுப்திப்ரதிபத்த்யா விஶ்ரம்ய விஶ்ரம்ய ஜாக்³ரத்ஸ்வப்ரயோர்து³: க²மனுப⁴வாமி । கிமயமேவ மம ஸ்வபா⁴வ:? கிம் வா அன்யஸ்வபா⁴வஸ்ய ஸதோ நைமித்திக:? இதி । யதி³ அயமேவ ஸ்வபா⁴வ:, ந மே மோக்ஷாஶா, ஸ்வபா⁴வஸ்ய அவர்ஜனீயத்வாத் । அத² நைமித்திக:, நிமித்தபரிஹாரே ஸ்யான்மோக்ஷோபபத்தி: ॥ 45 ॥**

| | | |
|---|---|---|
| **जन्मजरामरणलक्षणात्** ஜன்மஜராமரணலக்ஷணாத் | = | பிறப்பு, மூப்பு, சாவுஸ்வரூபமான, |
| **संसारात्** ஸம்ஸாராத் | = | ஸம்ஸாரத்திலிருந்து, |
| **निर्विण्णः** நிர்விண்ண: | = | வெறுப்படைந்து, |
| **मुमुक्षुः** முமுக்ஷு: | = | மோக்ஷமடைய விருப்பங்கொண்ட, |

**कश्चित्** = ஒரு,
**கஶ்சித்**
**ब्रह्मचारी** = ப்ரஹ்ம விசாரம் செய்யும் ஸ்வபாவம் உள்ளவன்,
**ப்³ரஹ்மசாரீ**
**सुखं** = ஸுகமாக,
**ஸுக²ம்**
**आसीनं** = உட்கார்ந்திருக்கிற,
**ஆஸீனம்**
**ब्रह्मनिष्ठं** = ப்ரஹ்ம நிஷ்டரான,
**ப்³ரஹ்மநிஷ்ட²ம்**
**ब्राह्मणं** = ப்ராஹ்மணரை,
**ப்³ராஹ்மணம்**
**विधिवत्** = சாஸ்திர முறைப்படி,
**விதி⁴வத்**
**उपसन्नः** = நெருங்கியவனாய்,
**உபஸன்ன:**
**पप्रच्छ** = கேட்டான்,
**பப்ரச்ச²**
**भगवन्** = பூஜ்யரே,
**ப⁴க³வன்**
**शरीरेन्द्रिय विषयवेदनावान्** = சரீரம், இந்திரியம் இவைகளுக்கும்
**ஶரீரேந்த்³ரிய விஷயவேத³னாவான்** விஷயங்களுக்கும் சேர்க்கை ஏற்படுவதால் உண்டாகும் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிற,
**अहं** = நான்,
**அஹம்**
**संसारात्** = ஸம்ஸாரத்திலிருந்து,
**ஸம்ஸாராத்**
**कथं** = எப்படி,
**கத²ம்**
**मोक्ष्ये** = விடுதலை பெறுவேன்?
**மோக்ஷ்யே**
**जागरिते** = ஜாக்ரதவஸ்தையில் (நனவில்),
**ஜாக³ரிதே**
**दुःखं** = துக்கத்தை,
**து³:க²ம்**
**अनुभवामि** = அநுபவிக்கிறேன்,
**அனுப⁴வாமி**

| | | |
|---|---|---|
| **तथा**<br>**ததா²** | = | அவ்விதமே, |
| **स्वप्ने**<br>**ஸ்வப்னே** | = | ஸ்வப்னத்திலும் (கனவிலும்), |
| **अनुभवामि**<br>**அனுப⁴வாமி** | = | (துக்கத்தை) அனுபவிக்கிறேன், |
| **सुषुप्तिप्रतिपत्त्या**<br>**ஸுஷுப்திப்ரதிபத்த்யா** | = | ஸுஷுப்தி நிலையை (நல்ல தூக்கத்தை) அடைவதால், |
| **विश्रम्य विश्रम्य**<br>**விஶ்ரம்ய விஶ்ரம்ய** | = | இளைப்பாறி இளைப்பாறி, |
| **पुनः पुनः**<br>**புன: புன:** | = | திரும்பித்திரும்பி, |
| **जाग्रत्स्वप्नयोः**<br>**ஜாக்³ரத்ஸ்வப்ரயோ:** | = | ஜாக்ரதவஸ்தையிலும் ஸ்வப்னவஸ்தையிலும், |
| **दुःखं**<br>**து³:க²ம்** | = | துக்கத்தை, |
| **अनुभवामि**<br>**அனுப⁴வாமி** | = | அனுபவிக்கிறேன், |
| **अयमेव**<br>**அயமேவ** | = | இதுவே, |
| **मम**<br>**மம** | = | எனக்கு, |
| **किं स्वभावः**<br>**கிம் ஸ்வபா⁴வ:** | = | இயற்கையான நிலையா? |
| **वा**<br>**வா** | = | அல்லது, |
| **अन्यस्वभावस्य**<br>**அன்யஸ்வபா⁴வஸ்ய** | = | வேறு ஸ்வபாவமுள்ளவனாக, |
| **सतः**<br>**ஸத:** | = | இருக்கும் (எனக்கு), |
| **किं नैमित्तिकः**<br>**கிம் நைமித்திக:** | = | (இது) வேறு காரணத்தால் ஏற்பட்டதா? |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **अयमेव**<br>**அயமேவ** | = | இதுவே, |

**यदि स्वभावः** = என் இயற்கையாக இருக்குமானல்,

**யதி³ ஸ்வபா⁴வः**

**स्वभावस्य** = ஸ்வபாவத்தை,

**ஸ்வபா⁴வஸ்ய**

**अवर्जनीयत्वात्** = தள்ளமுடியாததால்,

**அவர்ஜனீயத்வாத்**

**मे** = எனக்கு,

**மே**

**मोक्षाशा** = மோக்ஷத்தை அடைவதிலுள்ள விருப்பம்,

**மோக்ஷாஶா**

**न** = நிறை வேருது,

**ந**

**अथ** = அல்லது,

**அத²**

**नैमित्तिकः** = காரணத்தால் ஏற்படுமானல்,

**நைமித்திக**

**निमित्तपरिहारे** = காரணத்தைப்போக்கினல்,

**நிமித்தபரிஹாரே**

**मोक्षोपपत्तिः स्यात्** = மோக்ஷம் கிடைப்பது பொருத்தமாகும்.

**மோக்ஷோபபத்திः ஸ்யாத்**

நித்யாநித்ய வஸ்து விவேகம், பூர்ண வைராக்யம், சமம், தமம் முதலியவை, முமுக்ஷுத்வம் என்ற நான்கு ஸாதனங்களேயும் கைக்கொண்டு ப்ரஹ்ம விசாரம் செய்வதற்காக முறைப்படி ஸத்குருவைத் தேடிச் செல்ல வேண்டும் என்று உபநிஷத் கூறுகிறது.

**'तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम्' ।**

**'தத்³விஜ்ஞானர்த²ம் ஸ கு³ருமேவாபி⁴க³ச்சே²த் ஸமித்பாணிः ஶ்ரோத்ரியம் ப்³ரஹ்மநிஷ்ட²ம்' ।**

இதையே இங்கு விளக்கிக் காட்டுகிருர். 'ப்ரஹ்மசாரீ' என்பது ப்ரஹ்மசர்யாச்ரமத்தைக் குறிக்கவில்லே. ப்ரஹ்ம ஸ்வரூபத்தை விசாரித்துத் தெரிந்துகொள்வதில் ஈடுபட்டவன்தான் ப்ரஹ்மசாரி. இதனல் ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப்பொருள்; மற்றவை எல்லாம் பொய் என்ற நித்யா நித்யவஸ்து விவேகம் இருக்கவேண்டும் என்று காட்டினர்.

**निर्विण्णः நிர்விண்ணः** என்பதால் வைராக்யத்தையும்

**मुमुक्षुः முமுக்ஷு:** என்பதால் முமுக்ஷுத்வத்தையும் கூறுகிறார். இம்மூன்று ஸாதனங்களும் ஏற்பட்ட பிறகு சமாதி ஸாதனங்களும் ஏற்பட்டு விடும். இந்த நான்கு ஸாதனங்களையும் கைக்கொண்ட சிஷ்யன் ப்ரஹ்ம விசாரம் செய்வதற்காக ப்ரஹ்மநிஷ்டரான குருவிடம் சாஸ்திர முறைப்படி வினயத்துடன் செல்ல வேண்டும். ப்ரஹ்மநிஷ்டரான குருதான் தன் உபதேசத்தால் சிஷ்யனை ப்ரஹ்ம வித்தாகச் செய்யமுடியும். லோக ஸங்க்ரஹத்திற்காகவோ, மற்ற காரணங்களுக்காகவோ வேறு கார்யங்களில் ஈடுபடாமல் ஸ்வஸ்தராக இருக்க வேண்டும். இவ்வித குருவை அடைந்து தன் நிலைமையைத் தெரிவிக்கவேண்டும். இங்கு சிஷ்யன் இரண்டு கேள்விகள் கேட்கிறான்.

**(1)** ஸம்ஸார நிலையில் இருக்கும் நான் இதிலிருந்து எப்படி விடுதலை அடைவேன்? சரீரம் இந்திரியம் இவைகளுக்கும், சப்தம் முதலான விஷயங்களுக்கும் ஸம்பந்தம் ஏற்பட்டு அதனால் ஏற்படும் ஸுகதுக்கானுபவம் தான் ஸம்ஸாரம் என்பது. எல்லோருக்கும் எப்பொழுதும் ஏதாவது ஒருவிதத்தில் இந்த ஸுகதுக்கானுபவம் இருந்து கொண்டே இருக்கிறது. இந்த நிலையிலிருந்து எப்படி விடுபடுவது?

**(2)** இந்த ஸுகதுக்கானுபவம் என்னை விட்டுப்பிரியாதபடி என் ஸ்வபாவத்திலேயே சேர்ந்ததா? அல்லது வேறு ஒன்றின் தர்மம் ஏதோ ஒரு காரணவசத்தால் என்னிடம் வந்திருக்கிறதா? ஜாக்ரதவஸ்தையிலும் ஸ்வப்னவஸ்தையிலும் இந்த அனுபவம் ஏற்படுவதாலும், ஸுஷுப்தி அவஸ்தையில் இந்த அனுபவம் தெரியாததாலும் ஸந்தேஹம் ஏற்படுகிறது. இந்த துக்கானுபவம் ஆத்மாவின் ஸ்வபாவமாக இருக்குமானால் என்னைவிட்டு ஒருக்காலும் நீங்காது. ஆகவே இதிலிருந்து விடுபட்டு மோக்ஷநிலையை ஒருபொழுதும் நான் அடையமுடியாது. அக்னியின் ஸ்வபாவம் உஷ்ணம். தண்ணீரின் ஸ்வபாவம் குளிர்ச்சி. சில காரணங்களால் சில சமயம் குளிர்ச்சி மறைந்து தண்ணீர் சூடாகத்தெரிந்தாலும் மறுபடியும் குளிர்ந்ததாக ஆகிவிடும். அக்னியின் ஸ்வபாவமான உஷ்ணத்தையும், தண்ணீரின் ஸ்வபாவமான குளிர்ச்சியையும் அடியோடு போக்கமுடியாது. அதுபோல ஸம்ஸாரம் ஆத்மாவின் ஸ்வபாவமாக இருக்குமானால், அது அடியோடு நீங்காது. முக்திநிலையை அடைய முடியாது. நெருப்பின் சேர்க்கையால் தண்ணீருக்குச் சூடு ஏற்படுவதுபோல் ஆத்மாவுக்கும் வேறொரு நிமித்தத்தால் துக்கானுபவம் ஏற்பட்டிருக்குமாயின் அந்த நிமித்தத்தை நீக்கிக் கொண்டால் துக்கானுபவம் விலகிவிடும். அப்பொழுது முக்திநிலையை எய்தலாம், என்று சிஷ்யன் கேட்டான். **(45)**

**(அவதாரிகை)** ஆசிரியர் கூறுகிறார்: -

**तं गुरुरुवाच शृणु वत्स! न तवायं स्वभावः; नैमित्तिकः ॥ ४६ ॥**

**தம் கு³ருருவாச ஶ்ருணு வத்ஸ! ந தவாயம் ஸ்வபா⁴வ:; நைமித்திக: ॥ 46 ॥**

**इत्युक्तः शिष्य उवाच - किं निमित्तम्? किंवा तस्य निवर्तकम्? को वा मम स्वभावः?**

**यस्मिन्निमित्ते निवर्तिते नैमित्तिकाभाव: रोगनिमित्तनिवृत्ताविव रोगी स्वभावं प्रतिपद्येयेति ॥ ४७ ॥**

**இத்யுக்த: ஶிஷ்ய உவாச - கிம் நிமித்தம்? கிம்வா தஸ்ய நிவர்தகம்? கோ வா மம ஸ்வபா⁴வ:? யஸ்மிந்நிமித்தே நிவர்திதே நைமித்திகாபா⁴வ: ரோக³ நிமித்தநிவ்ருத்தாவிவ ரோகீ³ ஸ்வபா⁴வம் ப்ரதிபத்³யேயேதி ॥ 47 ॥**

| | | |
|---|---|---|
| **तं**<br>**தம்** | = | அந்த சிஷ்யனைப் பார்த்து, |
| **गुरु:**<br>**கு³ரு:** | = | ஆசார்யர், |
| **अवाच**<br>**அவாச** | = | சொன்னார், |
| **वत्स**<br>**வத்ஸ** | = | குழந்தாய்! |
| **शृणु**<br>**ஶ்ருணு** | = | கேள், |
| **अयं**<br>**அயம்** | = | இந்த ஸம்ஸாரம் (துக்கானுபவம்), |
| **तव**<br>**தவ** | = | உனக்கு, |
| **न स्वभाव:**<br>**ந ஸ்வபா⁴வ:** | = | ஸ்வபாவம் இல்லை. (ஆனால்), |
| **नैमित्तिक:**<br>**நைமித்திக:** | = | காரண வசத்தால் ஏற்பட்டது. |
| **इति**<br>**இதி** | = | இவ்வாறு, |
| **उक्त:**<br>**உக்த:** | = | சொல்லப்பட்ட, |
| **शिष्य:**<br>**ஶிஷ்ய:** | = | சிஷ்யன், |
| **उवाच**<br>**உவாச** | = | சொன்னான், |
| **यस्मिन्**<br>**யஸ்மின்** | = | எந்த, |
| **निमित्ते**<br>**நிமித்தே** | = | காரணம், |

| | | |
|---|---|---|
| निवर्तिते<br>நிவர்திதே | = | போக்கடிக்கப்பட்டதும், |
| नैमित्तिकाभाव:<br>நைமித்திகாபா⁴வ: | = | அந்தக்காரணத்தால் ஏற்படும் ஸம்ஸாரமும் போய் விடுமோ (அந்த), |
| निमित्तं<br>நிமித்தம் | = | காரணம், |
| किं<br>கிம் | = | எது? |
| तस्य<br>தஸ்ய | = | அந்தக் காரணத்தை, |
| निवर्तकं<br>நிவர்தகம் | = | போக்கடிக்கும் உபாயம், |
| किंवा<br>கிம்வா | = | எது? |
| रोगनिमित्तनिवृत्तौ<br>ரோக³நிமித்தநிவ்ருத்தௌ | = | வியாதியின் மூல காரணம் நீங்கிவிட்டால், |
| रोगी इव<br>ரோகீ³ இவ | = | வியாதியுள்ளவன் ஸ்வஸ்தனுக ஆவதுபோல் (துக்கானுபவத்தின் காரணம் நீங்கி விட்டால்), |
| स्वभावं<br>ஸ்வபா⁴வம் | = | (எந்த) ஸ்வபாவத்தை, |
| प्रतिपद्येव<br>ப்ரதிபத்³யேவ | = | அடைவேனே (அந்த), |
| मम<br>மம | = | என்னுடைய, |
| स्वभाव:<br>ஸ்வபா⁴வ: | = | ஸ்வபாவம், |
| क:<br>க: | = | எது, |
| इति<br>இதி | = | என்று. |

"ஸுகதுக்கானுபவம் ஆத்மாவுக்கு இயற்கையிலேயே உள்ளதல்ல; ஏதோ காரணவசத்தால் ஏற்பட்டிருக்கிறது" என்று ஆசார்யர் சொன்னவுடன் சிஷ்யனுக்கு மனதில் ஆறுதல் ஏற்பட்டது இந்த துக்கானுபவமற்ற நிலையை நாமும் உபாயத்தால் அடையலாம் என்று தோன்றியது. அதை விரைவில் அடையவேண்டும் என்று எண்ணிக் கேட்கிறன். ஏதோ ஒரு காரணவசத்தால் இந்த நிலை ஏற்பட்டிருப்பின் அந்தக்காரணம் நீங்கினல்தான் இந்த நிலை நீங்கும். அந்தக்காரணத்தைத் தெரிந்து கொண்டால்தான் அதைப்போக்கடிக்க முடியும் ஆகவே அந்தக் காரணம் என்ன

என்று முதலில் கேட்கிறான். இரண்டாவதாக அந்தக்காரணத்தைப் போக்கடிக்கும் உபாயத்தைக் கேட்கிறான். வியாதியின் காரணத்தைக் கண்டுபிடித்து தக்க மருந்துகளை ஸேவித்து அதைப் போக்கடித்து விட்டால் வியாதியும் தானாக நீங்கி விடும். பிறகு அவன் தன் நிலையை அடைகிறான். இந்த ஸுதுக்கானுபவம் என் ஸ்வபாவம் இல்லையென்றால் என்னுடைய ஸ்வபாவம் எது? எதை அடைந்து நான் ஆனந்தமாக இருப்பேன் என்பது மூன்றாவது கேள்வி. **(46-47)**

**(அவதாரிகை)** ஆசார்யார் பதில் கூறுகிறார்: -

**गुरुरुवाच - अविद्या निमित्तं; विद्या तस्य निवर्तिका । अविद्यायां निवृतायां तन्निमित्ताभावात् मोक्ष्यसे जन्ममरणलक्षणात् संसारात् । स्वप्न जाग्रदुःखं च नानुभविप्यसीति ॥ ४८ ॥**

**கு³ருருவாச - அவித்³யா நிமித்தம்; வித்³யா தஸ்ய நிவர்திகா । அவித்³யாயாம் நிவ்ருதாயாம் தந்நிமித்தாபா⁴வாத் மோக்ஷ்யஸே ஜன்மமரணலக்ஷணாத் ஸம்ஸாராத் । ஸ்வப்ன ஜாக்³ரது³:க²ம் ச நானுப⁴விப்யஸீதி ॥ 48 ॥**

**अविद्या** = அஞானம்,
**அவித்³யா**

**निमित्तं** = காரணம்,
**நிமித்தம்**

**विद्या** = ஞானம்,
**வித்³யா**

**तस्य निवर्तिका** = அதைப் போக்கடிக்கக்கூடியது,
**தஸ்ய நிவர்திகா**

**अविद्यायां** = அக்ஞானம்,
**அவித்³யாயாம்**

**निवृत्तायां** = நீங்கிவிட்டால்,
**நிவ்ருத்தாயாம்**

**तन्निमित्ताभावात्** = அந்தக் காரணமில்லாததால்,
**தந்நிமித்தாபா⁴வாத்**

**जन्ममरणलक्षणात्** = பிறவி, மரணம் என்ற,
**ஜன்மமரணலக்ஷணாத்**

**संसारात्** = ஸம்ஸாரத் துன்பத்திலிருந்து,
**ஸம்ஸாராத்**

**मोक्ष्यसे** = விடுபடுவாய்,
**மோக்ஷ்யஸே**

| | | |
|---|---|---|
| **स्वप्न जाग्रद्दुःखं च** ஸ்வப்ன ஜாக்³ரது³:க²ம் ச | = | ஸ்வப்னவஸ்தையிலும் ஜாக்ரதவஸ்தையிலும் துன்பத்தை, |
| **न अनुभविष्यसी** ந அனுப⁴விப்யஸீ | = | அனுபவிக்க மாட்டாய், |
| **इति** இதி | = | என்று, |
| **गुरुः** கு³ரு: | = | ஆசார்யர், |
| **उवाच** உவாச | = | சொன்னார். |

ஸம்ஸார நிலைக்குக் காரணம் அக்ஞானம் தான். ஞானத்தால் தான் அக்ஞானம் நீங்கும். அக்ஞானம் என்றகாரணம் ஞானத்தால் நீங்கிவிட்டால், காரணம் இல்லாமையால் திரும்பத் திரும்ப ஏற்படும் பிறவி, மரணம் என்ற ஸம்ஸார நிலையும் நீங்கிவிடும். அதன்பின் ஜாக்ரத் ஸ்வப்னவஸ்தைகளோ, துக்கானுபவமோ இருக்காது. **(48)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறான்: -

**शिष्य उवाच - का सा अविद्या? किंविषया वा? विद्या च का अविद्यानिवर्तिका यया स्वभावं प्रतिपद्येयेति ॥ ४९ ॥**

**ஶிஷ்ய உவாச - கா ஸா அவித்³யா? கிம்விஷயா வா? வித்³யா ச கா அவித்³யாநிவர்திகா யயா ஸ்வபா⁴வம் ப்ரதிபத்³யேயேதி ॥ 49 ॥**

| | | |
|---|---|---|
| **सा** ஸா | = | அந்த, |
| **अविद्या** அவித்³யா | = | அக்ஞானம், |
| **का** கா | = | எது? |
| **किंविषया वा** கிம்விஷயா வா | = | எதைப் பற்றியது? |
| **यया** யயா | = | எதனால், |
| **स्वभावं** ஸ்வபா⁴வம் | = | தன் நிலையை, |
| **प्रतिपद्येय** ப்ரதிபத்³யேய | = | அடைவேனோ (அந்த), |

**अविद्यानिवर्तिका** = அக் ஞானத்தைப் போக்கும்,

**அவித்³யாநிவர்திகா**

**विद्या च** = ஞானமும்,

**வித்³யா ச**

**का** = எது,

**கா**

**इति** = என்று,

**இதி**

**शिष्य:** = சிஷ்யன்,

**ஶிஷ்ய:**

**उवाच** = கேட்டான்.

**உவாச**

எல்லாத்துன்பங்களுக்கும் காரணமான அக்ஞானம் என்பது எது? அதன் விஷயம் யாது? இந்த அக்ஞானத்தைப்போக்கி என்னை ஸ்வஸ்தனாக ஆக்குகின்ற ஞானம் என்பது யாது என்று சிஷ்யன் கேட்டான். **(49)**

**(அவதாரிகை)** குரு பதில் கூறுகிறார்: -

**गुरुरुवाच - त्वं परमात्मानं सन्तम् असंसारिणं संसारी अहमस्मीति विपरीतं प्रतिपद्यसे; अकर्तारं सन्तं कर्तेति; अभोक्तारं सन्तं भोक्तेति; विद्यमानं चाविद्यमानमिति । इयमविद्या ॥ ५० ॥**

**கு³ருருவாச - த்வம் பரமாத்மானம் ஸந்தம் அஸம்ஸாரிணம் ஸம்ஸாரீ அஹமஸ்மீதி விபரீதம் ப்ரதிபத்³யஸே; அகர்தாரம் ஸந்தம் கர்தேதி; அபோ⁴க்தாரம் ஸந்தம் போ⁴க்தேதி; வித்³யமானம் சாவித்³யமானமிதி । இயமவித்³யா ॥50॥**

**त्वं** = பரமாத்மாவாகவும்,

**த்வம்**

**असंसारिणं** = ஸம்ஸார தர்மங்களற்றவனாகவும்,

**அஸம்ஸாரிணம்**

**सन्तं** = இருக்கும் தன்னை,

**ஸந்தம்**

**अहं** = நான்,

**அஹம்**

**संसारी** = ஸம்ஸாரியாக,

**ஸம்ஸாரீ**

| | | |
|---|---|---|
| **अस्मि**<br>**அஸ்மி** | = | இருக்கிறேன், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **विपरीतं**<br>**விபரீதம்** | = | மாறுதலாக, |
| **प्रतिपद्यसे**<br>**ப்ரதிபத்³யஸே** | = | அறிந்துகொள்கிறாய். (இது போலவே), |
| **अकर्तारं सन्तं**<br>**அகர்தாரம் ஸந்தம்** | = | கர்த்தாவாக இல்லாமலிருக்கும் தன்னை, |
| **कर्ता इति**<br>**கர்தா இதி** | = | கர்த்தா என்றும், |
| **अभोक्तारं सन्तं**<br>**அபோ⁴க்தா ரம் ஸந்தம்** | = | போக்தாவாக இல்லாமலிருக்கும் தன்னை, |
| **भोक्ता इति**<br>**போ⁴க்தா இதி** | = | போக்தா என்றும், |
| **विद्यमानं च**<br>**வித்³யமானம் ச** | = | எப்பொழுதும் இருக்கும் தன்னை, |
| **अविद्यमानमिति**<br>**அவித்³யமானமிதி** | = | இல்லாமலிருப்பவனென்றும் அறிந்துகொள்கிறாய், |
| **इयं**<br>**இயம்** | = | இதுதான், |
| **अविद्या**<br>**அவித்³யா** | = | அக்ஞானம் (என்று), |
| **गुरुः**<br>**கு³ரு:** | = | ஆசார்யர், |
| **उवाच**<br>**உவாச** | = | சொன்னார். |

உண்மையில் நீ பரமாத்மா. எங்கும் நிறைந்த வஸ்து. ஸம்ஸார தர்மங்களான ஸுகதுக்கானுபவங்கள் ஒன்றும் உனக்குக் கிடையாது. நீ அகர்த்தா, ஒன்றையும் செய்வதில்லை. அபோக்தா, உலகில் ஒன்றையும் அனுபவிப்பதில்லை. நீ எப்பொழுதும் இருப்பவன், நித்யவஸ்து. இவ்வாறு இருந்த போதிலும் இந்த உண்மையை நீ தெரிந்து கொள்ளவில்லை. இதுமட்டும் அல்ல. விபரீதமாகவும் தெரிந்து கொண்டிருக்கிறாய். தன்னைச் சிறியவனாகவும், ஸம்ஸாரியாகவும் கர்த்தாவாகவும் (செய்பவனாகவும்) போக்தாவாகவும், (பலனை அனுபவிக்கிறவனாகவும்) அழிந்து போகிறவனாகவும் எண்ணிக்கொண்டிருக்கிறாய். இதுதான் அவித்யை என்பது. உன்னிடத்தில்தான் அவித்யை இருக்கிறது நீ தான் ஆச்ரயம். ஆத்மாதான் விஷயம். ஆத்மாவைத்தான்

மறைக்கிறது ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை மறைத்து விபரீதமாகக் காட்டுகிறது. உண்மை மறைந்து விபரீதத்தோற்றம் ஏற்படுவதற்குக் காரணமான பொருள் தான் அவித்யை என்பது. இந்த அவித்யைக்கு வேறு பிரமாணம் தேவையில்லை. உன் அனுபவமேதான் பிரமாணம். அகர்த்தாவாகவும் அபோக்தாவாகவும், அஸம்ஸாரியாகவும், நித்யனாகவும், பரமாத்மாவாகவுமிருக்கும் தன்னை கர்த்தாவாகவும், போக்தாவாகவும், ஸம்ஸாரியாகவும், அநித்யனாகவும் கூறுகிறாயே. இதுதான் உன்னிடம் அவித்யை இருக்கிறது என்பதற்குப் பிரமாணம். உண்மையில் நீ ஸச்சிதானந்தமான பரமாத்மாதான். **(50)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறான்: -

**शिष्य उवाच - यद्यप्यहं विद्यमानः, तथापि न परमात्मा । कर्तृत्वभोक्तृत्व लक्षणः संसारो मम स्वभावः, प्रत्यक्षादिभिः प्रमाणैः अनुभूयमानत्वात् । न अविद्यानिमित्तः, अविद्यायाश्चात्मविषयत्वानुपपत्तेः। अविद्या नाम अन्यस्मिन् अन्यधर्माध्यारोपणा, यथा प्रसिद्धं रजतं प्रसिद्धायां शुक्तिकायाम्, यथा प्रसिद्धं पुरुषं स्थाणौ अध्यारोपयति, प्रसिद्धं वा स्थाणुं पुरुषे, नाप्रसिद्धं, प्रसिद्धे, प्रसिद्धं वा अप्रसिद्धे । न च आत्मन्यनात्मानमध्यारोपयति, आत्मनः अप्रसिद्धत्वात्; तथा आत्मानम् अनात्मनि, आत्मनोऽप्रसिद्धत्वादेव ॥ ५१ ॥**

**ஶிஷ்ய உவாச - யத்³யப்யஹம் வித்³யமான:, ததா²பி ந பரமாத்மா । கர்த்ருத்வபோ⁴க்த்ருத்வலக்ஷண: ஸம்ஸாரோ மம ஸ்வபா⁴வ:, ப்ரத்யக்ஷாதி³பி⁴: ப்ரமாணை: அனுபூ⁴யமானத்வாத் । ந அவித்³யாநிமித்த:, அவித்³யாயாஶ் சாத்ம விஷயத்வானுபபத்தே:। அவித்³யா நாம அன்யஸ்மின் அன்யத⁴ர்மா த்⁴யாரோபணா, யதா² ப்ரஸித்³த⁴ம் ரஜதம் ப்ரஸித்³தா⁴யாம் ஶுக்திகாயாம், யதா² ப்ரஸித்³த⁴ம் புருஷம் ஸ்தா²ணௌ அத்⁴யாரோபயதி, ப்ரஸித்³த⁴ம் வா ஸ்தா²ணும் புருஷே, நாப்ரஸித்³த⁴ம், ப்ரஸித்³தே⁴, ப்ரஸித்³த⁴ம் வா அப்ரஸித்³தே⁴। ந ச ஆத்மன்யனா த்மானமத்⁴யாரோபயதி, ஆத்மன: அப்ரஸித்³த⁴த்வாத்; ததா² ஆத்மானம் அனாத்மனி, ஆத்மனோ(அ)ப்ரஸித்³த⁴த்வாதே³வ ॥ 51 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** அஹம் | = | நான், |
| **यद्यपि विद्यमानः** யத்³யபி வித்³யமான: | = | எப்பொழுதும் உள்ளவனாயிருந்தபோதிலும், |
| **तथापि** ததா²பி | = | அப்படியிருந்தாலும், |
| **न परमात्मा** ந பரமாத்மா | = | நான் பரமாத்மா அல்ல, |

**प्रत्यक्षादिभिः** = பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால்,
**ப்ரத்யக்ஷாதி³பி⁴:**

**अनुभूयमानत्वात्** = நேரில் அறிந்து கொள்ளப்படுகிறபடியால்,
**அனுபூ⁴யமானத்வாத்**

**कर्तृत्वभोक्तृत्वलक्षणः** = கர்த்ருத்வ போக்த்ருத்வ ரூபமான,
**கர்த்ருத்வபோ⁴க்த்ருத்வலக்ஷண:**

**संसारः** = ஸம்ஸாரம்,
**ஸம்ஸார:**

**मम** = என்னுடைய,
**மம**

**स्वभावः** = ஸ்வரூபத்திலேயே சேர்ந்தது,
**ஸ்வபா⁴வ:**

**अविद्यायाः** = அக்ஞானம்,
**அவித்³யாயா:**

**स्वात्मविषयत्वानुपपत्तेः** = தன் ஆத்மாவைப்பற்றியதாக இருக்க முடியாதானபடியால்,
**ஸ்வாத்மவிஷயத்வானுபபத்தே:**

**न अविद्यानिमित्तः** = (ஸம்ஸாரம்) அவித்யை என்ற காரணத்தால் ஏற்பட்டதல்ல,
**ந அவித்³யாநிமித்த:**

**अविद्या नाम** = அவித்யை என்பது,
**அவித்³யா நாம**

**अन्यस्मिन्** = பிரஸித்தமான வேறொன்றில்,
**அன்யஸ்மின்**

**अन्यधर्माध्यारोपणा** = பிரஸித்தமான மற்றொன்றின் தர்மத்தை ஆரோபம் செய்வது,
**அன்யத⁴ர்மாத்⁴யாரோபணா**

**यथा** = எவ்வாறு,
**யதா²**

**प्रसिद्धं** = பிரஸித்தமான,
**ப்ரஸித்³த⁴ம்**

**रजतं** = வெள்ளியை,
**ரஜதம்**

**प्रसिद्धायां** = பிரஸித்தமான,
**ப்ரஸித்³தா⁴யாம்**

**शुक्तिकायां** = கிளிஞ்சலிலும்,
**ஶுக்திகாயாம்**

**यथा** = எவ்வாறு,
**யதா²**

| | | |
|---|---|---|
| प्रसिद्धं<br>ப்ரஸித்³த⁴ம் | = | பிரஸித்தமான, |
| पुरुषं<br>புருஷம் | = | மனிதனை, |
| स्थाणौ<br>ஸ்தா²ணௌ | = | மரக்கட்டையிலோ, |
| प्रसिद्धं<br>ப்ரஸித்³த⁴ம் | = | பிரஸித்தமான, |
| स्थाणुं<br>ஸ்தா²ணும் | = | மரக்கட்டையை, |
| पुरुषे वा<br>புருஷே வா | = | மனிதனிடமோ, |
| अध्यारोपयति<br>அத்⁴யாரோபயதி | = | ஆரோபம் செய்கிறுன், |
| अप्रसिद्धं<br>அப்ரஸித்³த⁴ம் | = | பிரஸித்தமில்லாத பொருளை, |
| प्रसिद्धे<br>ப்ரஸித்³தே⁴ | = | பிரஸித்தமான வஸ்துவிலோ, |
| प्रसिद्धं<br>ப்ரஸித்³த⁴ம் | = | பிரஸித்தமான பொருளை, |
| अप्रसिद्धे वा<br>அப்ரஸித்³தே⁴ வா | = | பிரஸித்தமில்லாத வஸ்துவிலோ, |
| न<br>ந | = | ஆரோபம் செய்கிறதில்லை, |
| आत्मनः<br>ஆத்மன: | = | ஆத்மவஸ்து, |
| अप्रसिद्धत्वात्<br>அப்ரஸித்³த⁴த்வாத் | = | பிரஸித்தமில்லாததாயிருப்பதால், |
| आत्मनि<br>ஆத்மனி | = | ஆத்மாவில், |
| अनात्मानं<br>அனாத்மானம் | = | ஆத்மாவல்லாத பொருளை, |
| नाध्यारोपयति<br>நாத்⁴யாரோபயதி | = | ஆரோபம் செய்வதில்லை, |
| तथा<br>ததா² | = | அவ்வாறே, |

**आत्मनः अप्रसिद्धत्वादेव** = ஆத்மா பிரஸித்தமில்லாததாயிருப்பதாலேயே,

**ஆத்மன: அப்ரஸித்³த⁴த்வாதே³வ**

**आत्मानं** = ஆத்மாவை,

**ஆத்மானம்**

**अनात्मनि** = ஆத்மாவல்லாத பொருளிலும்

**அனாத்மனி** (ஆரோபம் செய்கிறதில்லை).

"நீ பரமாத்மாதான். அவித்யையால் தன்னைக்கர்த்தாவாகவும் போக்தாவாகவும் நினைக்கிறாய்" என்று குரு சொன்னார். இது தன் அனுபவத்திற்கு ஒத்துவரவில்லையே, ப்ரத்யக்ஷப்ரமாண விருத்தமாயிருக்கிறதே என்று சிஷ்யன் கேட்கிறான். ஆத்மா நித்யன், அழிவற்றவன் என்பதில் ஸந்தேஹம் இல்லை. ஆனால் கர்த்ருத்வம், போக்த்ருத்வம் முதலியவை ஆத்மாவுககு இயற்கையிலேயே உண்டு. அவித்யை யால் ஏற்பட்டதல்ல. ஒரு பொருளில் மற்றொரு பொருளின் தர்மத்தைக் காண்பது தான் அவித்யை என்பது, ஆனால் இவ்விரண்டு பொருள்களும் நமக்குத் தெரிந்ததா யிருக்கவேண்டும். கிளிஞ்சலையும் வெள்ளியையும் அறிந்தவன்தான் அவித்யையால் கிளிஞ்சலை வெள்ளியாகப் பார்ப்பான். கட்டையையும் மனிதனையும் கண்டவன்தான் கட்டையை மனிதனாகவோ, மனிதனைக் கட்டையாகவோ காண்பான். இரண்டில் ஒன்று தெரியாமலிருந்தாலும் ஆரோபம் ஏற்படாது. ஆத்மாவையோ ஒருவரும் கண்டதில்லை ஆனதால் ஆத்மாவில் அநாத்ம வஸ்துக்களின் ஆரோபமோ, அநாத்மா வில் ஆத்ம வஸ்துவின் ஆரோபமோ ஏற்பட முடியாது. ஆகவே சரீரம் முதலியவற் றிலுள்ள கர்த்ருத்வாதிகள் ப்ரமத்தால் ஆத்மாவில் தோன்றுவதாகச் சொல்ல முடியாது. மேலும் ஆத்மா கர்த்தா என்பதற்கு ப்ரத்யக்ஷம், அனுமானம், சுருதி என்ற ப்ரமாணங்கள் இருக்கின்றன. நான் கர்த்தா என்று எல்லோருக்கும் தோன்றுவதுதான் ப்ரத்யக்ஷம். நீலம் முதலான ரூபம் ஒரு வஸ்துவைச்சார்ந்திருப்பதுபோல் கர்த்ருத் வம் என்ற தர்மமும் ஒரு வஸ்துவைச் சார்ந்துதான் இருக்கும். ஜடமான சரீராதி களுக்கு கர்தருத்வம் கிடையாது. ஆகவே அது ஆத்மாவைச் சேர்ந்ததுதான். இது அனுமானம். ச்வேதாச்வதர உபநிஷத்தில்

**गुणान्वयो यः फलकर्मकर्ता कृतस्य तस्यैव स चोपभोक्ता** (5-7)

**கு³ணான்வயோ ய: ப²லகர்மகர்தா க்ருதஸ்ய தஸ்யைவ ஸ சோபபோ⁴க்தா (5-7)**

என்று ஆத்மாவே கர்த்தா போக்தா என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஆரோபம் ஏற்பட முடியாததாலும் பல பிரமாணங்கள் இருப்பதாலும் கர்த்ருத்வம் முதலியவை முதலியவை ஆத்மாவுக்கு இயற்கையிலேயே உண்டு. **(51)**

**(அவதாரிகை)** குரு ஸமாதானம் கூறுகிறார்: -

**तं गुरुरुवाच न व्यभिचारात्। न हि वत्स! प्रसिद्धं प्रसिद्ध एवाध्यारोपयतीति नियन्तुं शक्यम्, आत्मनि अध्यारोपणदर्शनात् - गौरोऽहं, कृष्णोऽहमिति देहधर्मस्य**

**अहंप्रत्ययविषये आत्मनि, अहंप्रत्ययविषयस्य च आत्मनः देहे अयमहमस्मीति ॥ ५२ ॥**

**தம் கு³ருருவாச ந வ்யபி⁴சாராத் । ந ஹி வத்ஸ! ப்ரஸித்³த⁴ம் ப்ரஸித்³த⁴ ஏவாத்⁴யாரோபயதீதி நியந்தும் ஶக்யம், ஆத்மனி அத்⁴யாரோபணத³ர்ஶனுத் - கௌ³ரோ(அ)ஹம், க்ருஷ்ணோ(அ)ஹமிதி தே³ஹத⁴ர்மஸ்ய அஹம்ப்ரத்யய விஷயே ஆத்மனி, அஹம்ப்ரத்யயவிஷயஸ்ய ச ஆத்மன: தே³ஹே அயமஹம ஸ்மீதி ॥ 52 ॥**

| | | |
|---|---|---|
| **तं** <br> **தம்** | = | அவனைப் பார்த்து, |
| **गुरुः** <br> **கு³ரு:** | = | ஆசார்யர், |
| **उवाच** <br> **உவாச** | = | சொன்னுர், |
| **व्यभिचारात्** <br> **வ்யபி⁴சாராத்** | = | பாதகம் இருப்பதால், |
| **न** <br> **ந** | = | (நீ சொல்வது) சரியல்ல, |
| **वत्स** <br> **வத்ஸ** | = | குழந்தாய்! |
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **गौरः** <br> **கௌ³ர:** | = | வெளுப்பானவன், |
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **गौरः** <br> **கௌ³ர:** | = | கருப்பானவன், |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **देहधर्मस्य** <br> **தே³ஹத⁴ர்மஸ்ய** | = | சரீரத்தின் தர்மமான ரூபத்தை, |
| **अहंप्रत्ययविषये** <br> **அஹம்ப்ரத்யய விஷயே** | = | நான் என்ற அறிவிற்கு விஷயமான, |
| **आत्मनि** <br> **ஆத்மனி** | = | ஆத்மாவிலும், |

| | | |
|---|---|---|
| **अयं अहं अस्मि** | = | இந்த நான் இருக்கிறேன், |
| **அயம் அஹம் அஸ்மி** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **अहंप्रत्ययविषयस्य** | = | நான் என்ற அறிவுக்கு விஷயமான, |
| **அஹம்ப்ரத்யயவிஷயஸ்ய** | | |
| **आत्मनः** | = | ஆத்மாவை, |
| **ஆத்மன:** | | |
| **देहे च** | = | தேஹத்திலும் (இவ்வாறு), |
| **தே³ஹே ச** | | |
| **आत्मनि** | = | ஆத்மாவில், |
| **ஆத்மனி** | | |
| **अध्यारोपणदर्शनात्** | = | ஆரோபம் காணப்படுவதால், |
| **அத்⁴யாரோபணத³ர்ஶனாத்** | | |
| **प्रसिद्धं** | = | ப்ரஸித்தமான பொருளை, |
| **ப்ரஸித்³த⁴ம்** | | |
| **प्रसिद्धे एव** | = | பிரஸித்தமான பொருளில்தான், |
| **ப்ரஸித்³தே⁴ ஏவ** | | |
| **अध्यारोपयति** | = | ஆரோபம் செய்கிறான், |
| **அத்⁴யாரோபயதி** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **नियन्तुं** | = | கட்டுப்பாடு செய்வதற்கு, |
| **நியந்தும்** | | |
| **न हि शक्यम्** | = | முடியாது. |
| **ந ஹி ஶக்யம்** | | |

ப்ரஸித்தமான பொருளில்தான் ப்ரஸித்தமான பொருளுக்கு ஆரோபம் என்று சொல்பவரைப் பார்த்து இவ்வாறு கேட்கிறோம். அதிஷ்டானமும் ஆரோப்யமும் வெவ்வேறாகப் பிரித்துக் தெரிந்திருக்கவேண்டுமா அல்லது ஏதாவது ஓருவிதத்தில் தெரிந்தால் போதுமா? இரண்டாவது பக்ஷத்தில் ஆத்மாவுக்கும் சரீரத்துடன் சேர்ந்து ப்ரஸித்தி இருப்பதால் ஆரோபம் ஏற்படுவதில் தவறு இல்லை. வெவ்வேறாகப் பிரித்துத் தெரியாவிட்டாலும் ஆரோபம் ஏற்படுவதைக் கண்டிருப்பதால் முதல் பக்ஷமும் சரியல்ல. அதாவது 'நான் வெளுப்பு, நான் கருப்பு' என்று சொல்கிறோம். தேஹத்தைக்காட்டிலும் ஆத்மா வேறு என்று சொல்லும் வாதிகள் எல்லோரும் இதை ப்ராந்தி என்று சொல்கிறார்கள். கருப்பு, வெளுப்பு முதலிய நிறங்கள் ஆத்மாவுக்குக் கிடையாது அவை சரீரத்தைச் சேர்ந்தவை. இவை நான் என்று கூறப்படும் ஆத்மாவில் ஆரோபம் செய்யப்படுகின்றன. இதுபோல 'நான் இருக்கி

றேன்' 'நான் அறிகிறேன்' என்று ஆத்மதர்மமான ஸத்தை ஞானங்கள் தேஹத்தில் ஆரோபம் செய்யப்படுகின்றன. இங்கு தேஹத்தையும் ஆத்மாவையும் பிரித்துத் தனித்தனியாகத் தெரிந்துகொள்ளாவிட்டாலும் தேஹத்துடன் சேர்ந்து ஆத்மாவுக்கு ப்ரஸித்தி இருப்பதைக் கொண்டு ஆரோபம் ஏற்படுகிறது. இதுபோல கர்த்ருத்வம் போக்த்ருத்வம் என்ற ஸம்ஸாரமும் அவித்யையால் ஆத்மாவில் ஆரோபிதமே தவிற ஆத்மாவுக்கு இயற்கையிலே கிடையாது. நீ கூறிய பிரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் இவைகள் அந்தக்கரண விசிஷ்டமான ஆத்மாவைத்தான் கர்த்தாவாகவும் போக்தாவாகவும் காட்டுகின்றன. இவைகளைக்கொண்டு சுத்தமான ஆத்மாவுக்கு கர்த்ருத்வம் முதலியவை இருப்பதாகக் கூறமுடியாது. ஏனெனில் அந்தக்கரணத் துடன் சேர்ந்திருக்கும்பொழுதுதான் இவை தோன்றுகின்றன. ஸுஷுப்தியில் தோன்றுவதில்லை. ஆகவே ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்துத் தெரிந்து கொள்ளாவிட்டாலும் ரூபத்தைப்போல் கர்த்ருத்வத்திற்கும் ஆத்மாவில் ஆரோபம் ஏற்படலாம். **(52)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறுன்: -

**शिष्य आह - प्रसिद्ध एव तर्हि आत्मा अहंप्रत्ययविषयतया, देहश्चायमिति । तत्रैवं सति प्रसिद्धयोरेव देहात्मनोः इतरेतराध्यारोपणा स्थाणुपुरुषयोः शुक्तिकारजतयोरिव । तत्र कं विशेषमाश्रित्य भगवतोक्तं प्रसिद्धयोरितरेतराध्यारोपणेति नियन्तुं न शक्यते इति ॥ ५३ ॥**

**ஶிஷ்ய ஆஹ - ப்ரஸித்³த⁴ ஏவ தர்ஹி ஆத்மா அஹம்ப்ரத்யயவிஷயதயா, தே³ஹஶ்சாயமிதி । தத்ரைவம் ஸதி ப்ரஸித்³த⁴யோரேவ தே³ஹாத்மனோ: இதரேதராத்⁴யாரோபணா ஸ்தா²ணுபுருஷயோ: ஶுக்திகாரஜதயோரிவ । தத்ர கம் விஶேஷமாஶ்ரித்ய ப⁴க³வதோக்தம் ப்ரஸித்³த⁴யோரிதரேதராத்⁴யாரோபணேதி நியந்தும் ந ஶக்யதே இதி ॥ 53 ॥**

**शिष्यः** = சிஷ்யன்,

**ஶிஷ்ய:**

**आह** = சொல்கிறுன்,

**ஆஹ**

**तर्हि** = அப்படியாஞல்,

**தர்ஹி**

**अहंप्रत्ययविषयतया** = நான் என்ற அறிவுக்கு விஷயமாக,

**அஹம்ப்ரத்யயவிஷயதயா**

**आत्मा** = ஆத்மாவும்,

**ஆத்மா**

**अयं इति** = இது என்று,

**அயம் இதி**

**देहश्चा** = தேஹமும்,
**தே³ஹ**

**प्रसिद्ध एव** = ப்ரஸித்தமானதுதான்,
**ப்ரஸித்³த⁴ ஏவ**

**तत्र एवं सति** = அது இவ்வாறு இருக்கும்பொழுது,
**தத்ர ஏவம் ஸதி**

**स्थाणुपुरुषयो:** = மரக்கட்டைக்கும் புருஷனுக்கும்போலவும்,
**ஸ்தா²ணுபுருஷயோ:**

**शुक्तिकारजतयोरिव** = கிளிஞ்சலுக்கும் வெள்ளிக்கும்போலவும்,
**ஶுக்திகாரஜதயோரிவ**

**प्रसिद्धयो:** = ப்ரஸித்தமான,
**ப்ரஸித்³த⁴யோ:**

**देहात्मनोरेव** = தேஹத்திற்கும் ஆத்மாவிற்கும்தான்,
**தே³ஹாத்மனோரேவ**

**इतरेतराध्यारोपणा** = ஒன்றுக்கொன்று ஆரோபம்,
**இதரேதராத்⁴யாரோபணா**

**तत्र** = அதில்,
**தத்ர**

**कं विशेषमाश्रित्य** = எந்த விசேஷத்தைக்கொண்டு,
**கம் விஶேஷமாஶ்ரித்ய**

**प्रसिद्धयो:** = ப்ரஸித்தமான இரு பொருள்களுக்கு,
**ப்ரஸித்³த⁴யோ:**

**इतरेतराध्यारोपणा** = ஒன்றுக்கொன்று ஆரோபம்,
**இதரேதராத்⁴யாரோபணா**

**इति** = என்று,
**இதி**

**नियन्तुं** = கட்டுப்பாடு செய்வதற்கு,
**நியந்தும்**

**न शक्यते** = முடியாது,
**ந ஶக்யதே**

**इति** = என்று,
**இதி**

**भगवता** = தங்களால்,
**ப⁴க³வதா**

**उक्तम्** = சொல்லப்பட்டது.
**உக்தம்**

நான் என்று ஆத்மாவும் இது என்று தேஹமும் எல்லோருக்கும் ப்ரஸித்தமா யிருப்பதால்தான் தேஹத்தின் தர்மங்களான வெளுப்பு, கருப்பு முதலான நிறங்கள் ஆத்மாவில் ஆரோபம் செய்யப்படுகின்றன. இதேபோல கர்த்தாவான அந்தக்கரண மும் சுத்தமான ஆத்மாவும் ப்ரஸித்தமாயிருந்தால் கர்த்ருத்வம் ஆத்மாவில் ஆரோ பிதம் என்று சொல்லலாம். ஒருவருக்காவது ஆத்மா ப்ரஸித்தமில்லை. ஆதலால் கர்த்ருத்வம் ஆரோபிதம் என்று கூற முடியாது. குரு கூறிய திருஷ்டாந்தத்திலும் கிளிஞ்சல் வெள்ளிகளுக்குப்போல் ப்ரஸித்தமான தேஹ - ஆத்மாக்களுக்கே ஆரோபம் ஏற்படுவதால் "ப்ரஸித்தமானவைகளுக்குத்தான் ஆரோபம்" என்ற நியமத் திற்கு பாதகம் இல்லை. கர்த்தாவல்லாத ஆத்மா ப்ரஸித்தமில்லாததால் முன் கூறிய நியமப்படி கர்த்ருத்வம் ஆரோபிதம் இல்லை; ஆத்மாவைச் சேர்ந்ததுதான் என்று சிஷ்யன் கூறினன்.

**गुरुराह शृणु सत्यं प्रसिद्धौ देहात्मानौ न तु स्थाणुपुरुषाविव विविक्तप्रत्ययविषयतया सर्वलोकप्रसिद्धौ । कथं तर्हि? नित्यमेव निरन्तराविविक्तप्रत्ययविषयतया प्रसिद्धौ । न हि अयं देहः, अयं आत्मा इति विविक्ताभ्यां प्रत्ययाभ्यां देहात्मानौ गृह्णाति यः कश्चित् । अत एव हि मोमुह्यते लोक आत्मानात्मविषये - एवमात्मा नैवमात्मेति । इमं विशेषमाश्रित्य अवोचं नैवं नियन्तुं शक्यमिति ॥ ५४ ॥**

**கு³ருராஹ ஶ்ருணு ஸத்யம் ப்ரஸித்³தௌ⁴ தே³ஹாத்மானௌ ந து ஸ்தா²ணுபுருஷாவிவ விவிக்தப்ரத்யயவிஷயதயா ஸர்வலோகப்ரஸித்³தௌ⁴ । கத²ம் தர்ஹி? நித்யமேவ நிரந்தராவிவிக்தப்ரத்யயவிஷயதயா ப்ரஸித்³தௌ⁴ । ந ஹி அயம் தே³ஹ:, அயம் ஆத்மா இதி விவிக்தாப்⁴யாம் ப்ரத்யயாப்⁴யாம் தே³ஹாத்மானௌ க்³ருஹ்ணாதி ய: கஶ்சித் । அத ஏவ ஹி மோமுஹ்யதே லோக ஆத்மானாத்மவிஷயே - ஏவமாத்மா நைவமாத்மேதி । இமம் விஶேஷமாஶ்ரித்ய அவோசம் நைவம் நியந்தும் ஶக்யமிதி ॥ 54 ॥**

**गुरुराह** = குரு சொல்கிறார்,

**கு³ருராஹ**

**शृणु** = கேள்,

**ஶ்ருணு**

**सत्यं** = வாஸ்தவம்,

**ஸத்யம்**

**देहात्मानौ** = தேஹமும் ஆத்மாவும்,

**தே³ஹாத்மானௌ**

**प्रसिद्धौ** = ப்ரஸித்தமானவைகள்,

**ப்ரஸித்³தௌ⁴**

**तु** = ஆனால்,

**து**

| | | |
|---|---|---|
| **स्थाणुपुरुषाविव** | = | மரக்கட்டையும் புருஷனும் போல, |
| **ஸ்தா²ணுபுருஷாவிவ** | | |
| **विविक्तप्रत्ययविषयतया** | = | தனித்தனியாக வெவ்வேறு ஞானங்களுக்கு |
| **விவிக்தப்ரத்யயவிஷயதயா** | | விஷயமாக, |
| **सर्वलोकप्रसिद्धौ** | = | எல்லா ஜனங்களுக்கும் ப்ரஸித்தமாக, |
| **ஸர்வலோகப்ரஸித்³தௌ⁴** | | |
| **न** | = | இல்லை, |
| **ந** | | |
| **कथं तर्हि** | = | பின் எப்படியெனில், |
| **கத²ம் தர்ஹி** | | |
| **नित्यमेव** | = | எப்பொழுதுமே, |
| **நித்யமேவ** | | |
| **निरन्तराविविक्तप्रत्ययविषयतया** | = | பிரிக்கமுடியாதபடி கலந்துள்ள ஞானத்திற்கு |
| **நிரந்தராவிவிக்தப்ரத்யயவிஷயதயா** | | விஷயமாக, |
| **प्रसिद्धौ** | = | ப்ரஸித்தமாக இருக்கின்றன, |
| **ப்ரஸித்³தௌ⁴** | | |
| **अयं देहः** | = | இது சரீரம், |
| **அயம் தே³ஹ:** | | |
| **अयं आत्मा** | = | இது ஆத்மா, |
| **அயம் ஆத்மா** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **विविक्ताभ्यां** | = | தனித்தனியான, |
| **விவிக்தாப்⁴யாம்** | | |
| **प्रत्ययाभ्यां** | = | ஞானங்களால், |
| **ப்ரத்யயாப்⁴யாம்** | | |
| **देहात्मानौ** | = | தேஹத்தையும் ஆத்மாவையும், |
| **தே³ஹாத்மானௌ** | | |
| **यः कश्चित्** | = | ஒருவனாவது, |
| **ய: கஶ்சித்** | | |
| **न हि गृह्णाति** | = | அறிந்துகொள்கிறதில்லையல்லவா! |
| **ந ஹி க்³ருஹ்ணாதி** | | |
| **अत एव हि** | = | ஆகையினால்தான், |
| **அத ஏவ ஹி** | | |
| **लोकः** | = | லோகம், |
| **லோக:** | | |

| | | |
|---|---|---|
| **आत्मानात्मविषये**<br>**ஆத்மாஞத்மவிஷயே** | = | ஆத்மா, அநாத்மா இவைகளின் விஷயத்தில், |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மா, |
| **एवं**<br>**ஏவம்** | = | இவ்விதமானது, |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மா, |
| **एवं न**<br>**ஏவம் ந** | = | இவ்விதமானதில்ல, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **मोमुह्यते**<br>**மோமுஹ்யதே** | = | மிகவும் மோஹத்தை அடைகிறது, |
| **इमं विशेषं आश्रित्य**<br>**இமம் விஶேஷம் ஆஶ்ரித்ய** | = | இந்த விசேஷத்தைக்கொண்டு, |
| **एवं**<br>**ஏவம்** | = | இவ்வாறு, |
| **नियन्तुं**<br>**நியந்தும்** | = | கட்டுப்பாடு செய்வதற்கு, |
| **न शक्यं**<br>**ந ஶக்யம்** | = | முடியாது, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **अवोचं**<br>**அவோசம்** | = | சொன்னேன். |

பிரஸித்தமான இரண்டுர வஸ்துக்களுக்குத்தான் ஆரோபம் ஏற்படும் என்று சிஷ்யன் சொன்ஞன். இவ்வாறு நியமம் சொல்லமுடியாது. ப்ரஸித்தி இல்லா விட்டாலும் ஆரோபம் ஏற்படலாம் என்பதை திருஷ்டாந்தத்துடன் குரு காட்டிஞர். அங்கும் ப்ரஸித்தி இருப்பதாக சிஷ்யன் கூறிஞன். இதற்குமேல் குரு கூறுகிறர். நீ சொல்லியபடி தேஹத்துக்கும் ஆத்மாவுக்கும் ப்ரஸித்தி இருப்பது வாஸ்தவம்தான் ஆஞல் இதில் ஓர் விசேஷம் இருக்கிறது. மரக்கட்டையைப் பார்த்து மனிதன் என்று பிராந்தி அடையும் இடத்தில் இவ்விரண்டையும் தனித்தனியாக வெவ்வேறு இடங்க ளில் பார்த்துத் தெரிந்துகொண்டிருக்கிறன். அதுபோல தேஹத்தையும் ஆத்மாவை யும் தனித்தனியாக இது தேஹம் இது ஆத்மா என்று ஒருவரும் தெரிந்து கொண்டதில்ல. ஸ்பஷ்டமாகப் பிரித்துத் தெரிந்துகொண்டோமாஞல் ஆத்மாவைப் பற்றின ஸந்தேமோ விபரீத ஞானமோ ஒருவருக்கும் இருக்காது. ஆஞல் ஆத்மா

வைப் பற்றிப் பேசும்பொழுது படித்தவர்களில் கூட ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகக் கூறுகின்றனர். தேஹம் ஆத்மா, இந்திரியம் ஆத்மா, மனது ஆத்மா; ஆத்மா கர்த்தா, அகர்த்தா, ஸகுணம், நிர்குணம், வியாபகன், பரிச்சின்னன் இவ்வா றெல்லாம் வாதிகள் பலவிதமாகக் கூறுவதால் ஆத்மாவின் ஸ்வரூபத்தைத் தனியாகப் பிரித்து ஒருவரும் தெரிந்துகொள்ளவில்லை என்று தெரிகிறது. பிரித்துத் தனியாகத்தெரிந்துகொள்ளாவிட்டாலும் 'நான் கருப்பு, நான் சிகப்பு' என்று தேஹ தர்மங்களுக்கு ஆத்மாவில் ஆரோபம் ஏற்படுகிறது. இதைக்கொண்டுதான் சொன்னேன் - பிரஸித்தி இருந்தால்தான் ஆரோபம் என்று நியமம் கிடையாது என்று. ஆகவே ஆரோபம் ஏற்படுவதற்கு, தனியாக பிரஸித்தி இல்லாமல் போனாலும் பிறவற்றுடன் சேர்ந்தாவது பிரஸிதத்தி இருந்தால் போதும் என்று ஒப்புக்கொள்ள வேண்டும். மனதுடன் சேர்ந்து ஆத்மாவுக்கும் பிரஸித்தி இருப்பதைக் கொண்டு மனத்திலுள்ள கர்த்ருத்வாதி தர்மங்களுக்கு ஆத்மாவில் ஆரோபம் ஏற்படுகிறது; உண்மையில் ஆத்மா அகர்த்தாதான். **(54)**

**(அவதாரிகை)** ஆத்வாவுக்கும் தேஹத்திற்கும் ஒன்றுக்கொன்று அத்யாஸம் ஸம்பவிக்காது என சிஷ்யன் கேட்கிறுன்: -

**ननु अविद्याध्यारोपितं यत्र यत्, तदसत् तत्र दृष्टम् । यथा रजतं शुक्तिकायां स्थाणौ पुरुषः, रज्ज्वां सर्पः, आकाशे तलमलिनत्वमित्यादि । तथा देहात्मनोरपि नित्यमेव निरन्तरविविक्तप्रत्ययेन इतरेतराध्यारोपणा कृता स्यात् । तदितरेतर योर्नि त्यमेव असत्वं स्यात् । यथा शुक्तिकादिषु अविद्याध्यारोपितानां रजतादीनां नित्यमेव अत्यन्तासत्वम्, तद्विपरीतानां च विपरीतेषु तद्वत् देहात्मनोः अविद्ययैव इतरेतरा ध्यारोपणा कृता स्यात् । तत्रैवं सति देहात्मनोरसत्वं प्रसज्येत । तच्चानिष्टम्, वैनाशि कपक्षत्वात् । अथ तद्विपर्ययेण देह आत्मनि अविद्यया अध्यारोपितः, देहस्य आत्मनि सति असत्वं प्रसज्येत । तच्चानिष्टं, प्रत्यक्षादिविरोधात् । तस्मात् देहात्मानौ न अविद्य या इतरेतरस्मिन् अध्यारोपितौ । कथं तर्हि? वंशस्तम्भवत् नित्यसंयुक्तौ ॥ ५५ ॥**

**நனு அவித்³யாத்⁴யாரோபிதம் யத்ர யத், தத³ஸத் தத்ர த்³ருஷ்டம் । யதா² ரஜதம் ஶுக்திகாயாம் ஸ்தா²ணௌ புருஷ:, ரஜ்ஜ்வாம் ஸர்ப:, ஆகாஶே தலமலினத்வ- மித்யாதி³ । ததா² தே³ஹாத்மனோரபி நித்யமேவ நிரந்தரவிவிக்தப்ரத்யயேன இதரேதராத்⁴யாரோபணா க்ருதா ஸ்யாத் । ததி³தரேதரயோர் நித்யமேவ அஸத்வம் ஸ்யாத் । யதா² ஶுக்திகாதி³ஷு அவித்³யாத்⁴யாரோபிதானாம் ரஜதாதீ³னாம் நித்யமேவ அத்யந்தா- ஸத்வம், தத்³விபரீதானாம் ச விபரீதேஷு தத்³வத் தே³ஹாத்மனோ: அவித்³யயைவ இதரேதராத்⁴யாரோபணா க்ருதா ஸ்யாத் । தத்ரைவம் ஸதி தே³ஹாத்மனோரஸத்வம் ப்ரஸஜ்யேத । தச்சாநிஷ்டம், வைநாஶிகபக்ஷத்வாத் । அத² தத்³விபர்யயேண தே³ஹ ஆத்மனி அவித்³யயா அத்⁴யாரோபித:, தே³ஹஸ்ய ஆத்மனி ஸதி அஸத்வம் ப்ரஸஜ்யேத । தச்சாநிஷ்டம், ப்ரத்யக்ஷாதி³விரோதா⁴த் । தஸ்மாத் தே³ஹாத்மானௌ ந**

**அவித்³யயா இதரேதரஸ்மின் அத்⁴யாரோபிதௌ । கத²ம் தர்ஹி? வம்ஶஸ்தம் ப⁴வத் நித்யஸம்யுக்தௌ ॥ 55 ॥**

**यत्र** = எதில்,

**யத்ர**

**यत्** = எந்தப்பொருள்,

**யத்**

**अविद्याध्यारोपितं** = அஞானத்தால் ஆரோபம் செய்யப்பட்டிருக்கிறதோ,

**அவித்³யாத்⁴யாரோபிதம்**

**तत्र** = அதில்,

**தத்ர**

**तत्** = அந்தப்பொருள்,

**தத்**

**असत्** = இல்லாததாக,

**அஸத்**

**दृष्टम्** = காணப்பட்டிருக்கிறது,

**த்³ருஷ்டம்**

**यथा** = எவ்விதம்,

**யதா²**

**शुक्तिकायां** = கிளிஞ்சலில்,

**ஶுக்திகாயாம்**

**रजतं** = வெள்ளி,

**ரஜதம்**

**स्थाणौ** = மரக்கட்டையில்,

**ஸ்தா²ணௌ**

**पुरुषः** = மனிதன்,

**புருஷ:**

**रज्ज्वां** = கயிற்றில்,

**ரஜ்ஜ்வாம்**

**सर्पः** = பாம்பு,

**ஸர்ப:**

**आकाशे** = ஆகாசத்தில்,

**ஆகாஶே**

**तलमलिनत्वं** = மேலே பரந்து கவிந்திருத்தல், அழுக்கு,

**தலமலினத்வம்**

**इत्यादि** = இது முதலானவை,

**இத்யாதி³**

**तथा** = அவ்விதமே,
**ததா²**

**देहात्मनोरपि** = தேஹம், ஆத்மா இவ்விரண்டுக்கும்,
**தே³ஹாத்மனோரபி**

**नित्यमेव** = எப்பொழுதும்,
**நித்யமேவ**

**निरन्तरविविक्तप्रत्ययेन** = வேற்றுமையல்லாத ஒன்றுகச் சேர்ந்துள்ள
**நிரந்தரவிவிக்தப்ரத்யயேன** ஒரே ஞானத்தால்,

**इतरेतराध्यारोपणा** = ஒன்றுக்கொன்று ஆரோபம்,
**இதரேதராத்⁴யாரோபணு**

**कृता स्यात्** = செய்யப்படுமாஞல்,
**க்ருதா ஸ்யாத்**

**तत्** = அதில்,
**தத்**

**इतरेतरायोः** = ஒவ்வொன்றிற்கும்,
**இதரேதராயோ:**

**नित्यमेव** = எப்பொழுதும்,
**நித்யமே**

**असत्वं** = இல்லாத்தன்மை,
**அஸத்வம்**

**स्यात्** = ஏற்படும்,
**ஸ்யாத்**

**यथा** = எவ்வாறு,
**யதா²**

**शुक्तिकादिषु** = கிளிஞ்சல் முதலியவைகளில்,
**ஶுக்திகாதி³ஷு**

**अविद्याध्यारोपितानां** = அவித்யையால் ஆரோபிக்கப்பட்ட,
**அவித்³யாத்⁴யாரோபிதாஞம்**

**रजतादीनां** = வெள்ளி முதலியவைகளுக்கு,
**ரஜதாதீ³ஞம்**

**नित्यमेव** = எப்பொழுதும்,
**நித்யமேவ**

**अत्यन्तासत्वं** = மிகவும் இல்லாதிருக்கும் தன்மையோ,
**அத்யந்தாஸத்வம்**

**तद्विपरीतानां च** = அதற்கு எதிரிடையானவைகளுக்கும்,
**தத்³விபரீதாஞம் ச**

| | | |
|---|---|---|
| **विपरीतेषु**<br>**விபரீதேஷு** | = | அதற்கு எதிரிடையானவைகளில் (அஸத்வமோ), |
| **तद्वत्**<br>**தத்³வத்** | = | அதுபோல, |
| **देहात्मनोः**<br>**தே³ஹாத்மனோ:** | = | தேஹத்திற்கும் ஆத்மாவுக்கும், |
| **अविद्ययैव**<br>**அவித்³யயைவ** | = | அவித்யையினாலேயே, |
| **इतरेतराध्यारोपणा**<br>**இதரேதராத்⁴யாரோபணா** | = | ஒன்றுக்கொன்று ஆரோபம், |
| **कृता स्यात्**<br>**க்ருதா ஸ்யாத்** | = | செய்யப்பட்டதாக ஆகும், |
| **तत्रैवं सति**<br>**தத்ரைவம் ஸதி** | = | அது இவ்விதமாக இருக்கும்பொழுது, |
| **देहात्मनोः**<br>**தே³ஹாத்மனோ:** | = | தேஹம், ஆத்மா இரண்டுக்கும், |
| **असत्वं**<br>**அஸத்வம்** | = | இல்லாமை, |
| **प्रसज्येत**<br>**ப்ரஸஜ்யேத** | = | ஏற்பட்டு விடும், |
| **तच्च**<br>**தச்ச** | = | அது, |
| **वैनाशिकपक्षत्वात्**<br>**வைநாஶிகபக்ஷத்வாத்** | = | பௌத்தருடைய மதமாக இருப்பதால், |
| **अनिष्टं**<br>**அநிஷ்டம்** | = | ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல, |
| **अथ**<br>**அத²** | = | அல்லது, |
| **तद्विपर्ययेण**<br>**தத்³விபர்யயேண** | = | அதற்கு மாறுதலாக, |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | ஆத்மாவில், |
| **अविद्यया**<br>**அவித்³யயா** | = | அவித்யையால், |
| **देहः**<br>**தே³ஹ:** | = | தேஹம், |

| | | |
|---|---|---|
| **अध्यारोपित:**<br>**அத்⁴யாரோபித:** | = | ஆரோபிக்கப்பட்டதானுல், |
| **आत्मनि सति**<br>**ஆத்மனி ஸதி** | = | ஸத்தான ஆத்மாவில், |
| **देहस्य**<br>**தே³ஹஸ்ய** | = | தேஹத்திற்கு, |
| **असत्वं**<br>**அஸத்வம்** | = | இல்லாமை, |
| **प्रसज्येत**<br>**ப்ரஸஜ்யேத** | = | ஏற்பட்டுவிடும், |
| **प्रत्यक्षादिविरोधात्**<br>**ப்ரத்யக்ஷாதி³விரோதா⁴த்** | = | பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களுக்கு விருத்தமாயிருப்பதால், |
| **तच्च**<br>**தச்ச** | = | அதுவும், |
| **अनिष्टं**<br>**அநிஷ்டம்** | = | இஷ்டமில்லை, |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **देहात्मानौ**<br>**தே³ஹாத்மானௌ** | = | தேஹமும் ஆத்மாவும், |
| **अविद्यया**<br>**அவித்³யயா** | = | அவித்யையால், |
| **इतरेतरस्मिन्**<br>**இதரேதரஸ்மின்** | = | ஒன்றுக்கொன்று, |
| **नाध्यारोपितौ**<br>**நாத்⁴யாரோபிதௌ** | = | ஆரோபம் செய்யப்பட்டவை அல்ல, |
| **कथं तर्हि**<br>**கத²ம் தர்ஹி** | = | அப்படியானுல் எவ்வாறு எனில், |
| **वंशस्तम्भवत्**<br>**வம்ஶஸ்தம்ப⁴வத்** | = | மூங்கிலும் தூணும்போல், |
| **नित्यसंयुक्तौ**<br>**நித்யஸம்யுக்தௌ** | = | எப்பொழுதும் சேர்ந்துள்ளவை. |

தேஹத்திற்கும் ஆத்மாவுக்கும் பிரிக்கமுடியாதபடி சேர்ந்தே ப்ரதீதி ஏற்படுவதைக் கொண்டு இரண்டும் ஒன்றுக்கொன்று, அதாவது தேஹம் ஆத்மாவிலும் ஆத்மா தேஹத்திலும் ஆரோபிதம் என்று சொல்வது சரியல்ல என்பதைக் காரணங்களுடன் சிஷ்யன் காட்டுகிறுன். எந்தப் பொருள் அவித்யையால் எதில் ஆரோபிதமோ அது அதில் அஸத்து - இல்லை - என்பதை உலகில் பல இடங்களில் கண்டிருக்கிறோம்.

அக்ஞானத்தால் கிளிஞ்சலில் தோன்றிய வெள்ளி, மரக்கட்டையில் தோன்றிய புருஷன், கயிற்றில் தோன்றிய பாம்பு இவை எல்லாம் அந்தந்த இடத்தில் அஸத்தாகத்தான் உள்ளது அதேபோல் தேஹம் ஆத்மாவிலும், ஆத்மா தேஹத்தி லும் ஆரோபிதம் என்று சொல்வதாயிருந்தால் கிளிஞ்சலில் வெள்ளிபோல் எட்பொழுதும் தேஹமும் ஆத்மாவும் அஸத் என்று ஆகிவிடும். பௌத்தர் ஒருவரை த்தவிற வேறு ஒருவரும் ஆத்மாவை அஸத்தாக ஒப்புக்கொள்ளவில்லை. எல்லோருடைய ஸித்தாந்தத்திற்கும் விருத்தமாக தேஹமும் ஆத்மாவும் அஸத் தாக ஆகுப்படி அவைகளுக்கு ஆரோபம் சொல்வது யுக்தம் அல்ல. இதற்காக ஆத்மா விற்கு ஆரோபம் சொல்லாமல் தேஹத்திற்கு மட்டும் ஆரோபம் சொல்வதும் சரியல்ல. தேஹம் ஆரோபிதமானல் முன்சொன்ன நியாயப்படி தேஹம் அஸத்தாக ஆகும். பிரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களாலோ தேஹம் ஸத் என்று தெரிகிறது. ஆகவே பிரமாண விருத்தமாக இருப்பதால் தேஹத்திற்கும் ஆரோபம் சொல்ல முடியாது. ஆகையால தேஹம், ஆதமா இரண்டும் அவித்யையால் ஆரோபிதம் அல்ல. அப்படியானல் தேஹம், ஆத்மா இரண்டும் சேர்ந்து 'நான் மனுஷ்யன்' என்ற ஒரே ஞானம் வருவது எப்படியென்று கேட்கலாம். அதற்கு சிஷ்யன் இவ்வாறு ஸமாதானம் கூறுகிறன். கீழே தூண்களை நட்டு அதன்மேல் மூங்கில்களைப் பரப்புகி றர்கள். இரண்டும் வெவ்வேறனலும் தூண் ஆதாரமாகவும், மூங்கில் ஆதேயமாக வும் ஸமயோக ஸம்பந்தத்தால் சேர்ந்திருக்கிறது. இரண்டையும் சேர்த்து 'கிருஹம்' என்று சொல்கிறேம். இதுபோல ஆத்மாவும் தேஹமும் பிரியாமல் எப்பொழுதுமே சேர்ந்திருப்பதால் இரண்டையும் சேர்த்து 'நான் மனுஷ்யன்' என்ற ஞானம் ஏற்படுகிறது. **(55)**

**(அவதாரிகை)** சிஷ்யன் சொன்னது தவறு என்பதை குரு காட்டுகிறர்: -

**न, अनित्यत्वपरार्थत्वप्रसङ्गात् । संहतत्वात् परार्थत्वं अनित्यत्वं च वंशस्तम्भादिवदेव । किंच यस्तु परैर्देहेन संहतः कल्पित आत्मा स संहतत्वात् परार्थः । तेन असंहतः परोऽन्यो नित्यः सिद्धस्तावत् ॥ ५६ ॥**

**ந, அநித்யத்வபரார்த²த்வப்ரஸங்கா³த் । ஸம்ஹதத்வாத் பரார்த²த்வம் அநித்யத்வம் ச வம்ஶஸ்தம்பா⁴தி³வதே³வ । கிஞ்ச யஸ்து பரைர்தே³ஹேன ஸம்ஹத: கல்பித ஆத்மா ஸ ஸம்ஹதத்வாத் பரார்த²: । தேன அஸம்ஹத: பரோ(அ)ன்யோ நித்ய: ஸித்³த⁴ஸ்தாவத் ॥ 56 ॥**

| | | |
|---|---|---|
| **अनित्यत्व** அநித்யத்வ | = | அழிந்து போகும் தன்மை, |
| **परार्थत्व** பரார்த²த்வ | = | பிறரின் பிரயோஜனத்திற்காக ஏற்பட்டிருக்கும் தன்மை இவை, |
| **प्रसङ्गात्** ப்ரஸங்கா³த் | = | ஏற்படக்கூடுமானதால், |

| | | |
|---|---|---|
| **न**<br>**ந** | = | நீ சொன்னது சரியல்ல, |
| **संहतत्वात्**<br>**ஸம்ஹதத்வாத்** | = | சேர்ந்திருப்பதால், |
| **वंशस्तम्भादिवदेव**<br>**வம்ஶஸ்தம்பா⁴தி³வதே³வ** | = | மூங்கில், தூண் இவைகளுக்குப்போலவே, |
| **परार्थत्वं**<br>**பரார்த²த்வம்** | = | பிறரின் பிரயோஜனத்திற்காக இருக்கும் தன்மையும், |
| **अनित्यत्वं च**<br>**அநித்யத்வம் ச** | = | அழிந்து போகும் தன்மையும் ஏற்படும், |
| **किंच**<br>**கிஞ்ச** | = | மேலும், |
| **यस्तु आत्मा**<br>**யஸ்து ஆத்மா** | = | எந்த ஆத்மா, |
| **परै**<br>**பரை** | = | பிறர்களால், |
| **देहेन संहत:**<br>**தே³ஹேன ஸம்ஹத:** | = | தேஹத்துடன் சேர்ந்தவனாக, |
| **कल्पित:**<br>**கல்பித:** | = | கல்பிக்கப்பட்டிருக்கிறானோ, |
| **स:**<br>**ஸ:** | = | அவன், |
| **संहतत्वात्**<br>**ஸம்ஹதத்வாத்** | = | சேர்ந்திருப்பதால், |
| **परार्थ:**<br>**பரார்த²:** | = | பிறரின் பிரயோஜனத்திற்காக இருப்பவன், |
| **तेन**<br>**தேன** | = | அதனோடு, |
| **असंहत:**<br>**அஸம்ஹத:** | = | சேராதவனாகவும், |
| **पर:**<br>**பர:** | = | வேறானவனாகவும், |
| **अन्य:**<br>**அன்ய:** | = | மாறுபட்ட ஸ்வபாவமுள்ளவனாகவும், |
| **नित्य:**<br>**நித்ய:** | = | அழிவில்லாதவனாகவும், |

**सिद्धः** = ஆத்மா ஸித்தித்து விட்டான்.
**ஸித்³த⁴:**

உலகில் பலபொருள்கள் ஒன்று சேர்ந்து கூடியிருக்கும் இடத்தில் அந்தப் பொருள்கள் ஒரு காலத்தில் பிரிந்து அழிந்து போவதைப் பார்த்திருக்கிறோம். கூட்டாகச் சேர்ந்துள்ள இந்தப் பொருள்களெல்லாம் இந்தக் கூட்டில் சேராத வேறொருவனுடைய பிரயோஜனத்திற்காக ஏற்பட்டிருப்பதையும் கண்டிருக்கிறோம்.

**संहतानां परार्थत्वं**

**ஸம்ஹதாநாம் பரார்த²த்வம்**

என்பது நியாயம். மூங்கில் தூண் மற்றும் பல பொருள்கள் சேர்ந்து தான் வீடாக ஆகிறது. பின்னால் இந்தப் பொருள்கள் அழிந்துபோகின்றன. இந்தக் கூட்டத்தில் சேராத இவைகளைக் காட்டிலும் வேறான சேதனன்தான் இந்தப்பொருள்களால் ஏற்படும் பிரயோஜனத்தைப் பெறுகின்றான். ஆகவே பிறருக்காக ஏற்பட்ட இந்தப் பொருள்கள் ஜடமாகவும் இருக்கின்றன. சரீரக்கூட்டத்தில் ஆத்மாவும் சேர்ந்திருக்குமானால், சரீரம்போல் ஆத்மாவும் அழிந்துபோகும். அழியும் பொருளை ஆத்மா எனக் கூறினால் தேஹத்தையே ஆத்மா வெனக்கூறும் சார்வாகனுடைய ஸித்தாந்தத்தை ஒப்புக் கொண்டதாக ஆகும். சார்வாகனைத்தவிற வேறு ஒருவரும் ஆத்மாவை அநித்யமாக அங்கீகரிப்பதில்லை. மேலும் சரீரத்தைப்போல ஆத்மாவும் பிறரின் பிரயோஜனத்திற்காக ஏற்பட்டதாக ஆகும். அப்பொழுது ஆத்மாவை ஜடம் என ஒப்புக்கொள்ள வேண்டிவரும். எல்லோரும் ஆத்மாவை சேதனமாகத்தான் கூறுகின்றனர். ஆகையால் நித்யமாயும் சேதனனாயுமுள்ள ஆத்மாவை தேஹத்துடன் சேராதவனாகவும் இந்த சேதனனான ஆத்மாவின் பிரயோஜனத்திற்காகவே தேஹம் இருப்பதையும் எல்லோரும் எப்படியாவது ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆகையால் தூணும் மூங்கிலும் போல தேஹமும் ஆத்மாவும் சேர்ந்திருப்பதாகக் கூறுவது சரியல்ல. **(56)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறான்: -

**तस्य असंहतस्य देहे देहमात्रतयाऽध्यारोपितत्वेन**
**असत्वानित्यस्वादिदोषप्रसङ्गो भवति ।**
**तत्र निरात्मको देह इति वैनाशिकपक्षप्राप्तिदोषः स्यात् ॥ ५७ ॥**

**தஸ்ய அஸம்ஹதஸ்ய தே³ஹே தே³ஹமாத்ரதயா(அ)த்⁴யாரோபிதத்வேந**
**அஸத்வாநித்யஸ்வாதி³தோ³ஷப்ரஸங்கோ³ ப⁴வதி ।**
**தத்ர நிராத்மகோ தே³ஹ இதி வைநாஶிகபக்ஷப்ராப்திதோ³ஷ: ஸ்யாத் ॥ 57 ॥**

**असंहतस्य** = தேஹத்துடன் சேராத,
**அஸம்ஹதஸ்ய**

**तस्य** = அந்த ஆத்மா,

**தஸ்ய**

**देहे** = தேஹத்தில்,

**தே³ஹே**

**अध्यारोपितत्वेन** = ஆரோபம் செய்யப்பட்டிருப்பதால்,

**அத்⁴யாரோபிதத்வேன**

**देहमात्रतया** = தேஹஸ்வரூபமாகவே இருப்பதால்,

**தே³ஹமாத்ரதயா**

**असत्वानित्यस्वादि** = இல்லாமை, அழியும் தன்மை முதலான,

**அஸத்வாநித்யஸ்வாதி³**

**दोषप्रसङ्गो भवति** = தோஷங்கள் ஏற்பட்டு விடுகிறது,

**தோ³ஷப்ரஸங்கோ³ ப⁴வதி**

**तत्र** = அதில்,

**தத்ர**

**देहः** = தேஹம்,

**தே³ஹ:**

**निरात्मकः** = ஆத்மாவற்றது,

**நிராத்மக:**

**इति** = என்பதால்,

**இதி**

**वैनाशिकपक्षप्राप्तिदोषः** = பௌத்த மதத்தை அடைவது என்ற தோஷம்,

**வைநாஶிகபக்ஷப்ராப்திதோ³ஷ:**

**स्यात्** = ஏற்படும்.

**ஸ்யாத்**

தேஹத்தைக்காட்டிலும் ஆத்மா வேறுனலும் 'நான் மனுஷ்யன்' என்ற வியவஹாரம் ஏற்படுவதால் தேஹத்துடன் ஆத்மாவிற்கு ஸம்பந்தம் சொல்ல வேண்டும். ஸம்பந்தம் இல்லாவிட்டால் ஆத்மாவையும் தேஹத்தையும் சேர்த்துக் காட்டுகின்ற 'நான் மனுஷ்யன்' என்ற வியவஹாரம் ஏற்படாது. இரண்டுக்கும் ஸம்யோக ஸம்பந்தம் இல்லை என்று சொல்லிவிட்டீர்கள். ஆகவே தாதாத்ம்யா த்யாஸம் என்ற ஸம்பந்தத்தை ஒப்புக்கொண்டு கிளிஞ்சல் வெள்ளியாகத் தோன்றுவது போல் தேஹமும் ஆத்மாவாகத் தோன்றுகிறது என்று சொன்னல் கிளிஞ்சலில் வெள்ளி இல்லாததுபோல் தேஹத்திலும் ஆரோபிதமான ஆத்மா இல்லை என்று ஆகிவிடும். இதே போல ஆத்மா தேஹமாகத் தோன்றுகிறது என்று ஆத்மாவில் தேஹத்திற்கு ஆரோபம் சொன்னல் தேஹமும் இல்லை என்று ஆகிவிடும். ஆகவே சூன்யவாதியான பௌத்தருடைய ஸித்தாந்தத்தை ஒப்புக் கொண்டதாக ஆகும். **(57)**

**(அவதாரிகை)** குரு அத்யாஸத்தை ஸமர்த்தனம் செய்கிறுர்: -

**न स्वत एव आत्मनः आकाशस्येव असंहतत्वाभ्युपगमात् ।**
**सर्वेण असंहतः स चात्मेति न निरात्मको देहादिः सर्वः स्यात् ।**
**यथा च आकाशं सर्वेणासंहतमिति सर्वं न निराकाशं भवति, एवम् ।**
**तस्मात् न वैनाशिकपक्षप्राप्तिदोषः स्यात् ॥ ५८ ॥**

**ந ஸ்வத ஏவ ஆத்மனः ஆகாஶஸ்யேவ அஸம்ஹதத்வாப்⁴யுபக³மாத் ।**
**ஸர்வேண அஸம்ஹதः ஸ சாத்மேதி ந நிராத்மகோ தே³ஹாதி³ः ஸர்வः ஸ்யாத் ।**
**யதா² ச ஆகாஶம் ஸர்வேணாஸம்ஹதமிதி ஸர்வம் ந நிராகாஶம் ப⁴வதி, ஏவம் ।**
**தஸ்மாத் ந வைநாஶிகபக்ஷப்ராப்திதோ³ஷः ஸ்யாத் ॥ 58 ॥**

| | | |
|---|---|---|
| **आकाशस्येव** **ஆகாஶஸ்யேவ** | = | ஆகாசத்திற்குப்போல, |
| **आत्मनः** **ஆத்மனः** | = | ஆத்மாவிற்கு, |
| **स्वत एव** **ஸ்வத ஏவ** | = | தானுகவே, |
| **असंहतत्वाभ्युपगमात्** **அஸம்ஹதத்வாப்⁴யுபக³மாத்** | = | கூட்டத்தில் சேராதிருக்கும் தன்மையை ஒப்புக்கொண்டுள்ளபடியால், |
| **न** **ந** | = | இல்லை, |
| **स च आत्मा** **ஸ ச ஆத்மா** | = | அந்த ஆத்மா, |
| **सर्वेण** **ஸர்வேண** | = | எல்லாவற்றோடும், |
| **असंहतः** **அஸம்ஹதः** | = | சேராமல் இருக்கிறது, |
| **इति** **இதி** | = | என்ற காரணத்தால், |
| **देहादिः सर्वः** **தே³ஹாதி³ः ஸர்வः** | = | தேஹம் முதலியவை எல்லாம், |
| **निरात्मकः** **நிராத்மகः** | = | ஆத்மாவற்றதாக, |
| **न स्यात्** **ந ஸ்யாத்** | = | ஆகாது, |
| **यथा च** **யதா² ச** | = | எவ்வாறு, |
| **आकाशं** **ஆகாஶம்** | = | ஆகாசமானது, |

**सर्वेण** = எல்லாவற்றேடும்,

**ஸர்வேண**

**असंहत:** = சேராமல் இருக்கிறது,

**அஸம்ஹத:**

**इति** = என்பதால்,

**இதி**

**सर्वं** = எல்லாம்,

**ஸர்வம்**

**निराकाशं** = ஆகாசமற்றதாக,

**நிராகாஶம்**

**न भवति** = ஆவதில்லையோ,

**ந ப⁴வதி**

**एवं** = இதுபோல,

**ஏவம்**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**वैनाशिकपक्षप्राप्तिदोष:** = சூன்யவாதியான பௌத்தருடைய

**வைநாஶிகபக்ஷப்ராப்திதோ³ஷ:** ஸித்தாந்தத்தை அடைவது என்ற தோஷம்,

**न स्यात्** = ஏற்படாது.

**ந ஸ்யாத்**

'நான் மனுஷ்யன்' என்ற ஞானத்தில் தோன்றும் தாதாத்ம்ய ஸம்பந்தம் ஒன்றுக்கொன்று அத்யாஸத்தால் ஏற்பட்டதாகச் சொன்னுல் கிளிஞ்சலில் வெள்ளியைப்போல தேஹமும் ஆத்மாவும் உண்மையில் இல்லை என்று ஆகி சூன்ய வாதத்தை ஒப்புக்கொண்டதாக ஏற்படும் என்று சிஷ்யன் கேட்டதற்கு குரு ஸமாதானம் கூறுகிறுர். தேஹமானது வாஸ்தவத்தில் குடத்தைப்போல ஜடமான பொருள். ஆனுலும் அது நமக்கு சேதனப் பொருளாகத் தோன்றுகிறது. ஆகையால் காய்ச்சின இரும்பில் நெருப்பு சேர்ந்திருப்பதுபோல் தேஹத்திற்கு ஆத்மாவுடன் ஸம்பந்தம் சொல்லவேண்டும் இதுபோல பரிசுத்தமான ஆத்மாவில் தேஹ தர்மங்கள் தோன்றுகிறபடியால் ஆத்மாவுக்கு தேஹத்துடன் ஸம்பந்தம் சொல்லவேண்டும் வாஸ்தவத்தில் தேஹமும் ஆத்மாவும் இருளும் வெளிச்சமும் போல விருத்தமான வஸ்துக்கள் ஒன்றுக்கொன்று இவைகளுக்கு ஸம்பந்தம் ஒருவிதத்திலும் சொல்ல முடியாது. ஆகையால் இந்த ஸம்பந்தம் அத்யாஸத்தால் ஏற்பட்டதாகத்தான் சொல்ல வேண்டும். அதிலும் ஆத்ம ஸம்பந்தம் இல்லாமல் ஒரு ஸமபத்திலும் தேஹத்திற்கு ஸ்புரணம் இல்லை. ஆகையால் தேஹ ஸ்வரூபத்திற்கும் அதன் தர்மங்களுக்கும் ஆத்மாவில் அத்யாஸம் ஏற்படுகிறது. ஸுஷுப்தி முதலான நிலைகளில் தேஹ ஸம்பந்தம் இல்லாமலும் ஆத்மாவிற்கு ஸ்புரணம் இருப்பதால் ஆத்மஸ்வரூபத்திற்கு அத்யாஸம் இல்லை. அதன் ஸம்ஸர்கத்திற்குத்தான் அத்யாஸம். ஸம்ஸர்கம் பொய்யாகப்போனுலும் ஆத்மஸ்வரூபம் வாஸ்தவமாக இருப்பதால் சூன்யவாதத்தி

ற்கு ப்ரஸக்தி இல்லை தேஹாதிகளின் ஸ்வரூபத்திற்கே அத்யாஸம் ஏற்படுவதால் அவைகள் எல்லாம் பொய் என்று ஏற்படுவதால் ஆத்மா ஒன்றே வாஸ்தவம் என்ற அத்வைத ஸித்தாந்தமும் நிலைக்கிறது. ஆகாசம் அஸங்கமாயிருந்தாலும் எல்லா இடங்களிலும் இருப்பதுபோல அஸங்கமான ஆத்மாவும் எல்லா இடங்களிலும் இருப்பதாகக் கூறுவதில் தவறு ஒன்றும் இல்லை. இந்த ஆத்மாவிற்கு தேஹாதி களுடன் ஸம்பந்தம் ப்ரமத்தால் தோன்றுவதால் ஆத்ம தர்மங்கள் தேஹத்தில் தோன்றுகின்றன. **(58)**

**(அவதாரிகை)** பிரத்யக்ஷ விரோதம் ஏற்படும் என்று சிஷ்யன் கூறியதற்கு பதில் சொல்கிறுர்: -

**यत्पुनरुक्तं - देहस्य आत्मनि असत्वे प्रत्यक्षादिविरोधः स्यादिति,**
**तन्न, प्रत्यक्षादिभिः आत्मनि देहस्य सत्त्वानुपलब्धेः ।**
**न हि आत्मनि - कुण्डे बदरम्, क्षीरे सर्पिः, तिले तैलम्, भित्तौ चित्रमिव च - प्रत्यक्षादिभिः देह उपलभ्यते ।**
**तस्मात् न प्रत्यक्षादिविरोधः ॥ ५९ ॥**

**யத்புனருக்தம் - தே³ஹஸ்ய ஆத்மனி அஸத்வே ப்ரத்யக்ஷாதி³விரோத⁴:**
**ஸ்யாதி³தி, தன்ன, ப்ரத்யக்ஷாதி³பி⁴: ஆத்மனி தே³ஹஸ்ய**
**ஸத்த்வானுபலப்³தே⁴: ।**
**ந ஹி ஆத்மனி - குண்டே³ ப³த³ரம், க்ஷீரே ஸர்பி:, திலே தைலம்,**
**பி⁴த்தௌ சித்ரமிவ ச - ப்ரத்யக்ஷாதி³பி⁴: தே³ஹ உபலப்⁴யதே ।**
**தஸ்மாத் ந ப்ரத்யக்ஷாதி³விரோத⁴: ॥ 59 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मनि** / **ஆத்மனி** | = | ஆத்மாவில், |
| **देहस्य असत्वे** / **தே³ஹஸ்ய அஸத்வே** | = | தேஹம் இல்லாமல் போனுல், |
| **प्रत्यक्षादिविरोधः स्यात्** / **ப்ரத்யக்ஷாதி³விரோத⁴: ஸ்யாத்** | = | ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கு விரோதம் ஏற்படும், |
| **इति** / **இதி** | = | என்று, |
| **यत्पुनरुक्तं** / **யத்புனருக்தம்** | = | யாதொன்று சொல்லப்பட்டதோ, |
| **तत् न** / **தத் ந** | = | அது சரியல்ல, |
| **प्रत्यक्षादिभिः** / **ப்ரத்யக்ஷாதி³பி⁴:** | = | ப்ரத்யக்ஷம் முதலியவைகளால், |

| | | |
|---|---|---|
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | ஆத்மாவில், |
| **देहस्य**<br>**தே³ஹஸ்ய** | = | தேஹம், |
| **सत्त्वानुपलब्धेः**<br>**ஸத்த்வானுபலப்³தே⁴:** | = | இருப்பது தெரியாதபடியால், |
| **कुण्डे**<br>**குண்டே³** | = | கிண்ணத்தில், |
| **बदरं**<br>**ப³த³ரம்** | = | இலந்தம்பழம் போலும், |
| **क्षीरे**<br>**க்ஷீரே** | = | நெய்போலும், |
| **तिले**<br>**திலே** | = | எள்ளில், |
| **तैलं**<br>**தைலம்** | = | எண்ணெபோலும், |
| **भित्तौ**<br>**பி⁴த்தௌ** | = | சுவற்றில், |
| **चित्रमिव च**<br>**சித்ரமிவ ச** | = | படம் போலும், |
| **प्रत्यक्षादिभिः**<br>**ப்ரத்யக்ஷாதி³பி⁴:** | = | ப்ரத்யக்ஷம் முதலானவைகளால், |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | ஆத்மாவில், |
| **देहः**<br>**தே³ஹ:** | = | தேஹம், |
| **न हि उपलभ्यते**<br>**ந ஹி உபலப்⁴யதே** | = | அறியப்படுகிறதில்லை, |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **न प्रत्यक्षादिविरोधः**<br>**ந ப்ரத்யக்ஷாதி³விரோத⁴:** | = | ப்ரத்யக்ஷம் முதலானவைகளுக்கு விரோதம் இல்லை. |

ஆத்மாவில் தேஹம் ஆரோபிதம் என்றால் கிளிஞ்சலில் வெள்ளியைப்போல் ஆத்மாவில் தேஹம் இல்லை என்று ஆகிவிடும். இது பிரத்யக்ஷம் முதலான ப்ரமாண ங்களுக்கு விருத்தம். ஆகையால் தேஹத்திற்கும் ஆத்மாவிற்கும் தூணிற்கும் மூங்கிலுக்கும்போல ஸம்யோக ஸம்பந்தம்தான் என்று சிஷ்யன் 55 - வது வாக்யத் தில் கேட்டான். இதற்கு பதில் கூறுகிறார். பிரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களால்

ஆத்மாவில் தேஹம் இருப்பதாக எங்காவது கண்டிருந்தால் ப்ரமாண விரோதம் ஏற்படும். அப்படி ஒரு இடத்திலும் கண்டதில்லையே! இரண்டு பொருள்களையும் நேரில் கண்டவன்தான் ஒன்றில் மற்றொன்று இருப்பதாகக் காண முடியும். கிண்ணத்தையும் இலந்தம்பழத்தையும் நேரில் கண்டவன் கிண்ணத்தில் இலந்தம்பழம் இருப்பதாகத் தெரிந்துகொள்கிறான். தேஹத்தைக் கண்ணால் பார்த்துத் தெரிந்து கொண்டாலும் ஆத்மாவை ஒரு இந்திரியத்தாலும் அறிந்துகொள்ளமுடியாது. புலன்களுக்கு எட்டாதது ஆத்மா. அப்ரத்யக்ஷமான ஆத்மாவில் ப்ரத்யக்ஷமான தேஹம் இருப்பதாக ப்ரத்யக்ஷஞானத்தால் எப்படி அறிந்து கொள்ளமுடியும்? பாலில் நெய் இருப்பதும், எள்ளில் எண்ணெ இருப்பதும் அனுமானத்தால் தெரியவருகிறது முதலில் கண்ணால் நெய்யையும் எண்ணெயையும் காணாவிட்டாலும் பின்னால் பார்க்கிறோம். அதைக்கொண்டு பாலில் நெய்யும் எள்ளில் எண்ணெயும் இருப்பதாக ஊகிக்கிறோம். ஒருசமயத்திலும் ஆத்மாவை இந்திரியங்களால் அறியமுடியாதபடியால் ஆத்மாவில் தேஹம் இருப்பதாக எவ்வாறு ஊகிக்கமுடியும்? சுவரும் சித்திரமும் வெவ்வேறாகத் தெரியாவிட்டாலும் சித்திரத்துடன் சேர்ந்தே சுவரும் நன்கு காணப்படுகிறது. இங்கேயோ தேஹம்தான் தெரிகிறதே தவிற ஆத்மா தெரிவதே இல்லை. ஆத்மாவில் தேஹம் இருப்பது தெரியும்பக்ஷத்தில் என்னிடம் சரீரம் இருக்கிறது என்றே எல்லோரும் சொல்வார்கள். நான் மனுஷ்யன் என்று சொல்லமாட்டார்கள். ஆகவே ஆத்மாவில் தேஹம் இருப்பதாக ஒரு ப்ரமாணத்தாலும் அறியாததால் தேஹத்திற்கு ஆரோபம் சொல்வதில் ப்ரமாண விரோதம் ஒன்றும் இல்லை. **(59)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறான்: -

**कथं तर्हि प्रत्यक्षाद्यप्रसिद्धात्मनि देहाध्यारोपणा, देहे च आत्मारोपणा ॥ ६० ॥**

**கத²ம் தர்ஹி ப்ரத்யக்ஷாத்³யப்ரஸித்³தா⁴த்மனி தே³ஹாத்⁴யாரோபணா, தே³ஹே ச ஆத்மாரோபணா ॥ 60 ॥**

**तर्हि** = அப்படியானால்,
**தர்ஹி**

**प्रत्यक्षाद्यप्रसिद्धात्मनि** = ப்ரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால்
**ப்ரத்யக்ஷாத்³யப்ரஸித்³தா⁴த்மனி** அறிந்துகொள்ள முடியாத ஆத்மாவில்,

**देहाध्यारोपणा** = தேஹத்தின் ஆரோபமும்,
**தே³ஹாத்⁴யாரோபணா**

**देहे** = தேஹத்தில்,
**தே³ஹே**

**आत्मारोपणा** = ஆத்மாவின் ஆரோபமும்,
**ஆத்மாரோபணா**

**कथं** = எப்படி?
**கத²ம்**

உலகில் பிரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களால் அறியப்படும் வஸ்துவில் தான் வேறொரு பொருளுக்கு ஆரோபம் ஏற்படுவதைக் கண்டிருக்கிறோம். கிளிஞ்சல் - வெள்ளி, கயிறு - பாம்பு இவை நாம் அறியத்தக்க பொருள்கள். ஆத்மா ஒரு பிரமாணத்தாலும் அறிய முடியாதிருக்குமானல் அதில் எப்படி தேஹத்திற்கு ஆரோபம் ஏற்படும்? தேஹத்தில்தான் ஆத்மாவுக்கு ஆரோபம் ஏற்படும்? **(60)**

**(அவதாரிகை)** குரு பதில் கூறுகிறார்: -

**नायं दोषः, स्वभावप्रसिद्धत्वात् आत्मनः ।**
**न हि कादा चित्कसिद्धावेव अध्यारोपणा, न नित्यसिद्धौ – इति नियन्तुं शक्यं,**
**आकाशे तलमलाद्यध्यारोपणदर्शनात् ॥ ६१ ॥**

**நாயம் தோ³ஷ:, ஸ்வபா⁴வப்ரஸித்³த⁴த்வாத் ஆத்மன: ।**
**ந ஹி காதா³ சித்கஸித்³தா⁴வேவ அத்⁴யாரோபணா,**
**ந நித்யஸித்³தௌ⁴ - இதி நியந்தும் ஶக்யம், ஆகாஶே தலமலாத்³யத்⁴யாரோபணத³ர்ஶனாத் ॥ 61 ॥**

**आत्मनः** **ஆத்மன:** = ஆத்மாவானது,

**स्वभावप्रसिद्धत्वात्** **ஸ்வபா⁴வப்ரஸித்³த⁴த்வாத்** = ஸ்வபாவமாகவே எப்பொழுதும் ப்ரஸித்தமாக இருப்பதால்,

**अयं दोषः** **அயம் தோ³ஷ:** = இந்த தோஷம்,

**न** **ந** = இல்லை,

**आकाशे** **ஆகாஶே** = ஆகாசத்தில்,

**तलमलाद्यध्यारोपणदर्शनात्** **தலமலாத்³யத்⁴யாரோபணத³ர்ஶனாத்** = தலம், மலம் முதலியவற்றின் ஆரோபம் காண்பதால்,

**कादाचित्कसिद्धावेव** **காதா³சித்கஸித்³தா⁴வேவ** = ஏதோ ஒரு சமயத்தில் மட்டும் ப்ரஸித்தமாக இருந்தால்தான்,

**अध्यारोपणा** **அத்⁴யாரோபணா** = ஆரோபம்,

**नित्यसिद्धौ** **நித்யஸித்³தௌ⁴** = எப்பொழுதும் ப்ரஸித்தமாயிருந்தால்,

**न** **ந** = இல்லை,

**इति** = என்று,

**இதி**

**नियन्तुं** = கட்டுப்படுத்துவதற்கு,

**நியந்தும்**

**न हि शक्यं** = முடியாது.

**ந ஹி ஶக்யம்**

அத்யாஸம் ஏற்படுவதற்கு வஸ்துக்களின் ஸ்புரணம் வேண்டியதுதான். ஆனால் இந்திரியங்களால் அது அறியத்தக்கதாக இருக்கவேண்டும் என்ற கட்டாயம் கிடையாது. ஆகாசமானது இந்திரியங்களுக்கு விஷயமாகாமல் இருந்தாலும் அதில் நீல நிறம் இருப்பதாக ப்ரமம் ஏற்படுகிறது இல்லையா? ஆகவே ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மாவுக்கு எப்பொழுதுமே தானாகவே ஸ்புரணம் இருப்பதால் ஆரோபம் ஏற்படலாம். ஸ்வரூபம் தோன்றியும் அத்யாஸத்திற்கு விருத்தமான ஆகாரம் தோன்றாமலும் இருந்தால் ப்ரமம் ஏற்படலாம். ஆத்ம ஸ்வரூபம் தோன்றினாலும் ஸச்சிதானந்தம் தோன்றாததால் ஆத்மாவில் ப்ரமம் ஏற்படுவது யுக்தம் தான். **(61)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறான்: -

**किं भगवन्, देहात्मनोरितरेतराध्यारोपणा देहादिसंघातकृता, अथवा आत्मकृतेति ॥ ६२ ॥**

**கிம் ப⁴க³வன், தே³ஹாத்மனோரிதரேதராத்⁴யாரோபணா தே³ஹாதி³ ஸங்கா⁴தக்ருதா, அத²வா ஆத்மக்ருதேதி ॥ 62 ॥**

**भगवन्** = பகவானே,

**ப⁴க³வன்**

**देहात्मनोः** = தேஹம், ஆத்மா இவ்விரண்டிற்கும்,

**தே³ஹாத்மனோ:**

**इतरेतराध्यारोपणा** = ஒன்றுக்கொன்று அத்யாஸமானது,

**இதரேதராத்⁴யாரோபணா**

**किं देहादिसंघातकृता** = தேஹம் முதலியவைகளின் கூட்டத்தினால்

**கிம் தே³ஹாதி³ஸங்கா⁴தக்ருதா** ஏற்பட்டதா,

**अथवा** = அல்லது,

**அத²வா**

**आत्मकृता** = ஆத்மாவினால் ஏற்பட்டதா?

**ஆத்மக்ருதா**

**गुरुरुवाच - यदि देहादिसंघातकृता,**
**यदि च आत्मकृता, किं तत्र स्यात् ॥ ६३ ॥**

**கு³ருருவாச - யதி³ தே³ஹாதி³ஸங்கா⁴தக்ருதா,**
**யதி³ ச ஆத்மக்ருதா, கிம் தத்ர ஸ்யாத் ॥ 63 ॥**

**गुरुरुवाच** = குரு சொன்னார்,
**கு³ருருவாச**
**देहादिसंघातकृता यदि** = தேஹம் முதலியவைகளின் கூட்டத்தால்
**தே³ஹாதி³ஸங்கா⁴தக்ருதா யதி³** ஏற்பட்டதானாலோ,
**यदि च आत्मकृता** = அதில் உனக்கு என்ன ஏற்படும்?
**யதி³ ச ஆத்மக்ருதா**

**इत्युक्तः शिष्य आह - यद्यहं देहादिसंघातमात्रः, ततो ममाचेतनत्वात् परार्थत्वमिति न मत्कृता देहात्मनोः इतरेतराध्यारोपणा । अथाहमात्मा परोऽन्यः संघातात्, चितिमत्वात् स्वार्थ इति मयैव चितिमता आत्मनि अध्यारोपणा क्रियते सर्वानर्थबीजभूता ॥ ६४ ॥**

**இத்யுக்த: ஶிஷ்ய ஆஹ - யத்³யஹம் தே³ஹாதி³ஸங்கா⁴தமாத்ர:, ததோ மமாசேதனத்வாத் பரார்த²த்வமிதி ந மத்க்ருதா தே³ஹாத்மனோ: இதரேதராத்⁴யாரோபணா । அதா²ஹமாத்மா பரோ(அ)ன்ய: ஸங்கா⁴தாத், சிதிமத்வாத் ஸ்வார்த² இதி மயைவ சிதிமதா ஆத்மனி அத்⁴யாரோபணா க்ரியதே ஸர்வானர்த²பீ³ஜபூ⁴தா ॥ 64 ॥**

**इति उक्तः** = இவ்வாறு சொல்லப்பட்ட,
**இதி உக்த:**
**शिष्यः** = சிஷ்யன்,
**ஶிஷ்ய:**
**आह** = சொன்னான்,
**ஆஹ**
**अहं** = நான்,
**அஹம்**
**देहादिसंघातमात्रः यदि** = தேஹாதிகளின் கூட்டமாக மட்டும்
**தே³ஹாதி³ஸங்கா⁴தமாத்ர: யதி³** இருப்பேனேயாகில்,
**ततः** = அப்பொழுது,
**தத:**
**मम अचेतनत्वात्** = நான் ஜடமாயிருப்பதனால்,
**மம அசேதனத்வாத்**
**परार्थत्वं इति** = பிறருக்காக ஏற்பட்டவன் பரதந்த்ரன்
**பரார்த²த்வம் இதி** என்ற காரணத்தால்,

| | | |
|---|---|---|
| **देहात्मनोः**<br>**தே$^{3}$ஹாத்மனோ:** | = | தேஹத்திற்கும் ஆத்மாவிற்கும், |
| **इतरेतराध्यारोपणा**<br>**இதரேதராத்$^{4}$ யாரோபணா** | = | ஒன்றுக்கொன்று ஆரோபமானது, |
| **न मत्कृता**<br>**ந மத்க்ருதா** | = | என்னால் ஏற்பட்டதில்லை, |
| **अथ**<br>**அத$^{2}$** | = | அல்லது, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **संघातात्**<br>**ஸங்கா$^{4}$தாத்** | = | ஸங்காதத்தைக் காட்டிலும், |
| **अन्यः**<br>**அன்ய:** | = | வேறான, |
| **परः**<br>**பர:** | = | விலக்ஷணமான, |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மாவானால், |
| **चितिमत्वात्**<br>**சிதிமத்வாத்** | = | ஞானத்துடன் கூடியிருப்பதால், |
| **स्वार्थ**<br>**ஸ்வார்த$^{2}$** | = | ஸ்வதந்திரன், |
| **इति**<br>**இதி** | = | என்ற காரணத்தால், |
| **चितिमता**<br>**சிதிமதா** | = | அறிவுள்ள, |
| **मयैव**<br>**மயைவ** | = | என்னாலேயே, |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | தன்னிடம், |
| **सर्वानर्थबीजभूता**<br>**ஸர்வானர் த$^{2}$பீ$^{3}$ஜபூ$^{4}$தா** | = | எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணமாக உள்ள, |
| **अध्यारोपणा**<br>**அத்$^{4}$யாரோபணா** | = | அத்யாஸம், |
| **क्रियते**<br>**க்ரியதே** | = | செய்யப்படுகிறது. |

தேஹம், ஆத்மா இவ்விரண்டையும் ஒன்றுக்கொன்று ஆரோபம் செய்கிறவன் ஆத்மாவா? அல்லது தேஹமா? என்று சிஷ்யன் கேட்டான். சிஷ்யனுடைய அபிப்பிராயம் வெளிப்படுவதற்காக தேஹமாயிருந்தால் என்ன? ஆத்மாவாக இருந் தால் என்ன? என்று குரு கேட்டார். பிறகு சிஷ்யன் தன் அபிப்பிராயத்தை வெளி யிட்டுச் சொன்னான். எல்லாத் துன்பங்களையும் நான் அனுபவிப்பதால் அத்யாஸம் எனக்குத்தான் என்று சொல்லவேண்டும். ஆனால் நான் இந்த தேஹாதிஸங்காதமா? ஆத்மாவா? நான் தேஹாதி ஸங்காதமானால், அது ஜடம், ஸ்வாதந்திரியம் இல்லை. அதற்கு ஆரோபஞானம் ஏற்படாது. ஆகவே அத்யாஸம் என்னால் ஏற்பட்டதாகச் சொல்ல முடியாது. நான் தேஹாதிகளைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவா னால் அப்பொழுதும் அத்யாஸம் ஸம்பவிக்காது. ஆத்மா சேதனன் ஸ்வதந்திரன், அவன் எல்லாத் துன்பங்களுக்கும் காரணமான அத்யாஸத்தைத் தனக்குத்தானே செய்து கொள்வானா? **(62-64)**

## इत्युक्तो गुरुरुवाच - अनर्थबीजभूतां चेन्मिथ्याध्यारोपणां जानीषे, मा कार्षीस्तर्हि ॥ ६५ ॥

**இத்யுக்தோ கு³ருருவாச - அனர்த²பீ³ஜபூ⁴தாம் சேன்மித்² யாத்⁴யாரோப ணாம் ஜானீஷே, மா கார்ஷீஸ்தர்ஹி ॥ 65 ॥**

**इति** = இவ்வாறு,

**இதி**

**उक्त:** = சொல்லப்பட்ட,

**உக்த:**

**गुरु:** = ஆசார்யர்,

**கு³ரு:**

**उवाच** = சொன்னார்,

**உவாச**

**मिथ्याध्यारोपणां** = பொய்யாக உள்ள ஆரோபத்தை,

**மித்²யாத்⁴யாரோபணாம்**

**अनर्थबीजभूतां** = எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாக,

**அனர்த²பீ³ஜபூ⁴தாம்**

**जानीषे चेत्** = அறிவாயேயானால்,

**ஜானீஷே சேத்**

**तर्हि** = அப்பொழுது,

**தர்ஹி**

**मा कार्षी:** = செய்யாதே.

**மா கார்ஷீ:**

அநாதியான அக்ஞானத்தால் தேஹாதிகளையே நான் என்று எண்ணும் ஆத்மா அறியாமையால் ஆரோபம் செய்கிறான். அக்ஞானம் விலகி ஆத்மதத்வத்தையும்

அநாத்மாவையும் நன்கு பிரித்துத் தெரிந்துகொண்டால் ஆரோபம் விலகிவிடும் என்ற தத்வத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக ஆசார்யர் உபதேசிக்கிறார். அத்யாஸம் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் என்பதைத் தெரிந்துகொண்ட நீ ஏன் மறுபடியும் ஆரோபம் செய்கிறாய்? அதை விட்டு விடலாமே? **(65)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கூறுகிறான்: -

**नैव भगवन्, शक्नोमि न कर्तुम् ।**
**अन्येन केनचित्प्रयुक्तोऽहं न स्वतन्त्र इति ॥ ६६ ॥**

**நைவ ப⁴க³வன், ஶக்னோமி ந கர்தும் ।**
**அன்யேன கேனசித்ப்ரயுக்தோ(அ)ஹம் ந ஸ்வதந்த்ர இதி ॥ 66 ॥**

**भगवन्** = பகவானே,
**ப⁴க³வன்**
**न कर्तुं** = செய்யாமலிருப்பதற்கு,
**ந கர்தும்**
**नैव शक्नोमि** = முடியவில்லையே!
**நைவ ஶக்னோமி**
**अन्येन केनचित्** = வேறு ஒருவனால்,
**அன்யேன கேனசித்**
**अहं** = நான்,
**அஹம்**
**प्रयुक्त:** = ஏவப்பட்டிருக்கிறேன்,
**ப்ரயுக்த:**
**न स्वतन्त्र:** = ஸ்வதந்திரன் இல்லை.
**ந ஸ்வதந்த்ர:**

அத்யாஸம் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் என்று தெரிந்தும் விடமுடியவில்லையே! இதில் எனக்கு ஸ்வாதந்த்ரியம் இல்லை. பிறருக்குக் கட்டுப்பட்டவன். **(66)**

**(அவதாரிகை)** குரு சொல்கிறார்: -

**न तर्हि अचितिमत्त्वात् स्वार्थ: त्वम् ।**
**येन प्रयुक्त: अस्वतन्त्र: प्रवर्तसे स चितिमान् स्वार्थ:।**
**संघात एव त्वम् ॥ ६७ ॥**

**ந தர்ஹி அசிதிமத்த்வாத் ஸ்வார்த²: த்வம் ।**
**யேன ப்ரயுக்த: அஸ்வதந்த்ர: ப்ரவர்தஸே ஸ சிதிமான் ஸ்வார்த²:।**
**ஸங்கா⁴த ஏவ த்வம் ॥ 67 ॥**

**तर्हि** = அப்படியானல்,
**தர்ஹி**

**अचितिमत्त्वात्** = சைதன்யமற்றவனுயிருப்பதால்,
**அசிதிமத்த்வாத்**

**त्वं** = நீ,
**த்வம்**

**न स्वार्थः** = ஸ்வதந்திரன் அல்ல,
**ந ஸ்வார்த2:**

**येन** = எவனுல்,
**யேன**

**प्रयुक्तः** = ஏவப்பட்டு,
**ப்ரயுக்த:**

**अस्वतन्त्रः** = பரதந்திரனுக,
**அஸ்வதந்த்ர:**

**प्रवर्तसे** = காரியத்தைச் செய்கிருயோ,
**ப்ரவர்தஸே**

**सः** = அவன்,
**ஸ:**

**चितिमान्** = சேதனன்,
**சிதிமான்**

**स्वार्थः** = ஸ்வதந்திரன்,
**ஸ்வார்த2:**

**त्वं** = நீ,
**த்வம்**

**संघात एव** = ஸங்காதம்தான்.
**ஸங்கா4த ஏவ**

பிறருக்குக் கட்டுப்பட்டு அவரால் ஏவப்பட்டு நீ காரியம் செய்வதாயிருந்தால், நீ அசேதனன் பரதந்திரன் என்றும், எவரால் ஏவப்பட்டு நீ காரியம் செய்கிருயோ, அவர் சேதனன், ஸ்வதந்திரன் என்றும் ஆகும். ஆகவே நீ தேஹாதி ஸங்காதம் தான். **(67)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறுன்: -

**यद्यचेतनोऽहम, कथं सुखदुःखवेदनां भवदुक्तं च जानामि? ॥ ६८ ॥**

**யத்3யசேதனே(அ)ஹம, கத2ம் ஸுக2து3:க2வேத3னும் ப4வது3க்தம் ச ஜாநாமி? ॥ 68 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**यदि उचेतनः** = ஜடமாக இருப்பேனேயாகில்,

**யதி³ உசேதன:**

**सुखदुःखवेदनां** = ஸுகதுக்கங்களின் அனுபவத்தையும்,

**ஸுக²து³:க²வேத³னாம்**

**भवदुक्तं च** = உம்மால் சொல்லப்பட்ட சரீரத்தையும்,

**ப⁴வது³க்தம் ச**

**कथं जानामि** = எப்படி அறிவேன்?

**கத²ம் ஜானாமி**

நான் ஜடமான சரீரமாக இருப்பேனேயாகில் எனக்கு அறிவு இருக்காது. இந்த சரீரத்தையும் ஸுகதுக்கானுபவத்தையும் அறிந்துகொள்ள முடியாது. **(68)**

**गुरुरुवाच - किं सुखदुःखवेदनाया मदुक्ताच्चान्यस्त्वम्,**
**किं वा अनन्य एव? इति ॥ ६९ ॥**

**கு³ருருவாச - கிம் ஸுக²து³:க²வேத³னாயா மது³க்தாச்சான்யஸ்த்வம்,**
**கிம் வா அனன்ய ஏவ? இதி ॥ 69 ॥**

**गुरुः** = குரு,

**கு³ரு:**

**उवाच** = சொன்னார்,

**உவாச**

**सुखदुःखवेदनायाः** = ஸுகதுக்கானுபவத்திலிருந்தும்,

**ஸுக²து³:க²வேத³னாயா:**

**मदुक्ताच्च** = என்னால் சொல்லப்பட்ட ஸங்காதத்திலிருந்தும்

**மது³க்தாச்ச**

**त्वं** = நீ,

**த்வம்**

**किं अन्यः** = வேறுபடாதவன்தானா?

**கிம் அன்ய:**

**इति** = என்று.

இதி

அந்தக்கரணத்தில் பிரதிபலித் த சைதன்யம் தான் ஜீவன் என்பது. அந்தக்கரண த்துடன் சேர்த்தே ஆத்ம வஸ்துவாக எண்ணிக்கொண்டிருப்பதால் இவனுக்கு அத்யாஸம், பாரதந்த்ரியம், முதலியவை எல்லாம் ஏற்படுகிறது. தேஹம், இந்திரி யம், அந்தக்கரணம் முதலியவற்றைக் காட்டிலும் வேறாக ஆத்மவஸ்துவைத்

தெரிந்து கொண்டு விட்டால் அத்யாஸம் முதலியவை ஏற்படாது. இந்த ஞானம் சிஷ்யனுக்கு உறுதியாக ஏற்படுவதற்காக அவனிடம் கேள்வி கேட்கிறுர். **(69)**

**शिष्य उवाच - नाहं तावदन्यः । कस्मात्? यस्मात्तदुभयं कर्मभूतं घटादिकमिव जानामि । यदि अनन्योऽहम् तेन तदुभयं न जानीयाम्; किंतु जानामि तस्मादन्यः । सुखदुःखवेदनाविक्रिया च स्वार्थैव प्राप्नोति त्वदुक्तं च स्यात्, अनन्यत्वे । न च तयोः स्वार्थता युक्ता । न हि चन्दनकण्टककृते सुखदुःखे चन्दनकण्टकार्थे; घटोपयोगो वा घटार्थः । तस्मात् तद्विज्ञातुर्मम चन्दनादिकृतोऽर्थः । अहं हि ततोऽन्यः समस्तमर्थं जानामि बुध्यारूढम् ॥ ७० ॥**

**ஶிஷ்ய உவாச - நாஹம் தாவத³ன்ய: । கஸ்மாத்? யஸ்மாத்தது³ப⁴யம் கர்மபூ⁴தம் க⁴டாதி³கமிவ ஜாநாமி । யதி³ அனன்யோ(அ)ஹம் தேன தது³ப⁴யம் ந ஜானீயாம்; கிந்து ஜாநாமி தஸ்மாத³ன்ய: । ஸுக²து³:க²வேத³னாவிக்ரியா ச ஸ்வார்தை²வ ப்ராப்னோதி த்வது³க்தம் ச ஸ்யாத், அனன்யத்வே । ந ச தயோ: ஸ்வார்த²தா யுக்தா । ந ஹி சந்த³னகண்டகக்ருதே ஸுக²து³:கே² சந்த³னகண்டகார்தே²; க⁴டோபயோகோ³ வா க⁴டார்த²: । தஸ்மாத் தத்³விஜ்ஞாதுர்மம சந்த³நாதி³க்ருதோ(அ)ர்த²: । அஹம் ஹி ததோ(அ)ன்ய: ஸமஸ்தமர்த²ம் ஜாநாமி பு³த்³⁴யாரூட⁴ம் ॥ 70 ॥**

| | | |
|---|---|---|
| **शिष्य:**<br>**ஶிஷ்ய:** | = | சிஷ்யன், |
| **उवाच**<br>**உவாச** | = | சொன்ஞன், |
| **अहं तावत्**<br>**அஹம் தாவத்** | = | நான், |
| **न अनन्य:**<br>**ந அனன்ய:** | = | வேறுபடாதவன் அல்ல, |
| **कस्मात्**<br>**கஸ்மாத்** | = | என்ன காரணத்தால்? |
| **यस्मात्**<br>**யஸ்மாத்** | = | யாதொரு காரணத்தால், |
| **घटादिकमिव**<br>**க⁴டாதி³கமிவ** | = | குடம் முதலியவற்றைப்போல, |
| **कर्मभूतं**<br>**கர்மபூ⁴தம்** | = | அறியப்படும் பொருளாக உள்ள, |
| **तत् उभयं**<br>**தத் உப⁴யம்** | = | அவ்விரண்டையும், |

**जानामि** = அறிகிறேனே (அதனால்),
**ஜாநாமி**

**अहं** = நான்,
**அஹம்**

**यदि अनन्य:** = வேறுபடாதவனாக இருப்பேனேயாகில்,
**யதி³ அனன்ய:**

**तेन** = அந்தக்காரணத்தால்,
**தேன**

**तदुभयं** = அவ்விரண்டையும்,
**தது³ப⁴யம்**

**न जानीयां** = அறியமாட்டேன்,
**ந ஜானீயாம்**

**किंतु** = ஆனால்,
**கிந்து**

**जानामि** = அறிகிறேன்,
**ஜாநாமி**

**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**

**अन्य:** = வேறுபட்டவன்,
**அன்ய:**

**अनन्यत्वे** = வேறுபடாதவனாக இருப்பேனேயாகில்,
**அனன்யத்வே**

**सुखदु:खवेदनाविक्रिया च** = ஸுகதுக்கானுபவவிகாரம்,
**ஸுக²து³:க²வேத³னாவிக்ரியா ச**

**स्वार्थैव प्राप्नोति** = தனக்காகவே ஏற்பட்டதாக ஆகிறது,
**ஸ்வார்தை²வ ப்ராப்னோதி**

**त्वदुक्तं च स्यात्** = உங்களால் சொல்லப்பட்ட அநித்யத்வம் முதலான தோஷமும் ஆத்மாவுக்கு வரும்,
**த்வது³க்தம் ச ஸ்யாத்**

**तयो:** = அவைகளுக்கு,
**தயோ:**

**स्वार्थता** = தனக்காகவே இருக்கும் தன்மை,
**ஸ்வார்தை²வ**

**न च युक्ता** = சரியல்ல,
**ந ச யுக்தா**

**चन्दनकण्टककृते** = சந்தனத்தாலும், முள்ளாலும் ஏற்பட்ட,
**சந்த³னகண்டகக்ருதே**

| | | |
|---|---|---|
| **सुखदु:खे** | = | இன்பதுன்பங்கள், |
| **ஸுக²து³:கே²** | | |
| **न हि चन्दनकण्टकार्थे** | = | சந்தனத்திற்காகவும் முள்ளிற்காகவும் |
| **ந ஹி சந்த³னகண்டகார்தே²** | | ஏற்பட்டதல்ல, |
| **घटोपयोगो वा** | = | குடத்தின் உபயோகம், |
| **க⁴டோபயோகோ³ வா** | | |
| **न हि घटार्थ:** | = | குடத்திற்காக ஏற்பட்டதல்ல, |
| **ந ஹி க⁴டார்த²:** | | |
| **तस्मात्** | = | ஆகையால், |
| **தஸ்மாத்** | | |
| **तद्विज्ञातु:** | = | அவைகளை அறிந்துகொள்கிற, |
| **தத்³விஜ்ஞாது:** | | |
| **मम** | = | எனக்குத்தான், |
| **மம** | | |
| **चन्दनादिकृतो अर्थ:** | = | சந்தனம் முதலியவைகளால் ஏற்பட்ட |
| **சந்த³னாதி³க்ருதோ அர்த²:** | | பிரயோஜனம், |
| **तत:** | = | அவற்றைக்காட்டிலும், |
| **தத:** | | |
| **अन्य:** | = | வேறான, |
| **அன்ய:** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **बुध्यारूढं** | = | புத்தியில் வந்துள்ள, |
| **பு³த்³⁴யாரூட⁴ம்** | | |
| **समस्तं अर्थ** | = | எல்லா விஷயத்தையும், |
| **ஸமஸ்தம் அர்த²** | | |
| **जानामि हि** | = | அறிகிறேன் அல்லா! |
| **ஜாநாமி ஹி** | | |

சிஷ்யன், தான் தேஹாதி ஸங்காதத்தைக் காட்டிலும் வேறுதான் என்பதை நன்கு தெரிந்துகொண்டு குருவின் கேள்விக்குப் பதில் கூறுகிறன். குடம் எதிரில் இருப்பதைப்.பார்த்துத் தெரிந்துகொள்ளும் நான் குடம் அல்ல. குடத்தைக்காட்டிலும் வேறுதான். அறிகிறவன் அறியப்படும் பொருளைக்காட்டிலும் வேறாகத்தான் இருக்க முடியும். தானே தன்னை அறிந்துகொள்வதாகக் கூறுவது சரியல்ல. ஸ்வப்ரகாசமான வஸ்துதான் தானே பிரகாசிக்க முடியும். ஜடவஸ்து அவ்விதம் பிரகாசிக்க முடியாது. தேஹாதிகளை அறிகிறவன் வேறு ஒருவன் இல்லாவிட்டால் தேஹாதிகள் இருப்பதே தெரியாமல் போய்விடும். ஆகையால் தேஹாதிகளையும் ஸுகதுக்கங் களையும் அறியும் நான் அவைகளைக் காட்டிலும் வேறானவன். மேலும் சந்தனத்தால்

ஏற்படும் ஸுகமும், முள்ளினல் ஏற்படும் துன்பமும் சந்தனத்திற்காகவோ, முள்ளுக் காகவோ அல்ல. குடத்தின் பயன் குடத்திற்காக அல்ல. இவற்றை அனுபவிக்கும் வேறொரு சேதனனுக்காகத்தான் ஏற்பட்டது. ஜடத்தின் பயன் ஜடத்திற்கு இருக்க முடியாது. அது சேதனனுக்குத்தான். இவை எல்லாம் புத்தியில் வரும்பொழுது எனக்கு ஞானம் ஏற்படுகிறது. ஆகவே இவற்றை அறிந்து இதன் பயனை அனுபவிக் கும் நான் இவற்றைக்காட்டிலும் வேறானவனே. **(70)**

**तं गुरुरुवाच - एवं तर्हि स्त्रार्थस्त्वं चितिमत्वात्, न परेण प्रयुज्यसे । न हि चितिमान् परतन्त्रः परेण प्रयुज्यते, चितिमतः चितिमदर्थत्वानुपपत्तेः समत्वात् प्रदीपप्रकाशयोरिव । नापि अचितिमदर्थत्वं चितिमतो भवति, अचितिमतोऽचितिमत्वादेव स्वार्थ संबन्धानुपपत्तेः । नापि अचितिमतोः अन्योन्यार्थत्वं दृष्टम् । न हि काष्टकुड्ये अन्योन्यार्थं कुर्वाते ॥ ७१ ॥**

**தம் கு³ருருவாச - ஏவம் தர்ஹி ஸ்த்ரார்த²ஸ்த்வம் சிதிமத்வாத், ந பரேண ப்ரயுஜ்யஸே । ந ஹி சிதிமான் பரதந்த்ர: பரேண ப்ரயுஜ்யதே, சிதிமத: சிதிமத³ர்த²த்வானுபபத்தே: ஸமத்வாத் ப்ரதீ³பப்ரகாஶயோரிவ । நாபி அசிதிமத³ர்த²த்வம் சிதிமதோ ப⁴வதி, அசிதிமதோ(அ)சிதிமத்வாதே³வ ஸ்வார்த² ஸம்ப³ந்தா⁴னுபபத்தே: । நாபி அசிதிமதோ: அன்யோன்யார்த²த்வம் த்³ருஷ்டம் । ந ஹி காஷ்டகுட்³யே அன்யோன்யார்த²ம் குர்வாதே ॥ 71 ॥**

| | | |
|---|---|---|
| **तं**<br>**தம்** | = | அவனைப்பார்த்து, |
| **गुरुः**<br>**கு³ரு:** | = | ஆசார்யர், |
| **उवाच**<br>**உவாச** | = | சொன்னர், |
| **एवं तर्हि**<br>**ஏவம் தர்ஹி** | = | இப்படியானல், |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **चितिमत्वात्**<br>**சிதிமத்வாத்** | = | அறிவுள்ளவனயிருப்பதால், |
| **स्वार्थः**<br>**ஸ்வார்த²:** | = | தனக்காகவே இருப்பவன், |
| **परेण**<br>**பரேண** | = | பிறரால், |
| **न प्रयुज्यसे**<br>**ந ப்ரயுஜ்யஸே** | = | ஏவப்படவில்லை, |

| | | |
|---|---|---|
| चितिमान्<br>சிதிமான் | = | ஞானமுள்ளவன், |
| परतन्त्रः<br>பரதந்த்ர꞉ | = | பிறருக்குக் கட்டுப்பட்டவனாக, |
| परेण<br>பரேண | = | பிறரால், |
| न हि प्रयुज्यते<br>ந ஹி ப்ரயுஜ்யதே | = | ஏவப்படுகிறதில்லையல்லவா! |
| प्रदीपप्रकाशयोरिव<br>ப்ரதீ³பப்ரகாஶயோரிவ | = | இரு தீபங்களின் பிரகாசங்களைப்போல, |
| समत्वात्<br>ஸமத்வாத் | = | ஸமமாயிருப்பதால், |
| चितिमतः<br>சிதிமத꞉ | = | சைதன்யமுள்ளவனுக்கு, |
| चितिमदर्थत्वानुपपत्तेः<br>சிதிமத³ர்த²த்வானுபபத்தே꞉ | = | சைதன்யமுள்ள மற்றவனின் பிரயோஜனத்திற்காக இருப்பது யுக்தமில்லாததால், |
| अचितिमतः<br>அசிதிமத꞉ | = | சைதன்யமில்லாதது, |
| अचितिमत्वादेव<br>அசிதிமத்வாதே³வ | = | ஜடமாக இருப்பதனாலேயே, |
| स्वार्थसंबन्धानुपपत्तेः<br>ஸ்வார்த²ஸம்ப³ந்தா⁴னுபபத்தே꞉ | = | தனக்காக இருப்பது என்பது பொருந்தாததால், |
| चितिमतः<br>சிதிமத꞉ | = | சைதன்யமுள்ள பொருளுக்கு, |
| अचितिमदर्थत्वं<br>அசிதிமத³ர்த²த்வம் | = | ஜடப்பொருளின் பிரயோஜனத்திற்காக இருக்கும் தன்மை, |
| नापि भवति<br>நாபி ப⁴வதி | = | பொருந்தாது. |
| अचितिमतोः<br>அசிதிமதோ꞉ | = | இரு ஜடப்பொருள்களுக்கு, |
| अन्योन्यार्थत्वं<br>அன்யோன்யார்த²த்வம் | = | ஒன்றுக்கொன்றுக்காக இருக்கும் தன்மை, |
| नापि दृष्टं<br>நாபி த்³ருஷ்டம் | = | கண்டதில்லை, |
| काष्टकुड्ये<br>காஷ்டகுட்³யே | = | மரக் கட்டையும் சுவரும், |

**अन्योन्यार्थं** = ஒன்றுக்கொன்று பயனை,

**அன்யோன்யார்த²ம்**

**न हि कुर्वाते** = செய்துகொள்கிறதில்லை.

**ந ஹி குர்வாதே**

ஜடமான தேஹாதிகளைக் காட்டிலும் வேறுபட்டவனான நீ சேதனன். ஆகையினாலேயே நீ பிறருக்குப் பயனை உண்டுபண்ணுவதற்காக இருக்கவில்லை. உனக்காகத் தான் ஜடவர்க்கங்கள் இருக்கின்றன. நீ ஸ்வதந்திரன் எல்லாவற்றையும் நீ தான் ஏவுகிறாய் பிறவற்றால் நீ ஏவப்படுவதில்லை. ஜடப்பொருள் ஜடமாக இருப்பதனாலேயே அதன் பயன் சேதனனுக்குத்தான். ஜடத்துக்கு அல்ல. அப்படியிருக்க ஜடப்பொருளின் பயனுக்காக சேதனன் இருப்பதாக எப்படிக் கூறமுடியும்? ஒரேமாதிரி ஒளி உள்ள இரு தீபங்கள் ஸமமாக இருப்பதால் ஒன்றுக்கொன்று பயனைச் செய்து கொள்வதில்லை. இதுபோலவே ஸமமாக உள்ள இருசேதனர்கள் ஒருவருக்கொருவர் உபகாரம் செய்துகொள்வதில்லை. ஜடப்பொருள்கள் ஒன்றுக்கொன்று உதவி செய்து கொள்வதாகக்கூறுவதும் சரியல்ல ஒரே வீட்டிலுள்ள மரமும், சுவரும் ஒன்றுக் கொன்று உதவி செய்து கொள்கிறதா? இவ்விரண்டும் சேர்ந்து சேதனனான புருஷனுக்குத்தான் பயனைத்தருகின்றன. ஆகவே ஜடவர்க்கங்களால் ஏற்படும் பயனைப் பெறுகிறவன் நீ. நீ ஸ்வதந்திரன், நீதான் எல்லாவற்றையும் ஏவுகிறாய் "நான் பரதந்திரன், பிறரால் ஏவப்பட்டு ஆரோபம் செய்கிறேன்" என்று நீ கூறுவது சரியல்ல. **(71)**

## ननु चितिमत्वे समेऽपि भृत्यस्वामिनोः अन्योन्यार्थत्वं दृष्टम्? ॥ ७२ ॥

**நனு சிதிமத்வே ஸமே(அ)பி ப்⁴ருத்யஸ்வாமினோ: அன்யோன்யார்த²த்வம் த்³ருஷ்டம்? ॥ 72 ॥**

**चितिमत्वे** = அறிவுடன் கூடியிருக்கும் தன்மை,

**திமத்வே**

**समेऽपि** = ஸமமாக இருந்தபோதிலும்,

**ஸமே(அ)பி**

**भृत्यस्वामिनोः** = வேலைக்காரனுக்கும் யஜமானனுக்கும்,

**ப்⁴ருத்யஸ்வாமினோ:**

**अन्योन्यार्थत्वं** = ஒருவருக்கொருவர் பயனடையும் தன்மை,

**அன்யோன்யார்த²த்வம்**

**ननु दृष्टम्** = காணப்பட்டுள்ளதே?

**நனு த்³ருஷ்டம்**

யஜமானன், வேலைக்காரன் இருவரும் சேதனர்கள். யஜமானனிடம் உள்ளது போலவேதான் வேலைக்காரனிடமும் சைதன்யம் இருக்கிறது. இந்த விஷயத்தில் இருவர்களும் ஸமானர்கள் தான். ஆனாலும் யஜமானனால் வேலைக்காரனும், வேலைக்காரனால் யஜமானனும் பயன் பெறுகிறார்களே! ஆகவே இரு சேதனர்கள்

ஒருவருக்கொருவர் பயன்பெறுவதில்லை என்று எப்படிக் கூறமுடியும் என்று சிஷ்யன் கேட்டான். **(72)**

(**அவதாரிகை**) குரு பதில் கூறுகிறார்: -

**नैवम्, अग्नेरुष्णप्रकाशवत्तव चितिमत्त्वस्य विवक्षितत्वात् । प्रदर्शितश्च दृष्टान्तः प्रदीपप्रकाशयोरिवेति । तत्रैवं सति स्वबुद्ध्यारूढमेव सर्वमुपलभसे अग्न्युष्णप्रकाशतुल्येन कूटस्थनित्यचैतन्यस्वरूपेण । यदि चैवमात्मनः सर्वदा निर्विशेषत्वमुपगच्छसि, किमित्यूचिवान् 'सुषुप्ते विश्रम्य विश्रम्य जाग्रत्स्वप्नयोः दुःखमनुभवामि, किमयमेव मम स्वभावः किं वा नैमित्तिकः 'इति च । किमसौ व्यामोहोऽपगतः, किं वा न? ॥ ७३ ॥**

**நைவம், அக்³னேருஷ்ணப்ரகாஶவத்தவ சிதிமத்த்வஸ்ய விவக்ஷிதத்வாத் । ப்ரத³ர்ஶிதஶ்ச த்³ருஷ்டாந்த: ப்ரதீ³பப்ரகாஶயோரிவேதி । தத்ரைவம் ஸதி ஸ்வபு³த்³த்⁴யாரூட⁴மேவ ஸர்வமுபலப⁴ஸே அக்³ன்யுஷ்ணப்ரகாஶதுல்யேன கூடஸ்த²நித்யசைதன்யஸ்வரூபேண । யதி³ சைவமாத்மன: ஸர்வதா³ நிர்விஶேஷத்வ முபக³ச்ச²ஸி, கிமித்யூசிவான் 'ஸுஷுப்தே விஶ்ரம்ய விஶ்ரம்ய ஜாக்³ரத்ஸ்வப்ன யோ: து³:க²மனுப⁴வாமி, கிமயமேவ மம ஸ்வபா⁴வ: கிம் வா நைமித்திக: 'இதி ச । கிமஸௌ வ்யாமோஹோ(அ)பக³த:, கிம் வா ந? ॥ 73 ॥**

| | | |
|---|---|---|
| **अग्नेः** अக்³னே: | = | அக்னியின், |
| **उष्णप्रकाशवत्** உஷ்ணப்ரகாஶவத் | = | சூடும் ஒளியும்போல, |
| **तव** தவ | = | உன், |
| **चितिमत्त्वस्य** சிதிமத்த்வஸ்ய | = | சைதன்யம், |
| **विवक्षितत्वात्** விவக்ஷிதத்வாத் | = | கருத்துக்கு விஷயமானதால், |
| **नैवम्** நைவம் | = | இவ்வாறு அல்ல, |
| **प्रदीपप्रकाशयोरिव** ப்ரதீ³பப்ரகாஶயோரிவ | = | விளக்கு, ஒளி இவைகளுக்குப் போல, |
| **इति** இதி | = | என்று, |
| **दृष्टान्तश्च** த்³ருஷ்டாந்தஶ்ச | = | திருஷ்டாந்தமும், |

| | | |
|---|---|---|
| **प्रदर्शित:** ப்ரத³ர்ஶித: | = | காட்டப்பட்டு இருக்கிறது, |
| **तत्र एवं सति** தத்ர ஏவம் ஸதி | = | அது இவ்வாறிருக்கும்பொழுது, |
| **स्वबुद्ध्यारूढं** ஸ்வபு³த்³த்⁴யாரூட⁴ம் | = | தன் புத்தி விருத்தியில் ஏறின, |
| **सर्वमेव** ஸர்வமேவ | = | எல்லாவற்றையுமே, |
| **अग्न्युष्णप्रकाशतुल्येन** அக்³ன்யுஷ்ணப்ரகாஶதுல்யேன | = | நெருப்பிலுள்ள சூடு, ஒளி இவைகளுக்கு ஒப்பான, |
| **कूटस्थनित्यचैतन्यस्वरूपेण** கூடஸ்த²நித்யசைதன்யஸ்வரூபேண | = | மாறுதலற்றதும், அழிவற்றதுமான தன் ஸ்வரூபமான சைதன்யத்தால், |
| **उपलभसे** உபலப⁴ஸே | = | அறிந்து கொள்கிறாய், |
| **एवं** ஏவம் | = | இவ்வாறு, |
| **सर्वदा** ஸர்வதா³ | = | எப்பொழுதும், |
| **आत्मन:** ஆத்மன: | = | ஆத்மாவின், |
| **निर्विशेषत्वं** நிர்விஶேஷத்வம் | = | விசேஷமில்லாதிருக்கும் தன்மையை, |
| **यदि च उपगच्छसि** யதி³ ச உபக³ச்ச²ஸி | = | ஒப்புக்கொள்வாயேயானால், |
| **सुषुप्ते** ஸுஷுப்தே | = | ஸுஷுப்தியில், |
| **विश्रम्य विश्रम्य** விஶ்ரம்ய விஶ்ரம்ய | = | விட்டுவிட்டு, |
| **जाग्रत्स्वप्नयो:** ஜாக்³ரத்ஸ்வப்னயோ: | = | நனவிலும் கனவிலும், |
| **दु:खं** து³:க²ம் | = | துன்பத்தை, |
| **अनुभवामि** அனுப⁴வாமி | = | அனுபவிக்கிறேன், |
| **अयमेव** அயமேவ | = | இதுவே, |

**मम** = என்னுடைய,

**மம**

**किं स्वभाव:** = ஸ்வபாவமா?

**கிம் ஸ்வபா⁴வ:**

**किं वा** = அல்லது,

**கிம் வா**

**नैमित्तिक:** = காரணத்தால் ஏற்பட்டதா,

**நைமித்திக:**

**इति च** = என்றும்,

**இதி ச**

**किमिति ऊचिवान्** = என்ன காரணத்தால் சொன்னாய்,

**கிமிதி ஊசிவான்**

**असौ** = அந்த,

**அஸௌ**

**व्यामोह:** = மயக்கம்,

**வ்யாமோஹ:**

**किं अपगत:** = நீங்கி விட்டதா,

**கிம் அபக³த:**

**किं वा न** = அல்லது இல்லையா?

**கிம் வா ந**

சூடும் ஒளியும் அக்னியின் ஸ்வரூபத்தில் சேர்ந்துள்ளது போல் சைதன்யம் தான் உன் ஸ்வரூபம். ஒரு தீபத்தின் வெளிச்சம் மற்றொர் தீப ஒளியிலிருந்து பயன டைவதில்லை. இதுபோல இரண்டு சைதன்யங்கள் ஒன்றுக்கொன்று பயன் அடைவ தில்லை. வேலைக்காரனின் தேஹத்தால் யஜமானனுக்கும், யஜமானனில் தேஹத்தால் வேலைக்காரனுக்கும் பயன் ஏற்படுகிறதே தவிற அங்கும் சைதன்யங்கள் ஒன்றுக் கொன்று உதவிக்கொள்வதில்லை. ஆகவே நீ சொன்ன திருஷ்டாந்தம் சரியல்ல. உன்னுடைய ஸ்வரூபபூதமான ஞானம் மாறுதலற்றது. அழிவற்றது எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருப்பது அக்னியின் சூடு, ஒளி போன்றது. அந்த ஞானத்தில் ஒரு விசேஷமும் கிடையாது விஷயங்கள் மனத்துடன் ஸம்பந்தப்பட்டு விருத்தி யுண்டாகும்பொழுதும் அதன்மூலம் ஸ்வரூப ஞானம்தான் விஷயங்களை பிரகாசப் படுத்துகிறது. அப்பொழுது விசேஷம் தோன்றுகிறது, இது ஆகந்துகம். விருத்திகள் நீங்கிவிட்டால் (ஸுஷுப்தியில்) நிர்விசேஷமாக ஞானம் பிரகாசிக்கிறது. விருத்திக ளால் ஏற்படும் விசேஷங்கள் சைதன்யத்தின் ஸ்வரூபத்தில் சேர்ந்ததல்ல. அத்யா ஸத்தால் ஏற்பட்டது. ஆகவே ஸுஷுப்தியில் ஆத்மாவிற்கு அறிவு இல்லையென்றும், கனவிலும் நனவிலும் ஆத்மாவுக்கு துக்கானுபவம் ஏற்படுவதாகவும் நீ (45ல்) கூறியது அவிவேகத்தால். அது இப்பொழுது நீங்கிவிட்டதா? **(73)**

इत्युक्तः शिष्य उवाच - भगवन् अपगतस्त्वत्प्रसादात् व्यामोहः; किन्तु मम कूटस्थतायां संशयः । कथम्? शब्दादीनां स्वतः सिद्धिर्नास्ति, अचेतनत्वात्, शब्दाद्याकारप्रत्ययोत्पत्तेस्तु तेषाम् । प्रत्ययानामितरेतर- व्यावृत्तविशेषणानां नीलपीताद्याकारवतां स्वतः सिध्यसंभवात् । तस्मात् बाह्याकारनिमित्तत्वं गम्यत इति बाह्याकारवच्छन्दाद्याकारत्वासिद्धिः । तथा प्रत्ययानामप्यहं प्रत्ययालम्बन वस्तुभेदानां संहतत्वादचैतन्योपपत्तेः स्वार्थत्वासंभवात् स्वरूपव्यतिरिक्तग्राहक ग्राह्यत्वेन सिद्धि :, शब्दादिवदेव । असंहतत्वे सति चैतन्यात्मकत्वात् स्वार्थोऽप्यहं प्रत्ययानां नीलपीता- द्याकाराणामुपलब्धेति विक्रियावानेव, कथं कूटस्थः? इति संशयः ॥ ७४ ॥

இத்யுக்த: ஶிஷ்ய உவாச - ப⁴க³வன் அபக³தஸ்த்வத்ப்ரஸாதா³த் வ்யாமோஹ:; கிந்து மம கூடஸ்த²தாயாம் ஸம்ஶய: । கத²ம்? ஶப்³தா³தீ³னாம் ஸ்வத: ஸித்³தி⁴ர்நாஸ்தி, அசேதனத்வாத், ஶப்³தா³த்³யாகாரப்ரத்ய யோத் பத் தேஸ்து தேஷாம் । ப்ரத்யயாநாமிதரேதர - வ்யாவ்ருத்தவிஶேஷணானாம் நீலபீதா த்³யாகாரவதாம் ஸ்வத: ஸித்⁴யஸம்ப⁴வாத் । தஸ்மாத் பா³ஹ்யாகார நிமித் தத்வம் க³ம்யத இதி பா³ஹ்யாகாரவச்ச²ந்தா³த்³யாகாரத்வாஸித்³தி⁴: । ததா² ப்ரத்யயாநாமப்யஹம் ப்ரத்யயாலம்ப³ன வஸ்துபே⁴தா³னாம் ஸம்ஹதத் வாத³ சைதன்யோபபத்தே: ஸ்வார்த²த்வாஸம்ப⁴வாத் ஸ்வரூபவ்யதிரிக்தக்³ராஹக க்³ ராஹ்யத்வேன ஸித்³தி⁴ :, ஶப்³தா³தி³வதே³வ । அஸம்ஹதத்வே ஸதி சைதன் யாத்மகத்வாத் ஸ்வார்தோ²(அ)ப்யஹம் ப்ரத்யயானாம் நீலபீதா - த்³யா காராணா முபலப்³தே⁴தி விக்ரியாவானேவ, கத²ம் கூடஸ்த²:? இதி ஸம்ஶய: ॥ 74 ॥

इति = என்று,
இதி

उक्तः = சொல்லப்பட்ட,
உக்த:

शिष्यः = சிஷ்யன்,
ஶிஷ்ய:

उवाच = சொன்னான்,
உவாச

भगवन् = பூஜ்யரே,
ப⁴க³வன்

त्वत्प्रसादात् = உங்களுடைய அனுக்ரஹத்தால்,
த்வத்ப்ரஸாதா³த்

व्यामोहः = அவிவேகம்,
வ்யாமோஹ:

| | | |
|---|---|---|
| **अपगत:** | = | நீங்கிவிட்டது, |
| **அபக³த:** | | |
| **किन्तु** | = | ஆனால், |
| **கிந்து** | | |
| **मम** | = | எனக்கு, |
| **மம** | | |
| **कूटस्थतायां** | = | மாறுதிருக்கும் தன்மை விஷயத்தில், |
| **கூடஸ்த²தாயாம்** | | |
| **संशय:** | = | ஸந்தேஹம் (இருக்கிறது), |
| **ஸம்ஶய:** | | |
| **कथम्** | = | எப்படி? |
| **கத²ம்** | | |
| **अचेतनत्वात्** | = | ஜடமாக இருப்பதால், |
| **அசேதனத்வாத்** | | |
| **शब्दादीनां** | = | சப்தம் முதலான விஷயங்களுக்கு, |
| **ஶப்³தா³தீ³னாம்** | | |
| **स्वत:** | = | தானாகவே, |
| **ஸ்வத:** | | |
| **सिद्धि:** | = | பிரஸித்தி, |
| **ஸித்³தி⁴:** | | |
| **नास्ति** | = | கிடையாது, |
| **நாஸ்தி** | | |
| **शब्दाद्याकारप्रत्ययोत्पत्तेस्तु** | = | சப்தம் முதலியவைகளின் வடிவம் |
| **ஶப்³தா³த்³யாகாரப்ரத்ய யோத்பத்தேஸ்து** | | கொண்ட ஞானம் உண்டாவதால் தான், |
| **तेषां** | = | அவைகளுக்கு (பிரஸித்தி), |
| **தேஷாம்** | | |
| **इतरेतरव्यावृत्तविशेषणानां** | = | ஒன்றுக்கொன்று மாறுபட்ட விசேஷணங்களை உடைய, |
| **இதரேதரவ்யாவ்ருத்த விஶேஷணானாம்** | | |
| **नीलपीताद्याकारवतां** | = | நீலம், மஞ்சள் முதலான உருவம்கொண்ட, |
| **நீலபீதாத்³யாகாரவதாம்** | | |
| **प्रत्ययानां** | = | ஞானங்களுக்கு, |
| **ப்ரத்யயானாம்** | | |
| **स्वत: सिध्यसंभवात्** | = | தானாகவே ப்ரஸித்தி ஏற்படாததால், |
| **ஸ்வத: ஸித்⁴யஸம்ப⁴வாத்** | | |

| | | |
|---|---|---|
| **तस्मात्** | = | ஆகையால், |
| **தஸ்மாத்** | | |
| **बाह्याकारनिमित्तत्वं** | = | வெளிப்பட்டதான உருவத்தைக் காரணமாக |
| **பா³ஹ்யாகாரநிமித்தத்வம்** | | உடையதாயிருக்கும் தன்மை, |
| **गम्यते** | = | அறியப்படுகிறது, |
| **க³ம்யதே** | | |
| **इति** | = | என்ற காரணத்தால், |
| **இதி** | | |
| **बाह्याकारवच्छन्दाद्या** | = | வெளிப்பட்ட உருவத்துடன் கூடிய சப்தம் |
| **कारत्वासिद्धिः** | | முதலியவற்றின் உருவம் உள்ளதாக |
| **பா³ஹ்யாகாரவச்ச²ந்தா³த்³யாகாரத்வாஸித்³தி⁴:** | | ஸித்திக்கிறது, |
| **तथा** | = | அவ்வாறே, |
| **ததா²** | | |
| **अहंप्रत्ययालम्बन** | = | நான் என்ற நினைப்புக்கு ஆஸ்பதமான |
| **वस्तुभेदानां** | | அந்தக்கரணவஸ்துவின் விருத்தி |
| **அஹம்ப்ரத்யயாலம்ப³ன வஸ்துபே⁴தா³னும்** | | விசேஷங்களான, |
| **प्रत्ययानामपि** | = | ஞானங்களுக்கும், |
| **ப்ரத்யயாநாமபி** | | |
| **संहतत्वात्** | = | சேர்ந்திருக்கும் காரணத்தால், |
| **ஸம்ஹதத்வாத்** | | |
| **अचैतन्योपपत्तेः** | = | ஜடத்தன்மை பொருந்தியிருப்பதால், |
| **அசைதன்யோபபத்தே:** | | |
| **स्वार्थत्वासंभवात्** | = | தனக்காக உள்ளது என்பது ஸம்பவிக்காததால், |
| **ஸ்வார்த²த்வாஸம்ப⁴வாத்** | | |
| **शब्दादिवदेव** | = | சப்தம் முதலியவைபோல, |
| **ஶப்³தா³தி³வதே³வ** | | |
| **स्वरूपव्यतिरिक्तग्राहकग्राह्यत्वेन** | = | தன் ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறான |
| **ஸ்வரூபவ்யதிரிக்தக்³ராஹகக்³ராஹ்யத்வேன** | | அறியும் வஸ்துவால் அறியப்படுவதால், ப்ரஸித்தி ஏற்படுகிறது, |
| **असंहतत्वे** | = | ஒன்றிலும் சேராமலிருந்துகொண்டு, |
| **அஸம்ஹதத்வே** | | |
| **चैतन्यात्मकत्वात्** | = | சைதன்யரூபமாக இருப்பதால், |
| **சைதன்யாத்மகத்வாத்** | | |
| **स्वार्थोपि** | = | தனக்காக ஏற்பட்டுள்ள போதிலும் ஆத்மா, |
| **ஸ்வார்தோ²பி** | | |

**नीलपीताद्याकाराणां** = நீலம், மஞ்சள் முதலிய வடிவம்கொண்ட,

**நீலபீதாத்³யாகாராணும்**

**अहंप्रत्ययानां** = அந்தக்கரணவிருத்திகளை,

**அஹம்ப்ரத்யயானும்**

**उपलब्धा इति** = அறிகிறவர் என்ற காரணத்தால்,

**உபலப்³தா⁴ இதி**

**विक्रियावानेव** = விகாரமுள்ளவர்தான்,

**விக்ரியாவானேவ**

**कथं** = எப்படி,

**கத²ம்**

**कूटस्थः** = மாறுபாடு இல்லாதவர்?

**கூடஸ்த²:**

**इति** = என்று,

**இதி**

**संशयः** = ஸந்தேஹம்.

**ஸம்ஶய:**

ஆத்மா ஞானஸ்வரூபர் என்ற விஷயத்தில் தங்கள் அனுக்ரஹத்தால் ப்ராந்தி நீங்கினுலும் அவர் கூடஸ்தர் (நிர்விகாரர்) தானு என்ற விஷயத்தில் ஸந்தேஹம் இருக்கிறது. எப்படியெனில் உலகில் சப்தம் முதலான விஷயங்கள் ஜடமானதால் அவைகளுக்குத் தாஞகவே ப்ரஸித்தி கிடையாது. அவைகளின் விஷயமான ஞானத் தால்தான் பிரஸித்தி ஞானத்தில் நீலஞானம், பீதஞானம் என்று பலவித வேற்றுமை கள் இருப்பதால் நீல பீதாத்யாகாரத்துடன் கூடிய ஞானங்களுக்கும் தாஞகவே ஸித்தி கிடையாது வெளிப்பட்டதான விஷயங்களை அனுஸரித்துத்தான் இம்மாதிரி யான ஞானங்கள் ஏற்படுகின்றன. ஆகையால் 'பாஹ்யமான விஷயமே கிடையாது. எல்லாம் விஜ்ஞான ஸ்வரூபம்தான்' என்று விஜ்ஞானவாதி கூறுவது சரியல்ல பாஹ்யமான விஷயங்கள் இல்லாவிட்டால் ஞானத்தில் இத்தனை வேற்றுமை எப்படி ஏற்படும்? ஞானம் என்பது அந்தக்கரணவிருத்தி. அது வந்து போகக்கூடியது. விஷயத்துடன் சேர்ந்துள்ளது. அதனுல் அது ஜடம், பிறருக்காகத்தான் ஏற்பட்டிருக்க வேண்டும். தன்னைக் காட்டிலும் வேறன சேதனனுல் அறியப்படுவதால்தான் அதற்கும் பிரஸித்தி. ஆத்மா ஒன்றுடனும் சேராத சைதன்யமாக இருந்தாலும் நீல - பீதாதி வடிவமான விருத்திகளை அறிந்து கொள்கிறுர். விருத்தி உண்டாகும்பொழுது அது விஷயமான ஞானம் ஏற்படுகிறது. விருத்தி போய் விட்டால் ஞானமும் போய் விடுகிறது. ஆகவே இம்மாதிரியான மாறுபாடுகளுடன் கூடிய ஆத்மாவை எவ்வாறு கூடஸ்தர் (நிர்விகாரர்) என்று கூறமுடியும் என்று ஸந்தேஹம் ஏற்படுகிறது. **(74)**

**तं गुरुरुवाच न युक्तस्तव संशयः, यतस्तेषां प्रत्ययानां नियमेन अशेषतः उपलब्धेरेव अपरिणामित्वात् कूटस्थ त्वसिद्धौ निश्चयहेतुमेव अशेषचित्तप्रचारोप**

**लब्धि संशयहेतुमात्थ । यदि हि तव परिणामित्वं स्यात्, अशेषस्वविषयचित्तप्रचारोपलब्धिर्न स्यात्; चित्तस्येव स्वविषये यथा चेन्द्रियाणां स्वविषयेषु न च तथा आत्मनस्तव स्वविषयैकदेशोपलब्धिः । अतः कूटस्थतैव तवेति ॥ ७५ ॥**

**தம் கு³ருருவாச ந யுக்தஸ்தவ ஸம்ஶய:, யதஸ்தேஷாம் ப்ரத்யயானாம் நியமேன அஶேஷத: உபலப்³தே⁴ரேவ அபரிணாமித்வாத் கூடஸ்த² த்வஸித்³தௌ⁴ நிஶ்சயஹேதுமேவ அஶேஷசித்தப்ரசாரோபலப்³தி⁴ ஸம்ஶயஹேதுமாத்த² । யதி³ ஹி தவ பரிணாமித்வம் ஸ்யாத், அஶேஷஸ்வவிஷயசித்தப்ரசாரோபலப்³தி⁴ர்ன ஸ்யாத்; சித்தஸ்யேவ ஸ்வவிஷயே யதா² சேந்த்³ரியாணாம் ஸ்வவிஷயேஷு ந ச ததா² ஆத்மனஸ்தவ ஸ்வவிஷயைகதே³ஶோபலப்³தி⁴: । அத: கூடஸ்த²தைவ தவேதி ॥ 75 ॥**

| | | |
|---|---|---|
| **तं**<br>**தம்** | = | அவனைப்பார்த்து, |
| **गुरुः**<br>**கு³ரு:** | = | ஆசார்யர், |
| **उवाच**<br>**உவாச** | = | சொன்னார், |
| **तव**<br>**தவ** | = | உனக்கு, |
| **संशयः**<br>**ஸம்ஶய:** | = | ஸந்தேஹம் (ஏற்படுவது), |
| **न युक्तः**<br>**ந யுக்த:** | = | யுக்தமல்ல, |
| **यतः**<br>**யத:** | = | ஏனெனில், |
| **नियमेन**<br>**நியமேன** | = | நிச்சயமாக, |
| **तेषां**<br>**தேஷாம்** | = | அந்த, |
| **प्रत्ययानां**<br>**ப்ரத்யயாநும்** | = | அந்தக்கரணவிருத்திகளை, |
| **अशेषतः**<br>**அஶேஷத:** | = | முழுவதும், |
| **उपलब्धेरेव**<br>**உபலப்³தே⁴ரேவ** | = | அறியும் காரணத்தினாலேயே, |
| **अपरिणामित्वात्**<br>**அபரிணாமித்வாத்** | = | விகாரம் அடையாமலிருப்பதால், |

**कूटस्थ त्वसिद्धौ** = மாறுபாடற்ற தன்மை ஸித்திக்கும்பொழுது,

**கூடஸ்த2 த்வஸித்3**

**निश्चयहेतुं** = தீர்மானிப்பதற்குக் காரணமான,

**நிஶ்சயஹேதும்**

**अशेषचित्तप्रचारोपलब्धिमेव** = மனதில் உண்டாகும் எல்லா விருத்திகளையும்

**அஶேஷசித்தப்ரசாரோபலப்3தி4மேவ** அறிவதையே,

**संशयहेतुं** = ஸந்தேஹத்திற்குக் காரணமாக,

**ஸம்ஶயஹேதும்**

**आत्थ** = கூறுகிறுயே!

**ஆத்த2**

**तव** = உனக்கு,

**தவ**

**परिणामित्वं** = விகாரமானது,

**பரிணமித்வம்**

**यदि हि स्यात्** = இருக்குமேயாகில்,

**யதி3 ஹி ஸ்யாத்**

**अशेषस्वविषयचित्तप्रचारोपलब्धिः** = தனக்கு விஷயமான மனோவிருத்திகள்

**அஶேஷஸ்வவிஷயசித்தப்ரசாரோபலப்3தி4:** எல்லாவற்றின் அறிவானது,

**न स्यात्** = ஏற்படாது,

**ந ஸ்யாத்**

**चित्तस्य** = மனதிற்கு,

**சித்தஸ்ய**

**स्वविषये इव** = தனது விஷயத்தில்போலும்,

**ஸ்வவிஷயே இவ**

**इन्द्रियाणां** = இந்திரியங்களுக்கு,

**இந்த்3ரியாணம்**

**स्वविषयेषु** = தன் விஷயங்களில்,

**ஸ்வவிஷயேஷு**

**यथा च** = எப்படியோ,

**யதா2 ச**

**तथा** = அது போலும்,

**ததா2**

**आत्मनः** = ஆத்மாவாகிய,

**ஆத்மன:**

**तव** = உனக்கு,

**தவ**

**स्वविषयैकदेशोपलब्धिः** = தனது விஷயங்களில் சிலவற்றைமட்டும்
**ஸ்வவிஷயைகதே³ஶோபலப்³தி⁴:** அறிவது,
**न च** = இல்லை,
**ந ச**
**अतः** = ஆகையால்,
**அத:**
**तव** = உனக்கு,
**தவ**
**कूटस्थतैव** = மாறுபாடற்ற தன்மைதான்,
**கூடஸ் த²தைவ**
**इति** = என்று.
**இதி**

அந்தக்கரணத்தில் மாறி மாறி உண்டாகும் விருத்திகள் எல்லாவற்றையும் ஆத்மா அறிந்து கொள்கிறபடியால் ஆத்மாவுக்கும் மாறுபாடு உண்டாகுமே! அவரை எப்படி கூடஸ்த்தர் என்று சொல்ல முடியும் என்று தன் ஸந்தேஹத்தை சிஷ்யன் கேட்டான். சிஷ்யன் கூறும் காரணத்தைக்கொண்டே, அதாவது மனோவிருத்திகள் எல்லாவற்றையும் ஆத்மா அறிகிறபடியினாலேயே, ஆத்மா கூடஸ்த்தர்தான் என்று குரு ஸமாதானம் கூறுகிறார். கூடஸ்த்தமில்லாத (மாறுபாடுள்ள) மனம், இந்திரிய ங்கள் இவைகள் எல்லாம் தனது விஷயங்கள் எல்லாவற்றையும் அறிகிறதில்லை. சிலவற்றைத்தான் அறிகின்றன. எந்த எந்த விஷயமாக மனம் மாறுபாடு அடைகிற தோ அவற்றைத்தான் மனம் அறிகிறது. மனத்தால் அறியப்படாத பொருள்கள் உலகில் ஏராளமாக இருக்கின்றன. இது போலவே கண் தன்னுடன் ஸம்பந்தப்படும் உருவத்தைத்தான் பார்க்கிறது. காது தன்னுடன் சேரும் சப்தத்தைத்தான் கேட்கிறது. இது போல் தான் ஒவ்வொரு இந்திரியமும், இவைகளாலறியப்படாத சப்தம், ரூபம் முதலான விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன. ஆகவே தனது விஷயங்களில் சிலவற்றை மட்டும் அறியும் மனம், இந்திரியம் இவைகளை விகாரமுள்ளதாகச் சொல்லலாம். ஆத்மாவோ அப்படியல்ல. ஆத்மாவின் விஷயம் மனோவிருத்திகள் தாம். அவைகள் எல்லாவற்றையும் ஆத்மா அறிகிறது ஆத்மாவால் அறியப்படாத மனோவிருத்திகளே கிடையாது. ஆத்மா மாறுபாடு அடையுமானால் எல்லாவற்றை யும் எப்படி அறிந்து கொள்ள முடியும்? ஆகையால் ஆத்மா கூடஸ்த்தன் தான். **(75)**

## तत्राह - उपलब्धिर्नाम धात्वर्थो विक्रियैव, उपलब्धुः कूटस्थात्मता चेति विरुद्धम् ॥ ७६ ॥

**தத்ராஹ - உபலப்³தி⁴ர்நாம தா⁴த்வர்தோ² விக்ரியைவ,**
**உபலப்³து⁴: கூடஸ்தா²த்மதா சேதி விருத்³த⁴ம் ॥ 76 ॥**

**तत्र** = அதில்,
**தத்ர**

**आह** = (சிஷ்யன்) கேட்கிறான்: -

**ஆஹ**

**उपलब्धिर्नाम** = அறிவு என்ற,

**உபலப்³தி⁴ர்நாம**

**धात्वर्थः** = தாதுவின் பொருளானது,

**தா⁴த்வர்த²:**

**विक्रियैव** = விகாரம்தான் என்பதும்,

**விக்ரியைவ**

**उपलब्धुः** = அறிகிறவருக்கு,

**உபலப்³து⁴:**

**कूटस्थात्मता इति च** = மாறுபாடில்லாத ஸ்வரூபமாக இருக்கும்

**கூடஸ்தா²த்மதா இதி ச** தன்மை என்பதும்,

**विरुद्धम्** = விருத்தமானது.

**விருத்³த⁴ம்**

'உப' **(उप)** என்ற உபஸர்கத்துடன் சேர்ந்த 'லப்⁴' **(लभ्)** என்ற தாதுவிற்குப் பின்னால் 'கர்த்தா' என்ற அர்த்தத்தில் 'த்ருச்' **(तृच्)** ப்ரத்யயம் 'உபலப்தா' என்ற பதம் ஏற்படுகிறது. தாதுவின் பொருள் 'க்ரியை' என்பது வியாகரண சாஸ்திரத்தின் தீர்மானம். க்ரியை உண்டாகி நசிக்கக்கூடியது. ஆகவே இங்கும் தாத்வர்த்த க்ரியா ரூபமான ஞானம் ஆத்மாவில் உண்டாகி நாசமடைவதால் ஆத்மா விகாரமுள்ளது தானே! எப்படி கூடஸ்தனாக இருக்க முடியும்? **(76)**

**न, धात्वर्थविक्रियायाम् उपलब्ध्युपचारात् । यो हि बौद्धः प्रत्ययः स धात्वर्थो विक्रियात्मकः आत्मनः उपलब्ध्याभासफलावसान इति उपलब्धिशब्देन उपचर्यते, यथा च्छिदिक्रिया द्वैधीभावफलावसानेति धात्वर्थत्वेनोपचर्यते तद्वत् ॥ ७७ ॥**

**ந, தா⁴த்வர்த²விக்ரியாயாம் உபலப்³த்⁴யுபசாராத் । யோ ஹி பௌ³த்³த⁴: ப்ரத்யய: ஸ தா⁴த்வர்தோ² விக்ரியாத்மக: ஆத்மன: உபலப்³த்⁴யாபா⁴ஸப² லாவஸான இதி உபலப்³தி⁴ஶப்³தே³ன உபசர்யதே, யதா² ச்சி²தி³க்ரியா த்³ வைதீ⁴பா⁴வப²லாவஸானேதி தா⁴த்வர்த²த்வேனோபசர்யதே தத்³வத் ॥ 77 ॥**

**न** = அல்ல,

**ந**

**धात्वर्थविक्रियायां** = தாதுவின் பொருளான க்ரியையில்,

**தா⁴த்வர்த²விக்ரியாயாம்**

**उपलब्ध्युपचारात्** = உபலப்தி என்று உபசாரமாகக் (கௌணமாகக்)

**உபலப்³த்⁴யுபசாராத்** கூறுவதால்,

**यो हि** = எது,
**யோ ஹி**
**बौद्धः** = புத்தியைச் சேர்ந்ததான,
**பௌ³த்³த⁴:**
**प्रत्ययः** = பரிஞ்ஞமமோ,
**ப்ரத்யய:**
**सः** = அது,
**ஸ:**
**धात्वर्थः** = தாதுவின் பொருளாகவும்,
**தா⁴த்வர்த²:**
**विक्रियात्मकः** = விகாரஸ்வரூபமாயும்,
**விக்ரியாத்மக:**
**आत्मनः** = ஆத்மாவின்,
**ஆத்மன:**
**उपलब्ध्याभासफलावसानः** = ஸ்வரூபபூத ஞானத்தின் ப்ரதிபிம்பரூபமான
**உபலப்³த்⁴யாபா⁴ஸப²லாவஸான:** பலனை முடிவாகக்கொண்டது,
**इति** = என்ற காரணத்தால்,
**இதி**
**उपलब्धिशब्देन** = 'உபலப்தி' பதத்தால்,
**உபலப்³தி⁴ஶப்³தே³ன**
**उपचर्यते** = கௌணமாகச் சொல்லப்படுகிறது,
**உபசர்யதே**
**यथा** = எப்படி,
**யதா²**
**च्छिदिक्रिया** = சேதனம் (வெட்டுதல்) என்ற வியாபாரமானது,
**ச்சி²தி³க்ரியா**
**द्वैधीभावफलावसाना इति** = இருகூறுகப்போவது என்ற பலனில்
**த்³வைதீ⁴பா⁴வப²லாவஸானா இதி** முடிவுறுகிறது என்ற காரணத்தினுல்,
**धात्वर्थत्वेन** = தாதுவின் பொருளாக,
**தா⁴த்வர்த²த்வேன**
**उपचर्यते** = கௌணமாகச் சொல்லப்படுகிறதோ,
**உபசர்யதே**
**तद्वत्** = அதுபோல,
**தத்³வத்**

தாதுவின் பொருள் க்ரியை என்பதும், பிரத்யயத்தின் பொருள் கர்த்தா என்பதும் பொதுவாக உள்ளதே தவிற சில இடங்களில் இதற்கு மாறுபாடும் காணப்படுகிறது.

**सविता प्रकाशते**

**ஸவிதா ப்ரகாஶதே**

என்ற இடத்தில் தாத்வர்த்தமான ப்ரகாசம் ஸூரியனுடைய ஸ்வரூபம்; அது க்ரியை அல்ல. ஸூரியன் கர்த்தாவும் அல்ல. அது போல உபலப்தி (ஞானம்) என்பது க்ரியை அல்ல. அது ஆத்மாவின் ஸ்வரூபம். புத்தியில் ஏற்படும் பரிணாமமான அந்தக்கரண விருத்தி தான் தாத்வர்த்தமான கிரியா ரூபம். இது உண்மையில் உபலப்தியல்ல. ஆனாலும் நெருப்பில் காய்ச்சிய இரும்பு நெருப்பாகத் தோன்றுவதுடன் 'அந்த இரும்பு சுடுகிறது' என்றும் சொல்வதைக் காண்கிறோம். அதுபோல அந்தக்கரணபரிணாமமான விருத்தியில் சைதன்ய ப்ரதிபிம்பம் ஏற்படுவதாலும், அந்தக்கரணபரிணாம ரூபமான க்ரியைக்கு இதுவே பலனானதாலும் தாத்வர்த்தமான அந்தக்கரண பரிணாமரூப விருத்தியையே உபலப்தி என்று உபசாரமாகச் சொல்லப்படுகிறது. வெட்டுவது என்ற வியாபாரத்தால் இருகூறுகப்போவது என்ற பலன் ஏற்படுவதால் அதையே தாத்வர்த்தமாகச் சொல்வதில்லையா? ஆகவே அந்தக்கரணமானது விகாரத்துடன் கூடியதாகவும் கர்த்தாவாகவும் இருந்தபோதிலும் நித்யமான உபலப்தி ஸ்வரூப மான ஆத்மாவுக்கு விகாரமோ, கர்த்ருத்வமோ ஒன்றும் கிடையாது. அது கூடஸ்தம் தான். அந்தக்கரணம் விகாரமுள்ளதாகவும், உபலப்தி ஸ்வரூபமான ஆத்மா கூடஸ்த மாகவும் உண்மையில் இருந்தபோதிலும் அந்தக்கரணத்தில் ஆத்மா ப்ரதிபலிக்கிற படியால், அவிவேகத்தால் நெருப்பை நீளம், வட்டம் என்று சொல்லுவதுபோல் கூடஸ்தமான ஆத்மாவை அந்தக்கரண தர்மங்களுடன் கூடியதாக ப்ராந்தியால் சொல்கிறோம். **(77)**

**इत्युक्तः शिष्य आह - ननु भगवन्, मम कूटस्थत्वप्रतिपादनं प्रत्यसमर्थो दृष्टान्तः । कथम्? छिदिः छेद्याविक्रियावसाना उपचर्यते यथा धात्वर्थत्वेन तथा उपलब्धिशब्दोपचरितोऽपि धात्वर्थो बौद्धप्रत्ययः आत्मनः उपलब्धिविक्रियाव सानश्चेत्, नात्मनः कूटस्थतां प्रतिपादयितुं ॥ ७८ ॥**

**இத்யுக்த: ஶிஷ்ய ஆஹ - நனு ப⁴க³வன், மம கூடஸ்த²த்வப்ரதிபாத³னம் ப்ரத்யஸமர்தோ² த்³ருஷ்டாந்த: । கத²ம்? சி²தி³: சே²த்³யாவிக்ரியாவஸானா உபசர்யதே யதா² தா⁴த்வர்த²த்வேன ததா² உபலப்³தி⁴ஶப்³தோ³பசரிதோ(அ)பி தா⁴த்வர்தோ² பௌ³த்³த⁴ப்ரத்யய: ஆத்மன: உபலப்³தி⁴விக்ரியாவஸானஶ்சேத், நாத்மன: கூடஸ்த²தாம் ப்ரதிபாத³யிதும் ॥ 78 ॥**

**इति** = இவ்வாறு,

**இதி**

**उक्तः** = சொல்லப்பட்ட,

**உக்த:**

**शिष्य** = சிஷ்யன்,

**ஶிஷ்ய**

**आह** = சொன்னான்,

**ஆஹ**

**ननु भगवन्** = ஸ்வாமி!

நனு ப⁴க³வன்

**मम** = எனக்கு,

**மம**

**कूटस्थत्वप्रतिपादनं प्रति** = விகாரமற்றதாக இருக்கும் தன்மையை

**கூடஸ்த²த்வப்ரதிபாத³னம் ப்ரதி** விளக்குவதைக்குறித்து,

**दृष्टान्तः** = உதாஹரணம்,

**த்³ருஷ்டாந்த:**

**असमर्थः** = சக்தியுடையதல்ல,

**அஸமர்த²:**

**कथम्** = எப்படி?,

**கத²ம்**

**छेद्याविक्रियावसाना** = ச்சேத்யமான (வெட்டுப்படுகின்ற) மரத்தில்

**சே²த்³யாவிக்ரியாவஸானா** த்வைதீபாவம் (இருகூறுகப்போவது) என்னும் விகாரத்தில் முடிவடைகிற,

**छिदिः** = ச்சிதிக்ரியையானது,

**சி²தி³:**

**धात्वर्थत्वेन** = தாதுவின் பொருளாக,

**தா⁴த்வர்த²த்வேன**

**यथा** = எப்படி,

**யதா²**

**उपचर्यते** = உபசாரமாகச் சொல்லப்படுகிறதோ,

**உபசர்யதே**

**तथा** = அப்படியே,

**ததா²**

**उपलब्धिशब्दोपचरितोऽपि** = உபலப்தி பதத்தால் உபசாரமாகக்

**உபலப்³தி⁴ஶப்³தோ³பசரிதோ(அ)பி** கூறப்பட்டபோதிலும்,

**धात्वर्थः** = தாதுவின் பொருளான,

**தா⁴த்வர்த²:**

**बौद्धप्रत्ययः** = புத்தி விருத்தியானது,

**பௌத்³த⁴ப்ரத்யய:**

**आत्मनः** = ஆத்மாவின்,
**ஆத்மன:**
**कूटस्थतां** = ஞானம் என்னும் விகாரத்தில்
**கூடஸ்த²தாம்** முடிவடையுமானல்,
**आत्मनः** = ஆத்மாவிற்கு,
**ஆத்மன:**
**कूटस्थतां** = கூடஸ்தனுக (விகாரமற்றவனுக) இருக்கும்
**கூடஸ்த²தாம்** தன்மையை,
**प्रतिपादयितुं** = விளக்குவதற்கு,
**ப்ரதிபாத³யிதும்**
**न समर्थः** = ஸாமர்த்தியமுடையது அல்ல.
**ந ஸமர்த²:**

வெட்டுவது என்னும் க்ரியை ச்சதி **(छिदि)** தாதுவின் பொருளாக இருந்த போதிலும் மரத்தில் இரு துண்டாகப் போவது என்னும் விகாரத்தை ஏற்படுத்தும் அந்த வியாபாரத்தைத்தான் **சி²தி³** தாதுவின் பொருளாக கௌணமாகச் சொல்கிறோம். அதுபோல் உபலப்தி பதத்தால் கௌணமாகச் சொல்லப்பட்டபோதிலும் தாத்வர்த்த மான புத்தி விருத்தியானது ஆத்மாவில் உபலப்தி என்னும் விகாரத்தை ஏற்படுத்து மானல் தான் தாத்வர்த்தமாகும். அதாவது சேதன வியாபாரத்தால் ஏற்படும் த்வைதீபாவம் என்னும் பலன் எப்படி விகாரமோ, அதுபோல் புத்தி விருத்தியினல் ஆத்மாவில் ஏற்படும் உபலப்தி என்ற பலனும் விகாரம் தான். ஆத்மா விகாரியான தால் எவ்வாறு கூடஸ்த்தனாகும்? **(78)**

**गुरुवाच - सत्यमेवं स्यात्, यदि उपलब्ध्युपलब्ध्रोः विशेषः।**
**नित्योपलब्धिमात्र एव हि उपलब्धा ।**
**न तु तार्किकसमय इव अन्या उपलब्धिः अन्यः उपलब्धा च ॥ ७९ ॥**

**கு³ருருவாச - ஸத்யமேவம் ஸ்யாத், யதி³ உபலப்³த்⁴யுபலப்³த்⁴ரோ: விஶேஷ:।**
**நித்யோபலப்³தி⁴மாத்ர ஏவ ஹி உபலப்³தா⁴ ।**
**ந து தார்கிகஸமய இவ அன்யா உபலப்³தி⁴: அன்ய: உபலப்³தா⁴ ச ॥ 79 ॥**

**गुरुः** = ஆசாரியன்,
**கு³ரு:**
**उवाच** = சொன்னர்,
**உவாச**
**सत्यं** = வாஸ்தவம்,
**ஸத்யம்**
**उपलब्ध्युपलब्ध्रोः** = அறிவுக்கும் அறிகிறவனுக்கும்,
**உபலப்³த்⁴யுபலப்³த்⁴ரோ:**

**विशेष:** = வேறுபாடு,

**விஶேஷ:**

**यदि** = இருக்குமானல்,

**யதி³**

**एवं स्यात्** = நீ சொன்னவாறு ஆகும்,

**ஏவம் ஸ்யாத்**

**उपलब्धा** = அறிகிற ஆத்மா,

**உபலப்³தா⁴**

**नित्योपलब्धिमात्र एव हि** = அழிவற்ற ஞான ஸ்வரூபனுக மட்டும்தான்

**நித்யோபலப்³தி⁴மாத்ர ஏவ ஹி** இருக்கிறுன் அல்லவா!

**तार्किकसमय इव** = நியாய ஸித்தாந்தத்தில் போல,

**தார்கிகஸமய இவ**

**उपलब्धि:** = அறிவு,

**உபலப்³தி⁴:**

**अन्या** = வேறு,

**அன்யா**

**उपलब्धा च** = அறிகிறவனும்,

**உபலப்³தா⁴ ச**

**अन्य:** = வேறு (என்பது),

**அன்ய:**

**न तु** = இல்லை.

**ந து**

நியாய சாஸ்திரத்தில் உபலப்தாவான ஆத்மா வேறு, உபலப்தி (ஞானம்) வேறு. ஆத்மாவில் ஞானம் உண்டாகிறது பின் மறைந்து விடுகிறது. ஆத்மாவில் ஞானம் என்னும் விகாரம் உண்டாகி மறைவதாகச் சொல்வதால் அவர்கள் ஆத்மா வை கூடஸ்தன் (நிர்விகாரன்) என்று சொல்லமுடியாது. அவர்கள் சொல்வது சரியல்ல உண்மையில் உபலப்தி என்ற ஞானத்திற்கும் உபலப்தாவான ஆத்மாவு க்கும் சிறிதும் வேற்றுமை கிடையாது. ஆத்மாவின் ஸ்வரூபமே உபலப்திதான், அது நித்யம். வந்து போகக்கூடியதில்லை. நித்ய உபலப்தி ஸ்வரூபமான ஆத்மாவில் எவ்விதமான விகாரம்தான் கூறமுடியும்.? ஆகையால் ஆத்மா கூடஸ்தன்தான். பிறந்தது முதல் வாயைத்திறவாமல் ஜடன் போலும் மூகன் போலும் இருந்த ஹஸ்தாமலகரைப் பார்த்து ஸ்ரீ சங்கர பகவத்பாதர் 'நீ யார்' என்று கேட்க அவர் அளித்த பதில்

**'स नित्योपलब्धिखरूपोऽहमात्मा'**

**'ஸ நித்யோபலப்³தி⁴க²ரூபோ(அ)ஹமாத்மா'**

என்பதுதான். **(79)**

**(அவதாரிகை)** சிஷ்யன் கேட்கிறுன்: -

**ननूपलब्धिफलात्रसानो धात्वर्थ: कथमिति? ॥ ८० ॥**

**நனூபலப்$^3$தி$^4$ப$^2$லாத்ரஸானோ தா$^4$த்வர்த$^2$: கத$^2$மிதி? ॥ 80 ॥**

**धात्वर्थ:** = தாதுவின் பொருள்,
**தா$^4$த்வர்த$^2$:**

**उपलब्धिफलात्रसान:** = உபலப்தி என்னும் பலத்தில் முடிவுபெறுகிறது,
**உபலப்$^3$தி$^4$ப$^2$லாத்ரஸான:**

**इति** = என்பது,
**இதி**

**ननूकथम्** = எப்படி?
**நனூகத$^2$ம்**

வியாபாரமும் அதனுல் ஏற்படும் பலனும் தாதுவின் பொருள். ஆத்மாவில் உள்ள உபலப்தி நித்யமானுல் அதை வியாபார ஜன்யபலமாகவோ, தாத்வர்த்தமாக வோ எப்படிச் சொல்ல முடியும்? **(80)**

**उच्यते शृणु, उपलब्ध्याभासफलावसान इत्युक्तम् ।**
**किं न श्रुतं तत् त्वया? न त्वात्मा विक्रियोत्पादनावसान इति मयोक्तम् ॥ ८१ ॥**

**உச்யதே ஶ்ருணு, உபலப்$^3$த்$^4$யாபா$^4$ஸப$^2$லாவஸான இத்யுக்தம் ।**
**கிம் ந ஶ்ருதம் தத் த்வயா? ந த்வாத்மா விக்ரியோத்பாத$^3$னாவஸான இதி மயோக்தம் ॥ 81 ॥**

**उच्यते** = சொல்லப்படுகிறது,
**உச்யதே**

**शृणु** = கேள்,
**ஶ்ருணு**

**उपलब्ध्याभासफलावसान इति** = உபலப்தியின் பிரதிபிம்பமாகிற பலனில்
**உபலப்$^3$த்$^4$யாபா$^4$ஸப$^2$லாவஸான இதி** முடிவடைகிறது என்று,

**उक्तम्** = சொல்லப்பட்டது,
**உக்தம்**

**तत्** = அது,
**தத்**

**त्वया** = உன்னுல்,
**த்வயா**

**किं न श्रुतं** = காதால் கேட்கப்படவில்ஜலயா?
**கிம் ந ஶ்ருதம்**

**आत्मा** = ஆத்மாவானது,

**ஆத்மா**

**न तु विक्रियोत्पादनावसान इति** = விகாரமுண்டாகும் இடமல்ல என்று,

**ந து விக்ரியோத்பாத³னாவஸான இதி**

**मया** = என்றால்,

**மயா**

**उक्तम्** = சொல்லப்பட்டிருக்கிறது.

**உக்தம்**

வியாபாரமும், அதனால் ஏற்படும் பலமும் தாத்வர்த்தம் என்பதும் அந்த பலம் விகாரம்தான் என்பதும் வாஸ்தவம். ஆனால் இங்கு உபலப்தி என்பது ஆத்மாவின் ஸ்வரூபம் அது பலமும் அல்ல, விகாரமுமல்ல. ஆத்மாவில் ஒருவித விகாரமும் ஏற்பட முடியாது என்பது பல தடவைகளில் உனக்குக் கூறப்பட்டிருக்கிறது. புத்தி விருத்திதான் வியாபாரம் இது தாத்வர்த்தம். இந்த புத்தி விருத்தியில் உபலப்தி ஸ்வரூபமான ஆத்மாவின் ப்ரதிபிம்பம் ஏற்படுகிறது. இதுதான் தாத்வர்த்தமான க்ரியையின் பலன். இதுவும் தாதவர்த்தம்தான். இந்த பலன் அந்தக் கரணத்தில் ஏற்படுகிறதே தவிற ஆத்மாவில் அல்ல. ஆத்ம ஸ்வரூபமான உபலப்தி இந்த க்ரியையின் பலன் அல்ல. அது விகாரமுமல்ல. அது நித்யம். எல்லாவித விகாரங் களுக்கும் இருப்பிடம் அந்தக்கரணம்தான். ஆனால் அவித்யையாலும் அந்தக்கரண விருத்திகளில் ஆத்ம ப்ரதி பிம்பம் ஏற்படுவதாலும் அந்தக்கரண தர்மங்கள் எல்லாம் ஆத்மாவில் இருப்பதாக அத்யாஸத்தால் எண்ணி ஆத்மாவையே கர்த்தா, போக்தா, ப்ரமாதா, ஞாதா என்றெல்லாம் அறியாமையால் சொல்கிறோம். இது எல்லாம் உபாதி வசத்தால் ஏற்பட்டது நன்கு விவேசனம் செய்து ஆத்மாவைப் பிரித்துப் பார்த்தோ மானால் அதன் ஸ்வரூபம் அஸங்கம், நிர்விகாரம், கூடஸ்தம் என்பது நன்கு தெரிய வரும். **(81)**

## शिष्य उवाच - कथं तर्हि कूटस्थे मयि अशेषस्वविषयचित्तप्रचारोपलब्धृत्वमित्यात्थ? ॥ ८२ ॥

**ஶிஷ்ய உவாச - கத²ம் தர்ஹி கூடஸ்தே² மயி அஶேஷஸ்வவிஷயசித்தப்ரசாரோபலப்³த்⁴ருத்வமித்யாத்த²? ॥ 82 ॥**

**शिष्य उवाच** = சிஷ்யன் சொல்கிறான்,

**ஶிஷ்ய உவாச**

**तर्हि** = அப்படியானால்,

**தர்ஹி**

**कूटस्थे** = நிர்விகாரனான,

**கூடஸ்தே²**

**मयि** = என்னிடம்,

**மயி**

**अशेषस्वविषयचित्तप्रचारोपलब्धृत्वमिति** = தன் விஷயமான மனோவிருத்திகள்
**அஶேஷஸ்வவிஷயசித்தப்ரசாரோபலப்³த்⁴ருத்வமிதி** எல்லாவற்றையும் அறியும் தன்மை (இருக்கிறது) என்று,

**कथं** = எப்படி,
**கத²ம்**

**उवाच** = சொல்கிறீர்கள்?
**உவாச**

## तं गुरुरुवाच - सत्यमेवावोचम्, तेनैव कूटस्थतामब्रावं तव ॥ ८३ ॥

**தம் கு³ருருவாச - ஸத்யமேவாவோசம்,**
**தேனைவ கூடஸ்த²தாமப்³ராவம் தவ ॥ 83 ॥**

**तं** = அவனைப் பார்த்து,
**தம்**

**गुरु:** = குரு,
**கு³ரு:**

**उवाच** = சொன்னார்,
**உவாச**

**सत्यमेव** = உண்மையாகவே,
**ஸத்யமேவ**

**अवावोचं** = சொன்னேன்,
**அவாவோசம்**

**तेनैव** = அதனாலேயே,
**தேனைவ**

**तव** = உனக்கு,
**தவ**

**कूटस्थतां** = கூடஸ்தனாக இருக்கும் தன்மையை,
**கூடஸ்த²தாம்**

**अब्रावं** = சொன்னேன்.
**அப்³ராவம்**

நான் கூடஸ்தனானால் என் மனதில் உண்டாகும் எல்லா விருத்திகளின் ஞானம் எனக்கு எப்படி ஏற்படும். ஆத்மா கூடஸ்தன் என்பதும், அதில் ஞானம் உண்டாகிறது என்பதும் பரஸ்பர விரோதமில்லையா என்று சிஷ்யன் கேட்டான். மனத்திலுள்ள விருத்திகள் எல்லாவற்றையும் நீ அறிகிறபடியால்தான் கூடஸ்தன். உன்னிடத்தில் விகாரம் ஏற்படுமானால் எல்லா விருத்திகளையும் எப்படி அறிந்து கொள்ள முடியும்? விஷயங்கள் மாறி மாறி வந்தாலும் அவைகள் எல்லாவற்றையும் பார்க்கிறவன் மாறுபடாமல்தானே இருக்கிறான். மனோ விருத்திகளுக்கு ஸ்வரூப

ஞானத்தால் பிரகாசம். ஸாக்ஷிபாஸ்யங்கள் இவை. ஆகையால் ஆத்மாவில் புதிதாக ஞானமொன்றும் ஏற்படுவதில்லை. அவன் கூடஸ்தன்தான். **(82-83)**

(**அவதாரிகை**) சிஷ்யன் கேட்கிறுன்: -

**यद्येवं भगवन्, कूटस्थनित्योपलब्धिस्वरूपे मयि शब्दाद्याकारबौद्धप्रत्ययेषु च मत्स्वरूपोपलब्ध्याभासफलावसानवत्सु उत्पद्यमानेषु कस्त्वपराधो ममः? ॥ ८४ ॥**

**யத்³யேவம் ப⁴க³வன், கூடஸ்த²நித்யோபலப்³தி⁴ஸ்வரூபே மயி ஶப்³தா³த்³யாகாரபௌ³த்³த⁴ப்ரத்யயேஷு ச மத்ஸ்வரூபோபலப்³த்⁴யாபா⁴ஸப²லாவஸான வத்ஸு உத்பத்³யமானேஷு கஸ்த்வபராதோ⁴ மம:? ॥ 84 ॥**

**भगवन्** = பகவானே,
**ப⁴க³வன்**

**यद्येवं** = இப்படியானுல்,
**யத்³யேவம்**

**कूटस्थनित्योपलब्धिस्वरूपे** = கூடஸ்த்தமான (விகாரமற்ற) நித்யமான
**கூடஸ்த²நித்யோபலப்³தி⁴ஸ்வரூபே** (அழிவற்ற) ஞானஸ்வரூபனுன,

**मयि** = என்னிடம்,
**மயி**

**मत्स्वरूपोपलब्ध्याभासफलावसानवत्सु** = என் ஸ்வரூபமாகிற ஞானத்தின்
**மத்ஸ்வரூபோபலப்³த்⁴யாபா⁴ஸப²லாவஸான வத்ஸு** பிரதி பிம்பமாகிற பலனில் முடிவுபெறுகிற,

**शब्दाद्याकारबौद्धप्रत्ययेषु** = சப்தம் முதலான வடிவம்கொண்ட
**ஶப்³தா³த்³யாகாரபௌ³த்³த⁴ப்ரத்யயேஷு** புத்தி விருத்திகள்,

**उत्पद्यमानेषु** = உண்டாகும்பொழுது,
**உத்பத்³யமானேஷு**

**मम** = என்னுடைய,
**மம**

**अपराध:** = குற்றம்,
**அபராத⁴:**

**क:** = என்ன?
**க:**

குருவின் உபதேத்தால் ஆத்மா கூடஸ்த்தன் என்பதை நன்கு புரிந்துகொண்ட சிஷ்யன் கேட்கிறுன். நான் கூடஸ்த்தன், எவ்வித மாறுதலுமற்றவன், அழிவற்ற ஞான ஸ்வரூபன். சப்தாதி வடிவமுள்ள புத்தி விருத்திகள் என்னிடம் உண்டாகின்றன. இவற்றுல் என் ஸ்வரூப ஞானத்திற்கு ஒரு விகாரமும் கிடையாது. இந்த விருத்திகளின் பலனும் என் ஸ்வரூப ஞானத்தின் ப்ரதிபிம்பம் தான். இப்படியிருக்க

இந்த விருத்திகளைப் பார்த்துக் கொண்டிருக்கும் எனக்கு ஸம்ஸாராதி ப்ரமங்கள் ஏற்படக் காரணமென்ன? நான் செய்த குற்றம்தான் என்ன? **(84)**

**(அவதாரிகை)** குரு பதில் கூறுகிறார்: -

## सत्यम्, नास्त्यपराधः; किंतु अविद्यामात्रस्त्वपराध इति प्रागेवावोचम् ॥ ८५ ॥

**ஸத்யம், நாஸ்த்யபராத⁴:; கிந்து அவித்³யாமாத்ரஸ்த்வபராத⁴ இதி ப்ராகே³வாவோசம் ॥ 85 ॥**

**सत्यं** = வாஸ்தவம்,
**ஸத்யம்**

**नास्ति उपराधः** = குற்றமில்லைதான்,
**நாஸ்தி உபராத⁴:**

**किंतु** = ஆனாலும்,
**கிந்து**

**अविद्यामात्रस्तु** = அவித்யைதான்,
**அவித்³யாமாத்ரஸ்து**

**अपराधः** = குற்றம்,
**அபராத⁴:**

**इति** = என்று,
**இதி**

**प्रागेव** = முன்னாலேயே,
**ப்ராகே³வ**

**अवोचम्** = சொல்லி உள்ளேன்.
**அவோசம்**

இப்பொழுது புதிதாக நீ தவறுதல் ஒன்றும் செய்யவில்லை. ஆனாலும் உன்னிடம் அனாதிகாலமாக இருக்கும் அவித்யைதான் எல்லாவற்றிற்கும் மூல காரணம் என்று 48 - வது உபதேசத்தில் சொல்லியிருக்கிறேன் கூடஸ்தமான ஆத்ம ஸ்வரூபத்தை அநாத்மாக்களிலிருந்து பிரித்து ஸ்பஷ்டமாக நீ தெரிந்து கொள்ள வில்லை. இந்த அவித்யை என்ற அபராதம் உன்னிடம் எப்பொழுதும் கூடவே இருப்பதால்தான் எல்லாத் துன்பங்களும் ஏற்படுகின்றன. அவித்யையின் காரணமாக ஏற்படுவதால் இவை வாஸ்தவமல்ல. **(85)**

**(அவதாரிகை)** புத்தி விருத்திகளுக்கு ஸாக்ஷியாக இருப்பதால் ஆத்மா கூடஸ்தம் என்பதைக் காட்டி விட்டு இனி மூன்று அவஸ்தைகளுடன் ஸம்பந்தப் படாமல் அவைகளின் ஸாக்ஷியாக இருப்பதாலும் ஆத்மா கூடஸ்தன் என்பதை நிரூபணம் செய்கிறார். சிஷ்யன் கேட்கிறான்: -

## यदि भगवन्, सुषुप्त इव मम विक्रिया नास्ति, कथं स्वप्नजागरिते? ॥ ८६ ॥

**யதி³ ப⁴க³வன், ஸுஷுப்த இவ மம விக்ரியா நாஸ்தி,**
**கத²ம் ஸ்வப்னஜாக³ரிதே? ॥ 86 ॥**

**भगवन्** = பகவானே,
**ப⁴க³வன்**
**सुषुप्त इव** = ஸுஷுப்தியில்போல,
**ஸுஷுப்த இவ**
**मम** = எனக்கு,
**மம**
**विक्रिया** = விகாரம்,
**விக்ரியா**
**यदि नास्ति** = இல்லாதிருக்குமேயானல்,
**யதி³ நாஸ்தி**
**कथं** = எப்படி,
**கத²ம்**
**स्वप्नजागरिते** = (எனக்கு) ஸ்வப்னமும் ஜாக்ரத்நிலையும்
**ஸ்வப்னஜாக³ரிதே** ஏற்படுகின்றன.

ஸுஷுப்தி நிலையில் ஆத்மாவுக்கு ஒருவித விகாரமும் இருப்பதாகத் தெரியவில்லை. இதுபோல் எப்பொழுதுமே ஆத்மாவுக்கு விகாரமில்லை என்றிருக்குமானல் விகாரத்தை உண்டுபண்ணும் ஸ்வப்ன - ஜாக்ரத்நிலைகள் ஆத்மாவுக்கு எப்படி ஏற்படும்? **(86)**

## तं गुरुरुवाच - किंतु अनुभूयेते त्वया सन्ततम् ॥ ८७ ॥

**தம் கு³ருருவாச - கிந்து அனுபூ⁴யேதே த்வயா ஸந்ததம் ॥ 87 ॥**

**तं** = அந்த சிஷ்யனைப்பார்த்து,
**தம்**
**गुरुः** = ஆசார்யர்,
**கு³ரு:**
**उवाच** = சொன்னர்,
**உவாச**
**किंतु** = ஆனல்,
**கிந்து**
**त्वया** = உன்னல்,
**த்வயா**
**सन्ततं** = எப்பொழுதும்,
**ஸந்ததம்**

**अनुभूयेते** = அனுபவிக்கப்படுகின்றனவே!
**அனுபூ⁴யேதே**

ஸ்வப்னஜாகரிதங்கள் உன்னால் எப்பொழுதும் அனுபவிக்கப்படுகிறபடியால் அவைகள் உன் ஸ்வரூபத்தைச் சேர்ந்தவையல்ல. **(87)**

## शिष्य उवाच - बाढमनुभवामि, किंतु विच्छिद्य विच्छिद्य, न तु संततम् ॥ ८८ ॥

**ஶிஷ்ய உவாச - பா³ட⁴மனுப⁴வாமி, கிந்து விச்சி²த்³ய விச்சி²த்³ய,
ந து ஸந்ததம் ॥ 88 ॥**

**शिष्य** = சிஷ்யன்,
**ஶிஷ்ய**
**उवाच** = சொன்னான்.
**உவாச**
**बाढं** = நிச்சயமாக,
**பா³ட⁴ம்**
**अनुभवामि** = அனுபவிக்கிறேன்,
**அனுப⁴வாமி**
**किंतु** = ஆனால்,
**கிந்து**
**विच्छिद्य विच्छिद्य** = விட்டுவிட்டுத்தான்,
**விச்சி²த்³ய விச்சி²த்³ய**
**न तु संततम्** = எப்பொழுதுமல்ல.
**ந து ஸந்ததம்**

குரு **संततम् ஸந்ததம்** (எப்பொழுதும்) என்ற வார்த்தையை உபயோகப் படுத்தினார். அதன் கருத்தைத் தெரிந்து கொள்ளாமல் சிஷ்யன் கேட்கிறான். எனக்கு ஸ்வப்ன ஜாக்ர தனுபவம் எப்பொழுதும் இல்லையே மாறி மாறித்தானே அனுபவம் ஏற்படுகிறது. ஸ்வப்னத்தில் ஜாக்ரதனுபவம் இல்லை. ஜாக்ரத்தில் ஸ்வப்னானுபவம் இல்லை. ஸுஷுப்தியில் இவ்விரண்டின் அனுபவம் இல்லை. அவஸ்தைகள் மாறி மாறிவந்தாலும் அனுபவம் ஆத்மாவுக்கு எப்பொழுதும் இருக்கிறது என்பது குருவின் கருத்து. தொடர்ந்து அநேகம் பொருள்களைப் பார்த்துக்கொண்டு வரும் மனிதனுக்கு பார்க்கப்படும் பொருள்கள் மாறிக்கொண்டு வந்தபோதிலும் பார்வை தொடர்ந்து இருக்கிறதல்லவா! இதையே பின்னால் விளக்குகிறார். **(88)**

**गुरुराह - तर्हि आगन्तुके त्वेते न तवात्मभूते । यदि तवात्मभूते चैतन्यस्वरूपवत्स्वतः सिद्धे सन्तते एव स्याताम् । किंच स्वप्नजागरिते न तवात्मभूते, व्यभिचारित्वात्, वस्त्रादिवत् । न हि यस्य यत्स्वरूपं, तत् तद्व्यभिचारि दृष्टम् ।**

**स्वप्नजागरिते तु चैतन्यमात्तत्वात् व्यभिचरतः । सुषुप्ते चेत् स्वरूपं व्यभिचरेत् तत् नष्टं, नास्तीति बाध्यं वा स्यात्, आगन्तुकानामतद्धर्माणामुभयात्मकत्वदर्शनात्; यथा धनवस्त्रादीनां नाशो दृष्टः, स्वप्नभ्रान्तिलब्धानां त्वभावो दृष्टः ॥ ८९ ॥**

**கு³ருராஹ - தர்ஹி ஆக³ந்துகே த்வேதே ந தவாத்மபூ⁴தே । யதி³ தவாத்மபூ⁴தே சைதன்யஸ்வரூபவத்ஸ்வத꞉ ஸித்³தே⁴ ஸந்ததே ஏவ ஸ்யாதாம் । கிஞ்ச ஸ்வப்னஜாக³ரிதே ந தவாத்மபூ⁴தே, வ்யபி⁴சாரித்வாத், வஸ்த்ராதி³வத் । ந ஹி யஸ்ய யத்ஸ்வரூபம், தத் தத்³வ்யபி⁴சாரி த்³ருஷ்டம் । ஸ்வப்னஜாக³ரிதே து சைதன்யமாத்தத்வாத் வ்யபி⁴சரத꞉ । ஸுஷுப்தே சேத் ஸ்வரூபம் வ்யபி⁴சரேத் தத் நஷ்டம், நாஸ்தீதி பா³த்⁴யம் வா ஸ்யாத், ஆக³ந்துகாநாமதத்³த⁴ர்மாணாமுப⁴யாத்மகத்வத³ர்ஶனாத்; யதா² த⁴னவஸ்த்ராதீ³னாம் நாஶோ த்³ருஷ்ட꞉, ஸ்வப்னப்⁴ராந்திலப்³தா⁴னாம் த்வபா⁴வோ த்³ருஷ்ட꞉ ॥ 89 ॥**

| | | |
|---|---|---|
| **गुरुः**<br>**கு³ரு꞉** | = | குரு, |
| **आह**<br>**ஆஹ** | = | சொன்னர், |
| **तर्हि**<br>**தர்ஹி** | = | அப்படியானல், |
| **आगन्तुके**<br>**ஆக³ந்துகே** | = | புதிதாக நடுவில் வந்துள்ள, |
| **एते**<br>**ஏதே** | = | இவை, |
| **तव**<br>**தவ** | = | உன், |
| **आत्मभूते**<br>**ஆத்மபூ⁴தே** | = | ஆத்மஸ்வரூபத்தில் சேர்ந்தவையாக, |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **तव**<br>**தவ** | = | உன்னுடைய, |
| **आत्मभूते यदि**<br>**ஆத்மபூ⁴தே யதி³** | = | ஆத்மஸ்வரூபத்தில் சேர்ந்தவைகளாக இருக்குமானல், |
| **चैतन्यस्वरूपवत्**<br>**சைதன்யஸ்வரூபவத்** | = | சைதன்ய ஸ்வரூபம் போல, |
| **स्वतः सिद्धे**<br>**ஸ்வத꞉ ஸித்³தே⁴** | = | தானகவே உள்ளவைகளாகவும், |

**सन्तते एव** = எப்பொழுதும் உள்ளவைகளுமாகவே,
**ஸந்ததே ஏவ**
**स्याताम्** = இருக்கும்,
**ஸ்யாதாம்**
**किंच** = மேலும்,
**கிஞ்ச**
**वस्त्रादिवत्** = வஸ்திரம் முதலியவைபோல,
**வஸ்த்ராதி$^{3}$வத்**
**व्यभिचारित्वात्** = மாறிப்போய்விடுவதால்,
**வ்யபி$^{4}$சாரித்வாத்**
**स्वप्नजागरिते** = ஸ்வப்னமும் ஜாக்ரத்தும்,
**ஸ்வப்னஜாக$^{3}$ரிதே**
**न तवात्मभूते** = உன் ஆத்மஸ்வரூபமல்ல,
**ந தவாத்மபூ$^{4}$தே**
**यत्** = எது,
**யத்**
**यस्य** = எதனுடைய,
**யஸ்ய**
**स्वरूपं** = ஸ்வரூபமோ,
**ஸ்வரூபம்**
**तत्** = அது,
**தத்**
**तद्व्यभिचारि** = அதைவிட்டு மாறிப்போவதாக,
**தத்$^{3}$வ்யபி$^{4}$சாரி**
**न हि दृष्टम्** = பார்க்கப்பட்டதில்லை,
**ந ஹி த்$^{3}$ருஷ்டம்**
**स्वप्नजागरिते तु** = ஸ்வப்னஜாகரிதங்களோவெனில்,
**ஸ்வப்னஜாக$^{3}$ரிதே து**
**चैतन्यमात्तत्वात्** = சைதன்ய ஸ்வரூபத்திலிருந்து,
**சைதன்யமாத்தத்வாத்**
**व्यभिचरतः** = மாறிப்போய் விடுகின்றன,
**வ்யபி$^{4}$சரதஃ**
**सुषुप्ते** = ஸுஷுப்தியில்,
**ஸுஷுப்தே**
**स्वरूपं व्यभिचरेत् चेत्** = ஆத்ம ஸ்வரூபத்தை விட்டு மாறிவிடுமானால்,
**ஸ்வரூபம் வ்யபி$^{4}$சரேத் சேத்**

**तत्** = அது,

**தத்**

**नष्टं** = அழிந்ததாகவோ,

**நஷ்டம்**

**नास्तीति** = இல்லையென்று,

**நாஸ்தீதி**

**बाध्यं वा** = பாதிக்கப்படுவதாகவோ,

**பா³த்⁴யம் வா**

**स्यात्** = ஆகும்,

**ஸ்யாத்**

**आगन्तुकानां** = நடுவில் வந்துள்ள,

**ஆக³ந்துகானாம்**

**अतद्धर्माणां** = அதனுடையதல்லாத தர்மங்களுக்கு,

**அதத்³த⁴ர்மாணாம்**

**उभयात्मकत्वदर्शनात्** = இரண்டுவிதமாக இருப்பதை பார்த்திருக்கிற

**உப⁴யாத்மகத்வத³ர்ஶனாத்** படியால்,

**यथा** = எவ்வாறு,

**யதா²**

**धनवस्त्रादीनां** = பணம், ஆடை முதலியவைகளுக்கு,

**த⁴னவஸ்த்ராதீ³னாம்**

**नाशः** = அழிவு,

**நாஶ:**

**दृष्टः** = காணப்பட்டிருக்கிறதோ,

**த்³ருஷ்ட:**

**स्वप्नभ्रान्तिलब्धानां तु** = ஸ்வப்னத்திற்கும், ப்ராந்தியால் ஏற்பட்ட

**ஸ்வப்னப்⁴ராந்திலப்³தா⁴னாம் து** பொருள்களுக்குமோவெனில்,

**अभावः** = பாதம் (மறைவு)

**அபா⁴வ:**

**दृष्टः** = பார்க்கப் பட்டிருக்கிறதோ (அதுபோல)

**த்³ருஷ்ட:**

உன்னிடத்தில் மாறி மாறி வந்து போய்க்கொண்டிருக் கிற ஜாக்ரத் - ஸ்வப்ன அவஸ்தைகள் உன் ஸ்வரூபத்தில் சேர்ந்தவையல்ல. உன் ஸ்வரூபத்தில் சேர்ந்திரு க்குமானல் சைதன்யம் போல் எப்பொழுதும் உன்னிடம் இருக்குமே தவிர மாறி மாறிவராது மேலும் ஸுஷுப்தியில் சைதன்யத்தைவிட்டு இரண்டுமே விலகிவிடு கின்றன. உன்னிடமுள்ள பணம், ஆடை முதலியவை அழிந்துபோவது போலவும், நீ ஸ்வப்னத்தில் காணும் பொருள்கள் மறைந்து போவது போலவும் உன்னை விட்டு

இரண்டு அவஸ்தைகளுமே விலகிச்செல்வதால் அவை உன்னைச் சேர்ந்தவை அல்ல. 89)

(**அவதாரிகை**) சிஷ்யன் கேட்கிறான்: -

**नन्वेवं भगवन् चैतन्यस्वरूपमपि आगन्तुकं प्राप्तम्, स्वप्नजागरितयोरिव सुषुप्ते अनुपलब्धेः ।**
**अचैतन्यस्वरूपो वा स्यामहम् ॥ ९० ॥**

**நன்வேவம் ப⁴க³வன் சைதன்யஸ்வரூபமபி ஆக³ந்துகம் ப்ராப்தம், ஸ்வப்ன ஜாக³ரிதயோரிவ ஸுஷுப்தே அனுபலப்³தே⁴: ।**
**அசைதன்யஸ்வரூபோ வா ஸ்யாமஹம் ॥ 90 ॥**

| | | |
|---|---|---|
| **भगवन्** **ப⁴க³வன்** | = | குரோ! |
| **नन्वेवं** **நன்வேவம்** | = | இப்படியானால், |
| **चैतन्यस्वरूपमपि** **சைதன்யஸ்வரூபமபி** | = | சைதன்ய ஸ்வரூபமும், |
| **आगन्तुकं प्राप्तम्** **ஆக³ந்துகம் ப்ராப்தம்** | = | நடுவில் வந்து போகும் தர்மமாக ஆகும், |
| **सुषुप्ते** **ஸுஷுப்தே** | = | ஸுஷுப்தியில், |
| **स्वप्नजागरितयोरिव** **ஸ்வப்னஜாக³ரிதயோரிவ** | = | ஸ்வப்னம், ஜாகரிதம்போல, |
| **अनुपलब्धेः** **அனுபலப்³தே⁴:** | = | சைதன்யமும் தெரியாதபடியால்; |
| **वा** **வா** | = | அல்லது, |
| **अहं** **அஹம்** | = | நான், |
| **अचैतन्यस्वरूपः** **அசைதன்யஸ்வரூப:** | = | சைதன்யமில்லாத (ஜடமான) ஸ்வரூபமுள்ளவனாக, |
| **स्याम्** **ஸ்யாம்** | = | ஆவேன். |

பார்வை, கேள்வி முதலான ஞானம்தான் ஸ்வப்ன - ஜாகரிதம் என்பது. பார்வை, கேள்வி முதலான ஞானத்துடன் கூடியது சைதன்யம். பார்வை, கேள்வி முதலான ஞானம் புதிதாக வந்து போவதால் அதனுடன் கூடிய சைதன்யமும்

ஆகந்துகமாக ஆகும். மேலும் ஸ்வப்னஜாகரிதத்தைப் போல ஸுஷுப்தியில் சைதன்யத்தையும் காணவில்லை. ஆதலால் ஆத்மா ஜடம் என்றுதான் சொல்ல வேண்டி வரும். **(90)**

**(அவதாரிகை)** குரு கூறுகிறார்: -

**न, पश्य, तदनुपपत्तेः । चैतन्यस्वरूपं चेदागन्तुकं पश्यसि, पश्य नैतद्वर्षशतेनाप्युपपत्त्या कलयितुं शक्नुमो वयम्, अन्यो वा अचैतन्योऽपि । तस्य संहतत्वात्पारार्थ्यमनेकत्वं नाशित्वं च न केनचिदुपपत्त्या वारयितुं शक्यम्, अस्वार्थस्य स्वतः सिध्यभावादित्यवोचाम । चैतन्यस्वरूपस्य त्वात्मनः स्वतः सिद्धेरन्यानपेक्षत्वं न केनचिद्वारयितुं शक्यम्, अव्यभिचारात् ॥ ९१ ॥**

**ந, பஶ்ய, தத³னுபபத்தே: । சைதன்யஸ்வரூபம் சேதா³க³ந்துகம் பஶ்யஸி, பஶ்ய நைதத்³வர்ஷஶதேனாப்யுபபத்த்யா கலயிதும் ஶக்னுமோ வயம், அன்யோ வா அசைதன்யோ(அ)பி । தஸ்ய ஸம்ஹதத்வாத்பாரார்த்²யமனேகத்வம் நாஶித்வம் ச ந கேனசிது³பபத்த்யா வாரயிதும் ஶக்யம், அஸ்வார்த²ஸ்ய ஸ்வத: ஸித்⁴யபா⁴வாதி³த்யவோசாம । சைதன்யஸ்வரூபஸ்ய த்வாத்மன: ஸ்வத: ஸித்³தே⁴ரன்யானபேக்ஷத்வம் ந கேனசித்³வாரயிதும் ஶக்யம், அவ்யபி⁴சாராத் ॥ 91 ॥**

| | | |
|---|---|---|
| **न** <br> **ந** | = | இல்லை, |
| **पश्य** <br> **பஶ்ய** | = | ஆலோசித்துப்பார், |
| **तदनुपपत्तेः** <br> **தத³னுபபத்தே:** | = | அது (சைதன்யம் ஆகந்துகம் என்பது) உபபந்நமாக இல்லாததால், |
| **चैतन्यस्वरूपं** <br> **சைதன்யஸ்வரூபம்** | = | சைதன்ய ஸ்வரூபத்தை, |
| **आगन्तुकं** <br> **ஆக³ந்துகம்** | = | ஆகந்துகமாக (நடுவில் வந்ததாக) |
| **पश्यसि चेत्** <br> **பஶ்யஸி சேத்** | = | நீ பார்க்கிறயே யானல், |
| **पश्य** <br> **பஶ்ய** | = | பார், |
| **वर्षशतेनापि** <br> **வர்ஷஶதேனபி** | = | நூறு வருஷங்களானலும், |
| **वयं** <br> **வயம்** | = | நாங்கள், |

| | | |
|---|---|---|
| **एतत्**<br>**ஏதத்** | = | இதை, |
| **उपपत्त्या कलयितुं**<br>**உபபத்த்யா கலயிதும்** | = | யுக்திக்குப் பொருத்தமுள்ளதாகச் செய்வதற்கு, |
| **न शक्नुमः**<br>**ந ஶக்னுமஃ** | = | முடியாது, |
| **अन्यः**<br>**அன்யஃ** | = | வேறு, |
| **अचैतन्योऽपि वा**<br>**அசைதன்யோ(அ)பி வா** | = | மூடனும் (முடியாது), |
| **तस्य**<br>**தஸ்ய** | = | அந்த புத்தி விருத்தி ரூபமான ஞானத்திற்கு, |
| **संहतत्वात्**<br>**ஸம்ஹதத்வாத்** | = | பிற வஸ்துவுடன் சேர்ந்திருப்பதால், |
| **पारार्थ्यं**<br>**பாரார்த்2யம்** | = | பிறரின் பயனுக்காக இருக்கும் தன்மையையும், |
| **अनेकत्वं**<br>**அனேகத்வம்** | = | அழிந்துபோகும் தன்மையையும், |
| **नाशित्वं च**<br>**நாஶித்வம் ச** | = | பலவாக இருக்கும் தன்மையையும், |
| **केनचित्**<br>**கேனசித்** | = | ஒருவனுலும், |
| **उपपत्त्या**<br>**உபபத்த்யா** | = | யுக்தியினுல், |
| **वारयितुं**<br>**வாரயிதும்** | = | தடுப்பதற்கு, |
| **न शक्यम्**<br>**ந ஶக்யம்** | = | முடியாது, |
| **अस्वार्थस्य**<br>**அஸ்வார்த2ஸ்ய** | = | தனக்காக இல்லாமல் பிறனுக்காக இருக்கும் பொருளுக்கு, |
| **स्वतः सिध्यभावात्**<br>**ஸ்வதஃ ஸித்4யபா4வாத்** | = | தானுக உள்ளது என்பது இல்லாததால், |
| **इति अवोचाम**<br>**இதி அவோசாம** | = | என்று சொல்லியுள்ளோம், |
| **चैतन्यस्वरूपस्य**<br>**சைதன்யஸ்வரூபஸ்ய** | = | சைதன்யஸ்வரூபமான, |

